# கல்கி

## பொருளடக்கம்

### அரசியல்



### கதைகள்



### கட்டுரைகள்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



பின்னியின் **சூட்டிங்** அணிந்து








# வெங்கடேஷ் வஸ்திராலயா

ரீடெய்ல் ஷோரூம்கள்—

ஹைகோர்ட் எதிரில் & 2 தம்புசெட்டித் தெரு, மதராஸ் 1

**ஷோ ரூம் நெ. 1** இங்கு நாங்கள் பெங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்லின் உற்பத்தியான துணிகளை மட்டுமே விற்கிறோம்.

**ஷோ ரூம் நெ. 2** இங்கு நாங்கள் பக்கிங்ஹாம் & கர்னாடிக் மில்லில் உற்பத்தியான துணிகளைமட்டுமே விற்கிறோம்.

**ஷோ ரூம் நெ. 3** இங்கு நாங்கள் பின்னி மில்லின் உற்பத்தியான துணிகளையும் மற்றும் இதர உள்நாட்டு ஏக ஜவுளிகளையும் விற்கிறோம்.



மலர் 17 | தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற | விளம்பி ௵
இதழ் 44 | தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார் | வைகாசி 19

# ராணுவ ஆட்சி

காலம் வெகு வேகமாக மாறி வருகிறது! ஆனாலும் இதைச் சற்றும் உணராமல் பழைய போக்கிலேயே நடந்து கொள்ளும் மக்களைப் பார்க்கும்போது பரிதாபமாக இருக்கிறது!

அதிலும் ஒரு காலத்தில் தீவிர முன்னேற்றக் கருத்துக்களுக்கும் சுதந்திர உணர்ச்சிக்கும் முன்னணியில் நின்ற ஒரு நாடு மிகவும் பிற்போக்கான முறையில் நடந்து கொள்வதைப் பார்க்கும்போதுதான் வியப்பாக இருக்கிறது!

பிரஞ்சு நாட்டைத்தான் குறிப்பிடுகிறோம். உலக மக்களுக்கே சுதந்திரத்தைப் பற்றியும், சமத்துவத்தைப் பற்றியும், சகோதரத்துவத்தைப் பற்றியும் முதன் முதலில் போதித்த நாடு பிரான்ஸ். இப்பொழுது அந்த நாடு, "சுதந்திரமாவது ஒன்றாவது!" என்று கூறிக் கொண்டு பயங்கர அடக்குமுறை ஆட்சியை நடத்துகிறது.

அடிமைப்பட்ட நாடுகளெல்லாம், இரண்டாவது உலக மகாயுத்தத்துக்குப் பிறகு ஒன்றன்பின் ஒன்றாகச் சுதந்திரமடைந்து வருகின்றன. இந்த வேளையில் அடக்குமுறையிலும் மிகப் பயங்கரமான அடக்குமுறையில் பிரான்ஸ் ஈடுபடத் துணிந்து விட்டது என்றால் என்னவென்று சொல்வது!

* * * *

பிரான்ஸ் தேசத்தின் ஆட்சிக்குட்பட்ட நாடு ஆப்பிரிக்கா கண்டத்திலுள்ள அல்ஜீரியா; அல்ஜீரிய மக்கள் பெரும்பான்மையோர் முஸ்லிம் மக்கள். அவர்கள் சில ஆண்டுகளாகப் பிரஞ்சு ஆதிக்கத்திலிருந்து விடுபட வேண்டும் என்று பெரும் கிளர்ச்சி செய்து வருகிறார்கள்.

ஆனால் அல்ஜீரியாவில் ஆறில் ஒரு பகுதியினர் பிரஞ்சு மக்கள். இந்த மக்கள் அல்ஜீரியாவுக்குச் சுதந்திரமளிக்கக் கூடாது என்று பிடிவாதமாக இருக்கிறார்கள்!

பிரான்ஸ் தேசத்தில் நாளுக்கொரு ஆட்சி நடைபெறுகிறது! நாளுக்கு ஒரு கட்சி அதிகாரத்துக்கு வருகிறது. அதனால் அல்ஜீரியா மக்களின் சுதந்திரப் போராட்டத்தை ஒடுக்க முடியாத நிலையில் இருக்கிறது. அந்தச் சர்க்கார்களுக்குப் பகிரங்கமாக அல்ஜீரியாவுக்குச் சுதந்திரமளிக்க முடியாது என்று சொல்லவும் விருப்பமில்லை. இன்னும் ஆதிக்கம் செலுத்தவே பிரான்ஸ் தேசம் விரும்புகிறது. இதை வெளிப்படையாக இந்தக் காலத்தில் சொல்ல முடியுமா? இதைச் சொல்லாமலும், விழுங்காமலும் பிரஞ்சு சர்க்கார்கள் இதுவரை இருந்திருக்கின்றன.

இதனாலேயே பிரஞ்சு சர்க்கார்கள் அல்ஜீரியாவுக்குப் பூரண சுதந்திரம் அளிக்காமலும் சுதந்திரப் போராட்டத்தைப் பலமாக ஒடுக்காமலும் இருந்து வந்திருக்கின்றன.

இந்த இரண்டுங்கெட்டான் நிலைமையில் எத்தனை நாட்கள் இருப்பது என்று, அல்ஜீரியாவிலிருக்கும் பிரஞ்சு ராணுவத்தினர் அல்ஜீரிய ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டு விட்டனர். இனி பலமான அடக்குமுறை அல்ஜீரியாவில் நடைபெறும்.

இதற்கு உடந்தையாக இருக்கப் பிரஞ்சு சர்க்காருக்கு மனமிருந்த போதிலும் பகிரங்கமாக ராணுவ ஆட்சிக்கு விட்டுக் கொடுக்க மனமில்லை. ஆனபடியால் பிரஞ்சு சர்க்கார் ராணுவக் குழப்பத்தை அடக்க முயன்று வருகிறார்கள்.

# கட்டுக்கடங்காத குதிரை !




*பிரான்ஸின் ஜனநாயக ஆட்சி முடிந்து சர்வாதிகார ஆட்சி தோன்றிவிடும் போலிருக்கிறது!*

இரண்டாவது யுத்த காலத்தில் பிரான்ஸின் தளபதியாக இருந்தவர் டி காால். இவருடைய சீடர்களே இப்பொழுது அல்ஜீரியாவில் ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டிருக்கின்றனர்.

இப்பொழுது பாரிஸிலும் டி காால் தாம் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளத் தயார் என்று அறிவித்திருக்கிறார். இவருக்குப் பிரான்ஸிலுள்ள கம்யூனிஸ்ட் கட்சி தவிர ஏறத்தாழ எல்லாக் கட்சிகளுமே அனுசரணையாக இருக்கின்றன. கம்யூனிஸ்ட் பத்திரிகைதான் டி காலின் அறிவிப்பைக் கண்டித்து எழுதியிருக்கிறதே தவிர, மற்றப் பத்திரிகைகள் எல்லாம் மௌனமாக இருக்கின்றன. இதன் பொருள் என்ன? பிரான்ஸ் அல்ஜீரியாவில் ராணுவ ஆட்சியை வரவேற்கிறது என்பதுதானே?

கார்ஸிகா தீவில் சில குழப்பங்கள் நிகழ்ந்திருக்கின்றன. அல்ஜீரியாவில் நடந்திருக்கும் ராணுவப் புரட்சி நியாயமானது; கார்ஸிகாவில் நடைபெற்றது நியாயமல்ல என்று பிரஞ்சு முதன் மந்திரி சொல்கிறார். இந்தத் தாரதம்யப் பேச்சின் பொருள் என்னவென்றால் அல்ஜீரியாவின் ராணுவ அடக்கு முறையைப் பிரஞ்சு அரசாங்கம் மனப்பூர்வமாக அங்கீகரிக்கிறது என்பதுதான்.

ஆயினும் தற்போது பிரதமராக இருக்கும் பிளிம்லின், டிகாலின் முயற்சியால் ஏற்படக் கூடிய உள்நாட்டுக் கலவரங்களை ஒடுக்க விசேஷ அதிகாரங்களைப் பாரிஸ் சட்டசபையினிடமிருந்து கோரிப் பெற்றிருக்கிறார்.

இதைப் பார்த்து, ராணுவ ஆட்சிக்குக் கடுமையான எதிர்ப்பு இருக்கிறது என்று நினைக்கலாம். ஆனால் பிரான்ஸ் தேசத்து ஜனநாயகக் கட்சிகள் உள்ளுக்குள் ஆதரவு அளிக்கின்றன. தங்களால் செய்ய முடியாததை அல்ஜீரியாவிலுள்ள ராணுவ அதிகாரிகள் செய்தால் நல்லதுதானே என்று நினைக்கின்றன.

இந்த நிலையில் அமெரிக்காவும் இங்கிலாந்தும் 'பிரான்ஸின் உள்நாட்டு விவகாரத்தில் தலையிட எங்களுக்கு ஏது உரிமை?' என்று கூறி விடும்!

அமெரிக்காவுக்குள் அடங்கிக் கிடக்கும் ஐ. நா. சபையும் தன்னால் ஒன்றும் செய்ய இயலவில்லை என்பதை ஓரிரு வார்த்தைகளில் சொல்லாமல் நூற்றுக்கணக்கான வார்த்தைகளில் சுற்றி வளைத்துச் சொல்லும்!

இப்படியிருக்கிறது மேற்கத்திய நாடுகளின் போக்கு!

# சரித்திரத்தை மாற்ற முடியாதா?

சமீபத்தில் சென்னையில் நடைபெற்ற இந்தி மொழி மகாநாட்டுக்கு நமது மதிப்புக்குரிய நண்பர் ஸ்ரீ க. சந்தானம் தலைமை வகித்தார். அவரது தலைமை உரையைப் படித்தவர்கள், இந்தி ஆதரவாளர்களாக இருந்தால் இந்திதான் வேண்டும் என்று ஸ்ரீ சந்தானம் சொல்வதாக நினைத்துக்கொண்டிருப்பார்கள். ஆங்கில ஆதரவாளர்களாக இருந்தால், 'நம் கட்சியைத்தான் பேசுகிறார்' என்று நினைத்துச் சந்தோஷப் பட்டிருப்பார்கள். இப்படி இரண்டு கட்சிக்காரர்களுக்கும் திருப்தியளிக்கும்படியாகப் பேசிவிட்டு, கடைசியில் ஒரு விஷயத்தைக் குறிப்பிட்டார். அச்சிட்ட தலைமையுரையில் இல்லாததை வெறும் வாய்மொழிப் பேச்சாக எடுத்துச் சொன்னார்.

''இந்தி இந்த நாட்டின் ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்பது நாற்பது ஆண்டுகளுக்கு முன்பே தீர்மானித்தாகி விட்டது. இப்பொழுது இந்தி வேண்டாம் என்பது நாற்பது வருஷத்திய சரித்திரத்தை மாற்றுவதாகும். சரித்திரத்தை மாற்றுவது என்பது சுலபமல்ல; அதிலும் நாற்பது வருஷத்திய சரித்திரத்தை மாற்றுவது என்பது முடியாத காரியம்!'' என்று சொன்னார். இந்த வாதத்தைக் கொஞ்சம் ஆராய்ந்து பார்க்கலாம்.

இந்தி நமது ஆட்சிமொழியாக வேண்டும் என்று நாற்பது வருஷங்களாகப் பிரசாரம் செய்து வரப்பட்டது. ஆனால் அது இன்று வரையில் எந்த ராஜ்யத்திலும் ஆட்சி மொழியாக இருக்கவில்லை; இந்தி பேசும் ராஜ்யங்களிலும்கூட இல்லை.

ஆனால் ஆங்கிலத்தின் சரித்திரம் என்ன? ஆங்கிலம் நம் நாட்டில் நூற்றைம்பது வருஷங்களாக ஆட்சி மொழியாக இருந்திருக்கிறது. சுதந்திரம் பெற்ற பிறகு பத்தாண்டுகளுக்கு மேலாக ஆங்கிலம் ஆட்சிமொழியாக இருந்து வருகிறது. ஆகவே, சரித்திரத்தை மாற்ற முடியாது என்ற ஸ்ரீ சந்தானத்தின் வாதத்தை ஏற்றுக் கொண்டாலும், நாற்பது வருஷத்துப் பிரசாரம் நூற்றைம்பது வருஷச் சரித்திரத்தை மாற்றிவிடவே முடியாது!

அந்நிய ஆட்சி ஒழிந்த பிறகு சுதந்திர ஆட்சியிலும் பத்துவருஷ காலமாக ஆங்கிலத்தை நம்முடைய சுதந்திர உணர்ச்சிக்குப் பழுதில்லாமல், கையாண்டு வந்திருக்கிறோம். இப்பொழுது இதை மாற்றுவானேன் என்பதுதான் கேள்வி.

"நீ சீர்திருந்த வேண்டும்!"





சென்ற வெள்ளிக்கிழமை 23ம்தேதி மாலை பெங்களூரில் ஓர் இனிய விழா நடைபெற்றது. ராஜாஜி எழுதிய சக்கரவர்த்தித்திருமகனின் கன்னட மொழிபெயர்ப்பு நூல் அன்று வெளியிடப் பட்டது. இந்த விழாவுக்கென்று ராஜாஜி பெங்களூர் விஜயம் செய்து விழாவில் கலந்து கொண்டார். விழாவுக்குப் பெங்களூர் நகரப் பிரமுகர்கள் ஏராளமாகத் திரண்டு வந்திருந்தார்கள். மைசூர் புதி முதன் மந்திரி திரு ஜெட்டியும் விஜயம் செய்திருந்தார். பிரசுர கர்த்தர் ஸ்ரீ ஜி. சீனிவாசன் விழாவில் ராஜாஜிக்கு முதல் பிரதியை அளிப்பதைப் படத்தில் காணலாம். இவ்விழாவைப் பற்றிய கட்டுரை அடுத்த இதழில் வெளியாகும்.

அதுமட்டுமல்ல ! மத்திய சர்க்காரின் கல்வி இலாக்கா, இன்று ஆங்கிலத்தில் வழங்கும் முக்கியமான சொற்களுக்குத் தகுதியான இந்திச் சொற்களை உண்டாக்கும் பணியில் ஈடு பட்டிருப்பதாகவும், பாரத நாட்டின் எல்லா மொழிகளிலிருந்தும் வார்த்தைகள் எடுத்துக் கொண்டிருப்பதாகவும் கூறுகிறது. இவ்வளவும் கூறிவிட்டு, இன்னும் இரண்டரை லட்சம் வார்த்தைகளுக்குச் சரியான இந்தி வார்த்தைகள் கண்டுபிடித்தாக வேண்டும் என்று சொல்கிறது !

உலகில் எங்கேயாகிலும் ஒரு பாஷை இப்படி நாற்காலியில் உட்கார்ந்து வளர்க்கப் பட்டதாகக் கேள்விப்பட்ட துண்டா? பாஷை என்பது மக்கள் பேச்சிலும், வழக்கிலும், எழுத்திலும் பழகி நாளடைவில் வளர வேண்டியதொன்று. ஆனால் நமது சர்க்கார், ஆராய்ச்சிக் கூடத்தில் 'செயற்கை அரிசி' செய்வது போல் செய்யப் பார்க்கிறார்கள்.

பண்டிதஜவாஹர்லால் நேருவின் தாய்மொழி, ஹிந்தி. ஆனால் சர்க்கார் சிருஷ்டித்து வரும் புது ஹிந்தி, அவருக்கே ஒரு அட்சரம் கூடப் புரிவதில்லை என்று ரொம்பவும் குறைப்படுகிறார் !

இந்தி தாய்மொழியாகப் பெற்றவர்களுக்கே புரிய முடியாத, முற்றும் புதிதானதோர் பாஷையை, இந்தி அறவே தெரியாத மக்கள் மீது திணிக்கப் பார்ப்பானேன் ?

நன்றாகப் பயன்பட்டு வரும்ஒருஉலகமொழியை அறவே நீக்கிவிட்டு, யாருக்கும் பயன்படாத ஒரு பாஷையைத் திணிப்பானேன் ? இவையாவும் சரித்திரம் கண்டும் கேட்டும் இராத அதிசயங்கள்.

ஒவ்வொரு ராஜ்யத்திலும், மக்கள் அடுத்த ராஜ்யத்தின் பாஷையைப் படிப்பதும் எழுதுவதும் நியாயமாகும். வியாபாரம் முதலிய காரியங்களுக்காக இந்தி படிப்பதும் நல்லதேயாகும். ஆனால் அரசியலில் இந்தியைத் திணிப்பது இந்தி பேசாத மக்களுக்கு இழைக்கும் அநீதியாகும். பாரதமக்களில் ஒருசாரார் எல்லா வசதிகள் பெறவும், மற்றொரு சாரார் எல்லா விதங்களிலும் இழிவுபடுத்தப்படவும் உடந்தையாக இருக்க யாரால் முடியும் ?

எதிர்கால தமிழ் மக்கள், இந்தி ஆட்சி மொழி யாக்கப்படுவதால் பலவித அநியாயங்களுக்கு உட்படுத்தப்படுவார்கள் என்று மிகத் தெளிவாகத் தெரிந்தபோது, எதிர்க்காமலிருக்க முடியுமா? இந்தக் கிளர்ச்சிக்கு எதிராகச் சரித்திரமேயல்ல, இமயமலையே வந்தாலும் எதிர்த்தே தீரவேண்டும்.

# அருள்வாக்கு

ஞானத்தைக் கொண்டு ஜனன மரணங்களைத் தவிர்த்தால்தான் சாசுவதமான சாந்தி கிடைக்கிறது. அத்தகைய உயர்ந்த சாந்தியை அடையும் போது பரமாத்மாவுடன் ஐக்கியமாகி விடுகிறோம். பரமாத்மாவுக்குக் காலம், தேசம், உரு ஆகிய வரையறை ஏதும் கிடையாது. ஆனால், இவ்வுயர் நிலையை நாம் அடையப் பரமாத்மாவின் ஏதாகிலும் ஒரு சொரூபத்தைத் தியானம் செய்து அனுபவத்தைப் பெருக்கிக் கொள்ள வேண்டியிருக்கிறது. இதில் இடது காலைத் தூக்கியபடி, மூன்றாம் கண்ணுடன் சந்திர கலையைத் தலையில் அணிந்துள்ள ஈசுவர சொரூபத்தைத் தியானிப்பதில் விசேஷம் இருக்கிறது. காலன் அல்லது மரண தேவதை நமது உடல்களை அழிக்கிறவன். காலம் என்பது சாமான்யமாகக் காலத்தையும் குறிக்கும். காலம் அழிவுக்கும் காரணமாகிறது. அனுகூலத்தையும் உண்டுபண்ணுகிறது. ஈசுவரன் தமது இடது காலால் காலத்தை அடக்கி அதை ஜெயிக்கிறார். உயர்த்தப்பட்ட இடது கால், ஈசுவரன் காலத்தினால் கட்டுப்பட்டவன், அல்லது மரணத்தினால் பாதிக்கப்படுபவன் அல்ல என்ற உண்மையை உணர்த்துகிறது. அவர் அனாதி. காமம் அல்லது ஆசைகள் பிறப்புக்குக் காரணம். ஈசுவரன் தமது நெற்றிக் கண்ணாகிய மூன்றாம் கண்ணால் காமத்தைக் கொளுத்தினார். ஈசுவரனின் மூன்றாவது கண் அவர் பற்றற்றவர் என்பதைக் குறிக்கிறது. நம் கண்களைக் கொண்டு வெளி விஷயங்களையே பார்க்கிறோம். ஆனால், இந்தப் புலனை அடக்கி உட்புறம் செலுத்தி உள்ளிருக்கும் அந்தராத்மாவை அனுபவிக்க வேண்டுமானால் இதற்கு ஞானம்தான் முக்கிய சாதனம். ஈசுவரனின் மூன்றாம் கண் இந்த ஞானத்தையும் குறிக்கிறது. ஞானம் பிறந்தால் சாந்தியை மேன்மேலும் அனுபவிக்கிறோம். இந்தச் சாந்தியைக் காட்டுவதுதான் ஈசுவரன் முடியிலுள்ள சந்திர கலை. சந்திரனின் அமிருதத்துக்கு ஒத்த குளிர்ந்த கிரணங்களைப் போல் சாந்தியளிப்பது வேறென்ன இருக்கிறது? அத்துடன் ஈசுவரன் தம் சடையில் கங்கையும் வைத்துக் கொண்டிருக்கிறார். இந்த லோகத்தை அவரே ரட்சிக்கிறார் என்பதை இது காட்டுகிறது.

இவ்விதம் தூக்கிய இடது கால், நெற்றிக் கண், சந்திர கலை ஆகியவற்றின் பூரண தத்துவங்களையும் உணர்ந்து, அவற்றுடன் கூடிய ஈசுவரனைத் தியானம் செய்தால் அபமிருத்தியுவையும் இதர தோஷங்களையும் போக்கடித்து விடலாம். சாசுவதமான சாந்தியையும் ஆனந்தத்தையும் அடையலாம்.

—ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடி பீடம்.

# இலங்கையில் சாத்வீகப் போர்!

இலங்கைத் தமிழரசுக் கட்சியினர் இந்த ஆண்டு ஆகஸ்ட் மாதம் இருபதாம் தேதியி லிருந்து சாத்துவீகப் போர் காந்திய முறையில் நடத்தப் போவதாக அறிவித்திருக்கிறார்கள்!

இந்த முடிவு இலங்கை வவுனியாவில் சென்ற வாரம் திரு என். ஆர். ராஜவரோதயம் எம். பி. தலைமையில் மூன்று நாட்கள் நடை பெற்ற வருடாந்திர மகாநாட்டின் பயனாகும்.

இந்த மகாநாட்டில், இலங்கை சர்க்கார் சமஷ்டி சர்க்காராகத் தொழிற்பட வேண்டும் என்று வற்புறுத்தி யிருக்கிறார்கள்.

இலங்கை சுதந்திரம் பெற்றதிலிருந்து, இலங்கைவாழ் பழங்குடி மக்களான தமிழர் களின் உரிமைகள் ஒன்றன்பின் ஒன்றாகப் பறிக்கப்பட்டு வருகின்றன. அது மட்டுமல்ல; தமிழர்கள் வாழ்வு வாழத் தகுந்ததாக இல்லா மல் போய் வருகிறது.

தமிழர்கள் நடத்தும் கடைகளில், மற்ற வர்கள் சென்று வியாபாரம் செய்ய விடாமல் தடுத்து வருகின்றனர் வெறி பிடித்த சிங்களவர். கொடுமைப் படுத்துவது முதலிய பலவித இன்னல்களுக்குத் தமிழர்களைச் சிங்கள வர்கள் உள்ளாக்கி வருகின்றனர். இதைச் சிங்கள சர்க்கார் பார்த்துக் கொண்டு சும்மா இருக்கின்றது.

இவற்றையெல்லாம் பார்த்துத் தமிழரசுக் கட்சியினர் மத்திய ஆட்சிக்கு உட்பட்ட தனி மாகாணங்கள் ஏற்படுத்தும்படி சிங்கள சர்க் காரைக் கோரி வருகிறார்கள்.

இலங்கை சுதந்திரம் பெற்றதினால் ஏற்படக் கூடிய பயன்களைச் சிங்களவர்கள் மட்டும் அனுபவிக்க வேண்டும் என்பது என்ன? தமிழர்களுக்கும் பூரண உரிமை யுண்டு.

இலங்கையின் சுதந்திரப் போராட்டத்தில் சிங்களவர்களுடன் தமிழர்களும் சேர்ந்து நின்று போராடி யிருக்கிறார்கள். அதனால் அவர்கள் கோரிக்கையில் நியாயமிருக்கிறது.

சிங்கள சர்க்காரும் ஒன்று உணர வேண்டும். எல்லா அதிகாரங்களையும் மத்தியில் சேர்த்து வைத்துக் கொண்டு நாடு முழுவதற்கும் ஒரே ஆட்சி நடத்துவதில் எவ்வளவோ இடை யூறுகள் உண்டு. சுதந்திரத்தின் பயனை எல்லா மக்களுமே அனுபவிக்க விரும்புவார்கள். அதனால் ஆட்சிப் பொறுப்பைப் பல் வேறு மாகாணங்களாகப் பிரித்து மக்களிடம் ஒப் படைப்பதில் நல்ல பயன் உண்டு. நாட்டில் அமைதியையும் திருப்தியையும் நிலைநாட்ட இந்த முறை சிறந்த முறையாகும்.

தமிழரசுக் கட்சியினர் இந்த லட்சியத்துக் காக எந்தப் போராட்டம் துவக்கினாலும், காந்திய முறையில் உறுதியாக நின்று சாத் வீகப் போரையே நடத்துவதாகத் தீர்மானித் திருப்பது பாராட்டுக்குரியதாகும்.

# வள்ளுவர் விழா

வீட்டினுள்ளே தலைவனும் தலைவியும் உலகையே மயக்கக்கூடிய அந்த இன்ப நேரத்தில் உல்லாசமாகப் பேசிக் கொண்டிருந் தார்கள். மலர் தொடுத்துக் கொண்டே தன் நாயகனுடன் சல்லாபித்துக் கொண் டிருந்தாள் அவள். தான் தொடுக்கும் இந்த மாலை தனது கூந்தலை அலங்கரிக்கப் போகிறதா? அல்லது தன் காதலனின் கழுத்தை அணி செய்து அவன் பரந்த மார் பில் தவழப் போகிறதா? என்று எண்ணை மிட்டாள்.

வாசலில் யாரோ அழைத்தார்கள், இந்த வேளையில்! "யாரடா அவன்! நேரம், போது கிடையாதா!" என்று அலுத்துக் கொள்ள வில்லை தலைவன். எழுந்து ஓடினான். மலர்ந்த முகத்துடன் அதிதியை 'வரவேணும் வர வேணும்' என்று வரவேற்றான். அதிதி அவன் முகத்தைப் பார்த்தார். அவன் முகத்தில் சிறிதளவும் அருவருப்பு இல்லை. அளவு கடந்த மகிழ்ச்சியோடுதான் தம்மை வர வேற்கிறான் என்று அறிந்து கொண்டார். அவர் மனம் நிம்மதி அடைந்தது. தம்மை எதிர்கொண்டு அழைத்தவனின் புருவங்கள் சிறிது நெரித்திருந்தால்கூட அதிதி குழைந்து போயிருப்பார்!

மலர்களில் எத்தனையோ வகை. சில மலர்கள் கையில் எடுத்து, முகர்ந்து நாரில் தொடுத்தாலும் அப்படியே அழகாக இருக் கின்றன. ஆனால் 'அனிச்சம்' என்ற மலர் முகர்ந்து பார்த்தாலே போதும், வாடிவிடும்!

வீட்டை நோக்கி வரும் அதிதிகளும் அப் படித்தான். அவர்களை சர்வ ஜாக்கிரதையாக உபசரிக்க வேண்டும் என்கிறார் வள்ளுவர்.

**மோப்பக் குழையும் அனிச்சம்—முகம்திரிந்து நோக்கக் குழையும் விருந்து**

அதிதிகளை வரவேற்க வேண்டிய முறையை இரண்டே வாக்கியங்களில் சொல்லி விட்டார் தெய்வப் புலவர் வள்ளுவர்.

இந்தக் குறளைத்தான் இவ்வார அட்டைப் படத்தில் வண்ண ஓவியமாகத் தீட்டி யிருக் கிறார் கலைஞர் வினு. தெய்வப் புலவரைத் தமிழ்கூறும் நல்லுலகில் உள்ள மக்களெல்லாம் இந்த வாரம் வள்ளுவர் விழா எடுத்து வழி படப் போகிறார்கள். தென்காசி திருவள்ளுவர் கழகத்தார் இந்த வருடம் முப்பத்தோராவது திருக்குறள் விழாவை வழக்கம்போல் வெகு விமரிசையாகக் கொண்டாட ஏற்பாடு செய் திருக்கிறார்கள். நாமோ, வாரந்தோறும் 'வள்ளுவர் வாசகம்' வெளியிட்டு விழா கொண்டாடி வருகிறோம். வள்ளுவரைப் போன்ற மகான் இன்று நமக்கு வள்ளுவர் குறளிலுள்ள நயங்களை எல்லாம் எடுத்துச் சொல்கிறார். இது நாம் பெற்ற பேறு!

# புனர்விசாரணை வேண்டும்

ரஜனி

கொழும்பு, மே, 20உ.

இலங்கையிலுள்ள இந்திய வம்சாவளியினர்களில் பல்லாயிரக்கணக்கானவர்களின் பிரஜாவுரிமை மனுக்களை அரசாங்கம் எவ்வளவு அநியாயமாக நிராகரித்துள்ளன வென்பதை இவ்வாரம் வெளியாகியிருக்கும் பிரிவி கவுன்ஸில் தீர்ப்பு அறிவுறுத்திக் காட்டியிருக்கிறது. செலாவணிக் கட்டுப்பாடு திட்டம் இங்கு அமுலுக்கு வந்தபொழுது இந்திய வம்சாவளியினர் எக்காரணத்தை முன்னிட்டேனும் இந்தியாவுக்குப் பணமனுப்ப நேரிட்டால் தங்களை இலங்கையின் தற்காலிகவாசி யென்று எழுதிக் கொடுக்குமாறு கோரப்பட்டார்கள். ஒரு புத்தகம் தருவிக்கச் சிறு தொகையை அனுப்புவதாயிருந்தால்கூட இப்படி எழுதிக் கொடுப்பதைத் தவிர வேறு வேறு வழியில்லாமல் இருந்தது. இதைப் பலர் ஆட்சேபித்தபொழுது பணம் அனுப்புவதற்காகத் தற்காலிக வாசியென்று எழுதிக் கொடுப்பது பிரஜாவுரிமையைப் பாதிக்காதென்று உறுதி கூறப்பட்டது. ஆனால் பிறகு நடந்ததோ வேறு.

தற்காலிகவாசிகளென்று எழுதிக் கொடுத்தவர்களுக்கு இலங்கைப் பிரஜைகளாக யோக்யதையில்லையென்று சொல்லிப் பல்லாயிரக்கணக்கானவர்களின் பிரஜாவுரிமை மனுக்களை நிராகரித்து விட்டனர். இவ்விதம் உரிமை மறுக்கப்பட்டவர்களில் பெரும்பாலோர் எளிய தொழிலாளர். அரசாங்கத்தின் உத்தரவை ஆட்சேபித்து அவர்களில் எவ்வளவு பேர்கள் சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் செய்ய முடியும்? அவர்களில் எவ்வளவு பேர்களின் சார்பாக இலங்கைத் தொழிலாளர் காங்கிரஸ் தான் அப்பீல் செய்ய முடியும்? பண வசதி மிகுந்த ஒரு அரசாங்கம் அநீதியை நிலைநிறுத்த எவ்வளவு தொகையும் செலவிடுவதற்குத் தயாரா யிருக்கும் பொழுது அத்துடன் எளிய தொழிலாளரும் தொழிற் சங்கங்களும் போட்டியிட முடியுமா?

அப்படியிருந்தும் சிலர் அப்பீல் செய்தார்கள். பரீட்சார்த்தமாக இரண்டு அப்பீல்கள் விசாரணை செய்யப்பட்டு அரசாங்கத்தின் அநீதியான போக்கு அம்பலப் படுத்தப்பட்டது. அரசாங்கமோ தனது நாட்டின் மிக உயர்ந்த நீதிமன்றமான சுப்ரீம் கோர்ட்டின் தீர்ப்பை ஏற்றுக் கொள்வதற்குத் தயாராக இல்லை. அந்தத் தீர்ப்பை இலட்சியம் செய்யாமல், பிடிவாதமாகப் பிரிவி கவுன்ஸிலுக்குச் சென்று அங்கும் மூக்கை உடைத்துக் கொண்டிருக்கிறது. பணமனுப்பத் தற்காலிகவாசியென்று எழுதிக் கொடுக்கும் நிர்ப்பந்தத்தை இந்தியர்களுக்கு ஏற்படுத்தி, பிறகு அதையே பயன்படுத்திப் பிரஜாவுரிமை மறுக்கும் குயுக்தியை சுப்ரீம் கோர்ட் ஆதரிக்க மறுத்ததைப் போல் பிரிவி கவுன்ஸிலும் ஆதரிக்க மறுத்துவிட்டது.

பிரிவிகவுன்ஸில் தீர்ப்பை அனுசரித்து அப்பீலில் சம்பந்தப்பட்டவர்களுக்கு மட்டும் பிரஜாவுரிமை கிடைக்குமே தவிர, ஏற்கனவே உரிமை மறுக்கப்பட்ட பல்லாயிரக்கணக்கானவர்களின் நிலைமை என்ன? தர்மத்துக்கும் நியாயத்துக்கும் அரசாங்கம் மதிப்பு வைப்பதாயிருந்தால் நிராகரிக்கப்பட்ட பல ஆயிரம் மனுக்களைப் புனர் விசாரணை செய்து நியாயம் வழங்க வேண்டுமென்று காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ எஸ். தொண்டமான் அழுத்தம் திருத்தமாக எடுத்துச் சொல்லியிருக்கிறார்.

* * *

இலங்கை இந்திய வர்த்தகச் சங்கத்தின் தலைவர் ஸ்ரீ வி. பி. ஏ. நாயர் இவ்வாரம் திடீரென்று காலமாகிவிட்டார். அவர் மறைவு இந்தியச் சமூகத்துக்கு ஒரு மாபெரும் நஷ்டம். எல்லோருக்கும் நல்லவராக இன்முகம் காட்டிப் பழகிய திரு நாயர் இந்தியச் சமூகத்துக்கும், சிறப்பாகப் பலவிதங்களிலும் அல்லற்பட்டு வரும் இந்திய வர்த்தகர்களுக்கும் ஆற்றி வந்த பணிகள் அனந்தம். இலங்கையில் பெருந் தொகையை முதலீடு செய்த இந்தியர்களின் வாச உரிமைக்காக அவர் கடைசி மூச்சு இருக்கும் வரையில் போராடினார். அவரது திடீர் மறைவு இந்திய மக்களுக்குச் சோதனைகள் மலிந்த தருணத்தில் ஏற்பட்டது மிகப் பெரிய நஷ்டம்.



உங்கள்
வதன சௌந்தர்யம்
வனப்புடன் விளங்க

# ரெமி

ஸ்னோ, பவுடர்
உபயோகியுங்கள்!

ரெமியின் மற்ற தயாரிப்புகள்
ஹேர் ஆயில், ஹைஸ்த் ஜாய் சோப், ஊதுபத்திகள்

AVRA 466·TM

இலங்கையில் கிடைக்குமிடம்: AVRA Ltd., Colombo

ரேடியோ ஸிலோன் :—41·72 மீட்டரில் "இசை விருந்து"
வெள்ளிக்கிழமைதோறும் மாலை 6-30 லிருந்து 6-45 வரை

# சிறுதொழில் வளர்ச்சி

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் கனரகத், தொழில் வளர்ச்சியுடன் சிறு தொழில் வளர்ச்சிக்கும் முக்கிய இடம் அளிக்கப்பட்டிருக்கிறது. இதற்குக் காரணம் இரண்டு. சிறு தொழில்கள் எல்லாம் குறைந்த மூலதனத்தைக் கொண்டு செயல்படக் கூடியவை. அதிகமான தொழிலாளிகளுக்கு வேலை கொடுக்கும் தன்மையுடையது. வேலையில்லாத் திண்டாட்டத்தைக் குறைக்கவும் திட்டத்தின் லட்சியப்படி 65 லட்சம் பேர்களுக்கு வேலை தேடித் தரும் வாய்ப்பை ஏற்படுத்தவும் இச்சிறுபான்மைத் தொழில்களால் தான் முடியும். அதையும் குறைந்த செலவில் செய்ய முடியும். கனரகத் தொழில்கள் யந்திர சாதனங்களை அதிகமாகவும் தொழிலாளிகளைக் குறைவாகவும் கொண்டே இயங்குவதால் ஒரு தொழிலாளிக்கு வேலை தேடித் தரவேண்டுமானால் அதிகமான முதலீடு கனரகத் தொழில்களில் செய்ய வேண்டும். அவையெல்லாம் முதலீட்டையே பிரதானமாகக் கொண்ட தொழில்கள். சிறுபான்மைத் தொழில்கள் இதற்கு மாறாக மனித உழைப்பையே பிரதானமாகக் கொண்டவை. எனவே, அதிகமான மக்களுக்கு வேலை வாய்ப்பு வேண்டுமானால் இவற்றின் மூலம் தான் முடியும்.

இரண்டாவது, மக்களின் வாழ்க்கைக்குத் தேவைப்படும் தினசரி உபயோகப் பண்டங்கள் சிறு தொழிற்சாலைகளிலிருந்து சுலபமாகவும் விரிவாகவும் உற்பத்தி செய்ய முடியும். உதாரணமாக, உருக்குத் தொழிற்சாலையிலிருந்து வார்ப்படங்களும், உருக்குத் திம்மைகளும், யந்திர உற்பத்திசாலையிலிருந்து யந்திரங்களும் உண்டாக்கலாம். அவை மக்களுக்கு நேரடியாக உபயோகமாகாது. இதர தொழில்களுக்குத் தேவைப்படும் பொருள்கள். இவற்றைக் கொண்டு இந்த இதர தொழிற்கூடங்கள் மக்களுக்குத் தேவைப்படும் உபயோகப்பண்டங்களைத் தயார் செய்வார்கள். இது தான் முறை. இப்போது நம் நாட்டில் பலரகப் பொருள்கள் இறக்குமதி செய்யப்பட்டே நமக்குக் கிடைக்கின்றன. இதனால் நாட்டுக்கு அன்னியச் செலாவணிச் செலவும் அதிகம். அதிகமாக உள்நாட்டிலேயே இவை உற்பத்தி செய்யப்பட்டால், இறக்குமதியைக் குறைத்துக் கொள்ளுவதோடு அந்நியச் செலாவணி நெருக்கடியும் தீரும்.

சிறு தொழில்களின் வளர்ச்சியில் கருத்து கொண்டு மத்திய சர்க்காரும் ராஜ்ய அரசாங்கமும் அதற்கேற்ப நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டிருக்கின்றன. தேசிய சிறுதொழில் கார்ப்பரேஷன் என்ற ஸ்தாபனம் 1955-ம் ஆண்டில் தொழில் வர்த்தக இலாகாவின் ஆதரவில் மத்திய அரசாங்கத்தாரால் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. சிறு தொழில் வளர்ச்சிக்கு ஆதரவளிக்கவும், யந்திர சாதனங்களைக் கொண்டு உற்பத்தியைப் பெருக்கவும், உற்பத்தி முறைகளை விளக்கவும், நிர்வாகத் திறனை உயர்த்தவும், உற்பத்தி செய்த பண்டங்களை லாபகரமாக விற்பனை செய்ய வசதி ஏற்படுத்தவும் இந்த ஸ்தாபனம் ஏற்படுத்தப்பட்டது. ஆனால், இவற்றைத் தவிர பல முக்கிய வேலைகளையும் இது தற்போது கவனித்து வருகிறது. தொழிற் கூடங்களை அமைத்துத் தருவதும், சிறு தொழில்களுக்குத் தேவைப்படும் யந்திரங்களை அயல் நாடுகளிலிருந்து தருவிப்பதும், அரசாங்க இலாகாக்களிடமிருந்து ஒப்பந்தங்கள் வாங்கிக் கொடுப்பதும், பெரிய தொழிற்சாலைகளுக்கு உப தொழிற்சாலைகளாகப் பலவித சிறு தொழில்களை ஆரம்பித்துத் தருவதும், விளம்பரம் மூலம் விற்பனைக்கு வழி செய்வதும், ஏற்றுமதிக்கு ஏற்பாடு செய்வதும் இந்த ஸ்தாபனத்தால் கவனிக்கப்படுகின்றன.

இம்மாதிரி ஆரம்பிக்கப்பட்ட பெரிய தொழிற்கூடங்கள் டில்லிக் கருகாமையிலுள்ள ஒக்லா என்னுமிடத்திலும், அலஹாபாத்துக் கருகாமையிலுள்ள நைநி என்னுமிடத்திலும் விரிவான முறையில் நிறுவப்பட்டுள்ளன. இவற்றில் ஒன்று அமெரிக்க நுணுக்கக் கலை நிபுணர்களின் உதவியைக் கொண்டும், மற்றொன்று மேற்கு ஜெர்மனியின் உதவியுடனும் ஆரம்பிக்கப் பட்டிருக்கின்றன. மற்றும் ஒன்று கல்கத்தாவுக்கருகிலுள்ள ஹவுரா என்னுமிடத்தில் ஜப்பானியர்கள் உதவியுடன் ஆரம்பிக்க இருக்கின்றது. இந்த ஸ்தாபனத்தின் நிர்வாக டைரக்டர் திரு ஏ.எஸ்.இ. அய்யரின் சுறுசுறுப்பாலும் ஊக்கத்தாலும் இவ்விரண்டு தொழிற்கூடங்களும் குறிப்பிட்ட கால வரம்புக்குள் கட்டி முடிக்கப்பட்டதுடன் சிறு தொழில வளர்ச்சிக்கும் பெருமளவில் ஊக்கமளிக்கப் பட்டிருக்கிறது.



திரு ஏ. எஸ். இ. அய்யர்

மேல் நாடுகளில் பெரிய தொழிற்சாலைகளுக்கு உப தொழில்களாக வளர்ந்திருப்பது மோட்டார் சாமான்கள் உற்பத்தி, சைக்கிள் சாமான் உற்பத்தி, ரேடியோ சாமான்கள் தயாரிப்பு, மின்சார சாமான்கள் உற்பத்தி முதலியன. நமது நாட்டிலும் இந்த ரகங்களின்

விஸ்தரிப்புக்கு இடமுண்டு. முக்கியமாக, சைக்கிள் சாமான்களும் மோட்டார் சாமான்களும் பல்வேறு சிறு தொழில்களில் சுலபமாகச் செய்யலாம். ஆனால் நாம் தற்போது ஜோடுகள்தான் அதிகமாக இந்தமாதிரி முறையில் உற்பத்தி செய்கிறோம்.

மத்திய சர்க்கார் எடுத்துக் கொண்ட நடவடிக்கையைப் போலவேதான் சென்னை ராஜ்யம் மேற்கொண்டுள்ள 74 ஏக்கர் கிண்டி தொழிற் கூடமும். இதில் 52 தொழில் ஸ்தாபனங்கள் இயங்க வசதி செய்யப்பட்டிருக்கின்றன. அவற்றில் 46 ஏற்கனவே 36 தனிப்பட்ட முதலாளிகளால் எடுத்துக் கொள்ளப்பட்டன. மீதியுள்ளவை அரசாங்கத்தாரால் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. மேலும் சிறு தொழிற் கூடங்கள் இந்த எஸ்டேட்டில் உருவாகிக் கொண்டிருக்கின்றன. இங்கே தயாராகும் பொருள்கள் மின்சார விசைகள், சைக்கிள் சாமான்கள், ரேடியோ கருவிகள், கம்பி ஆணிகள், இரும்புப் பித்தளைத் தாழ்ப்பாள்கள், மூக்குக் கண்ணாடிச்சட்டங்கள்,மரச்சாமான்கள், தகரடப்பாக்கள் முதலியவை. அரசாங்கத்தாரின் மேற்பார்வையிலேயே இயங்கும் தொழில்கள் அம்பர் சர்க்காவும், பாதரக்ஷையும்.

இவையெல்லாம், சிறு தொழில் வளர்ச்சியில் பாரதம் முன்னேறிக் கொண்டிருப்பதற்கு அறிகுறிகள். ஆனால் உண்மையில் தொழிற்கூடங்களைக் கட்டி விட்டால் மட்டும் தொழில் வளர்ச்சி பெருகாது. தொழிற்கூடங்களில் கிடைப்பது இடவசதியும், மின்சார வசதியும், நூல்நிலைய வசதியும்தான். தொழில் இயங்க யந்திரச் சாமான்கள் வேண்டும். அவையில்லாவிடில் முன்னேற்றம் தடைப்படும். அகில இந்திய உற்பத்தியாளர்கள் ஸ்தாபனத்தின் கூட்டமொன்றில் பிரதமர் நேரு சமீபத்தில் பேசியபோது சிறு தொழிற்கூடங்கள் வேகமாக வளர வில்லை என்று குறைப்பட்டுக் கொண்டார்.

இதற்குக் காரணம் கூறுவதுபோல், மூலஸோரியில் கூடிய சிறு தொழில் போர்டாரும், தேசிய சிறு தொழில் கார்ப்பரேஷனைச் சேர்ந்தவர்களும் அவற்றின் கஷ்டங்களை விளக்கிச் சொல்லியிருக்கிறார்கள்.

திட்டத்தில் சிறு தொழிற்கூடங்களின் விஸ்தரிப்புக்காக ஒதுக்கப்பட்டுள்ள தொகைகள், சமீபத்தில் திட்டத்திலேயே ஏற்பட்ட மாறுதல் காரணமாகக் குறைந்து விடுமென்ற பயம் ஒன்று. அயல்நாட்டுச் செலாவணி நெருக்கடியினால், அத்தியாவசியமான யந்திரச் சாதனங்களையும் உற்பத்திக்குத் தேவைப்படும் கச்சாப் பொருள்களையும் தருவித்துக் கொள்ள முடியாத நிலை மற்றொன்று. உள்நாட்டுக் கனரகத் தொழிற்சாலைகளிடமிருந்து போதிய யந்திரங்கள் கிடைக்காததாலும், அப்படிக் கிடைத்தாலும் உடனடியாகவோ சீக்கிரமாகவோ கிடைக்காததாலும் முன்னேற்றம் தடைப்பட்டிருப்பது மேலும் ஒரு காரணம். இவ்வாறு பலவித குறைபாடுகளால் முன்னேற்றம் தடைப்படுகிறதென்று அவர்கள் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

உதாரணமாக, தேசிய சிறு தொழில் கார்ப்பரேஷனின் (முக்கிய பணி இதர) சிறு தொழில் ஸ்தாபனங்களுக்கு யந்திரங்களைத் தவணைக் கடன் வசதியில் வழங்குவது. அவர்களிடம் 1223 மனுக்கள் அங்கீகரிக்கப்பட்டு 361 லட்சம் ரூபாய்க்கு யந்திரங்கள் இறக்குமதி செய்து அளிக்கக் காத்திருக்கின்றன. ஆனால் 15 லட்சம் ரூபாய்க்கு மட்டுமே இறக்குமதி செய்ய அனுமதித்திருக்கிறது அரசாங்கம். உள்நாட்டிலேயே நானூறுக்கு அதிகமாக யந்திரங்களுக்கு 'ஆர்டர்கள்' கொடுத்திருந்தும், 140 மட்டுமேதான் இது வரையில் கிடைத்திருக்கின்றனவாம்.

" ஆயுதம் செய்வோம்;
நல்ல காகிதம் செய்வோம்
ஆலைகள் வைப்போம்;
கல்விச் சாலைகள் வைப்போம் "

என்ற மகாகவி பாரதியாரின் வாக்கு ஐந்தாண்டுத் திட்டங்களின் மூலம் செயல் முறைக்கு வந்து கொண்டிருக்கும் இந் நாட்களில், வேலையில்லாத் திண்டாட்டம் தீராத பிரச்னையாக இருந்து வருகிறது. சிறு தொழில் வளர்ச்சியின் மூலம்தான் இது தீரும்.

சிறு தொழில் மேன்மேலும் வளர்ச்சியடைந்து அவை அதிகமான அளவுக்கு வேலை வாய்ப்பையும் தேடித் தர வேண்டுமானால் அவற்றின் உண்மையான குறைகளை அவ்வப்போது பரிசீலனை செய்து அவற்றைத் தீர்த்து வைக்க வேண்டும். இதில் மத்திய அரசாங்கத்தின் பொறுப்பு மிகவும் அதிகம்.

## 32

நமக்குத் துன்பம் இழைத்தவருக்கு நாமும் துன்பம் இழைத்து விடுவதில் ஒரு திருப்தி உண்டாகிறது. ஆனால் அந்தத் திருப்தி எத்தனை காலம் தங்குகிறது? சீக்கிரமே மறைந்து ஒன்றுமில்லாமல் போகிறது.

பழி வாங்கிக் கோபம் தீர்த்துக் கொள்வதை விட்டுப் பிறர் செய்த துன்பத்தைப் பொறுத்தோமானால், அதனால் உலகத்தில் நமக்கு உண்டாகும் புகழ் நீண்டநாட்கள் நிற்கும் புகழ். இப்படி நாம் அடையக் கூடிய பெரும் சந்தோஷத்தை விட்டு விட்டு அற்ப சந்தோஷம் தரும் ஒரு காரியத்தைச் செய்யலாமா? ஆனபடியால் யாரேனும் நமக்குத் துன்பம் இழைத்தால் தண்டித்துப் பழி தீர்த்துக் கொள்ளும் யோசனையை விட்டு விட்டு நாம் சாகும் வரை புகழ் தரும் பொறுமையைக் கையாள்வோமாக.

ஒறுத்தார்க்கு ஒருநாளை
இன்பம்; பொறுத்தார்க்குப்
பொன்றும் துணையும் புகழ்.

[பொன்றும் துணையும்-தாம் இறந்து போகும் வரை அல்லது உலகம் அழியும் வரையில்]

தீங்கு செய்தவனைத் தண்டித்தல் ஒரு நாளின்பம் தரும். பொறுத்தல் முடிவிலாப் புகழ் தரும். புகழ் என்றால் நல்லோருடைய பாராட்டுதல். கீர்த்தி என்றாலும் அதுவே.

* * *

செருக்கு மிகுதியால் அற நெறி தவறிப் பிறர் நமக்குத் தீயன செய்கிறார்கள். அதை நாம் நம்முடைய ஆன்ம சக்தியால் பொறுத்துக் கொண்டால், தீமை செய்தவருடைய செருக்கை நம்முடைய நற்குணத்தால் வென்று அவர்களுக்குத் தோல்வி தருவோம்.

அவர்கள் செருக்கு தீய செய்கையில் செல்கிறது. நம்முடைய செருக்கு அத்தீங்கைப் பொறுத்துக் கொள்வதில் செல்கிறது. அதுவே வெற்றி.

மிகுதியான் மிக்கவை
செய்தாரைத் தாம்தம்
தகுதியான் வென்று விடல்.

நம்முடைய பொறை நம்முடைய மேலான குணத்தை நிரூபிக்கும். அவர்களின் செருக்கு பயனற்ற மயக்கம் என்பதை அவர்களே உணரும்படி செய்து விடும்.

மிகுதி—செருக்கு. செல்வமோ, பலமோ, அல்லது வேறு காரணமோ கொண்டு தீய செயல்களைத் தூண்டும் மனோபாவம். அதனால் செய்யப்படும் செயல்கள் 'மிக்கவை', அறத்தின் வரம்பைக் கடந்த காரியங்கள். எதிராளியின் மிகுதியை உன் தகுதியால் வென்றுவிடு என்று எதுகை வைத்துச் சொல்லுகிறார் முனிவர்.

பொறை என்பது சும்மா பொறுத்துக் கொண்டு தோல்வியடைவதல்ல. அது பகைவனைத் தோற்கடிக்கும் ஆயுதம் ஆகும். அதைக் கொண்டு போரில் வெற்றி அடைவாயாக என்கிறார். உன் பொறை குற்றம் செய்கிறவனுடைய செருக்கை வீழ்த்தி உன்னை வெற்றி அடைந்த வீரனாகச் செய்யும். இதை அனுபவத்தில் பார்க்கலாம்: யாரேனும் நீதி தவறி நமக்குத் தீங்கு இழைத்தால் அதைப் பெருந்தன்மை காட்டிப் பொறுத்தோமானால், தீங்கு செய்தவன் வெட்கப்படுவான். வெற்றியடைந்தவன் அவனல்ல, நாம் வெற்றியடைவோம். அவனுடைய வெட்கம் அவனுடைய தோல்விக்கு அடையாளம்.

# வட்ட மேஜை

## சிந்தனைக்கு விருந்து

'கல்கி' 25–5–58 இதழில் "நாகரிகப் போட்டி" என்ற தலையங்கத்தில் தலைவர் ராஜாஜி, நாடு, கம்யூனிஸ்ட் கொள்கை, பயனற்ற வாழ்க்கை, முன்னேற்றம், ஆசை, உயர்ந்த வாழ்க்கை, கூட்டுறவு, உயர்ந்த பண்பாடு முதலான சிக்கல் நிறைந்த விஷயங்களைப் பற்றி அழகாகவும், தெளிவாகவும், சாதாரணப்படிப்பாளியும் அறிந்து கொள்ளும் வகையில் எழுதியிருக்கிறார்கள். மேலும், 'முன்னேற்றம்' என்று ஆசைகளைப் பெருக்கிக் கொண்டு போய், அரசாங்கத்துக்கு எல்லா அதிகாரத்தையும் கொடுத்து விட்டுத் தனி மக்கள் அடிமையாகிறார்கள் என்பதை விவரமாக விளக்கிவிட்டு, மெய்ச் சுகத்தை நாடி பொய்ச் சுகத்தை விட்டொழித்து எல்லாருமே நன்றாக வாழ்வோமாக என்ற ஆசையையும் வெளிப்படுத்தியிருக்கிறார்கள். மேற்படி தலையங்கத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து, தற்காலிகமாக ஓய்வு எடுத்துக் கொண்டிருக்கும் திரு நேருவுக்கு அனுப்பினால், அவரின் சிந்தனைக்குச் சிறந்த விருந்தாக இருக்கும்.

சென்னை-6
23-5-58
வி. நாகராசன்

## ஹிந்திக்கும் அடிமையா?

'வியாதிக்கு மருந்து' 'ஹிந்திப்பிரச்னை' என்ற தலையங்கங்கள் படிக்கத் தெவிட்டாத அமிருதமாய் இருந்தன. ஆனால் நம்மவர்களே, நம் தலைவர்களே இப்படிச் செய்கிறார்களே என்று நினைத்த போது மனதில் வெறுப்பும் அருவருப்பும் ஏற்பட்டன. ஹிந்தி ஆதரவாளர்கள் ராஜாஜி அவர்களின் கேள்விகளுக்கெல்லாம் எப்படிப் பதில் கூறுகிறார்கள் என்று பார்க்க ராஜாஜி மண்டபத்துக்குச் சென்றவர்களில் நானும் ஒருவன். (தேநீர் விருந்தில் கலந்து கொள்ளவில்லை!) ஸ்ரீ சந்தானம் அவர்களைத் தவிர்த்து மீதிப் பேர்கள் பேசியவற்றைக் கேட்க நேரிட்ட போது, ஆயிரம் மொரார்ஜிகளையும் சகித்துக் கொள்ளலாம்; ஆனால் இக்கனவான்கள் பேசுவதைக் கேட்கச் சகிக்க முடியாதென்பதை உணர்ந்து பாபப் பிராயசித்தமாகத் தவன மண்டபத்துக்குச் சென்று விட்டேன். மறுபடியும் மறுபடியும் பழைய பல்லவியையே பாடினார்கள். "ஆங்கிலம் அன்னிய மொழி. அதை வைத்துக் கொள்வது இழிவானது. நாம் ரொம்ப ரொம்ப அறிவாளிகள். ஆதலால் நாம் ஹிந்தி கற்றுக் கொள்வது சுலபம். நாம் ஹிந்திவாலாக்களையே ஹிந்தி பேசுவதில் தோற்கடித்து விட முடியும்!" என்பன போன்றவை.

நமக்கு மூளை கொடுத்திருப்பது ஒரு பெருந் தவறு என்று தோன்றுகிறது! 'மூளை இருக்கிறதே! கற்றுக் கொள்ளுங்களேன் ஹிந்தியை' என்பது மூளை படைத்ததற்குத் தண்டனை போன்றுதான் இருக்கிறது! வீண் புகழ்ச்சியினாலும் பொய்யுரைகளாலும் மக்களை ஏமாற்றி விட நினைக்கிறார்கள்.

நம் மக்களின் உரிமைகளைக் காக்க அதிருஷ்ட வசத்தினால் நமக்கு ஒரு மாபெரும் தலைவர், அநீதியை எதிர்த்துக் குரல் கொடுக்கும் மாபெரும் வீரர், முனிவர் ராஜாஜி அவர்கள் இருக்கிறார்கள். ஹிந்தியை நம்மவர்கள் கற்றுக் கொள்ளத் தயார். ஆனால் தேர்ச்சி பெறுவது வேறு. அதைத் தாய் மொழியாகப் பெற்றவருடன் போட்டி போடுவது வேறு. பிறகு ஆங்கிலேயருக்கு அடிமையாயிருந்ததிலிருந்து ஹிந்தி பேசுவோருக்கு அடிமையாவதுதான் முடிவு. பின் நமக்குச் சுதந்திரம் ஏது?

தி. நகர்
16-5-58
கே. வேதமூர்த்தி

## புரிந்து கொள்ள விரும்பவில்லையா?

'கல்கி' 18-5-58 இதழில் மதிப்புக்குரிய தலைவர் ராஜாஜி அருளியிருந்த 'ஹிந்திப் பிரச்னை'யைக் கண்டேன். தற்போதைய நிலைமையைத் தெள்ளென எடுத்துக் காட்டியிருக்கிறார் மகான். "சென்னை சர்க்காரைப் பிடித்துக் கொண்டு கரைக்காய் நீச்சல் நீந்துவதைக் காட்டிலும், உருதுவின் மகாத்மியத்தை உணர்ந்து அதற்காக ஆவேசத்துடன் பிரவசனம் செய்த ஜவாஹர்லால் அவர்களையாவது நம்பி நீந்துவது நலம்" என்பது எத்தகைய பொருள் செறிந்த வாக்கியம்? பழுத்த அனுபவம் கொண்ட ராஜாஜியின் ஒவ்வொரு வார்த்தையும் பொன்னால் பொறிக்கப்பட வேண்டியது.

"இந்தி என்னும் அரிவாளைக் கொண்டு தமிழ் என்னும் ஆச்சா மரத்தை வெட்ட முடியாது" என்னும் போது எந்தத் தமிழனுக்குத்தான் மயிர்க்கூச்செடுக்காது? எனக்கு வியப்பைக் கொடுக்கும் விஷயம் என்னவெனில் உண்மையாகவே ஆளும் கட்சி ராஜாஜியைப் புரிந்து கொள்ள வில்லையா? அல்லது புரிந்து கொள்ள விரும்பவில்லையா என்பதுதான்!

பழையமாம்பலம்
17—5—58
பா. சுந்தரராஜன்

## நயா ரூப்பா

பண்டிதரும் பாமரரும், அறிஞரும் அறிவிலிகளும் யாவரும் இன்புற்று இனிது வாழ வகை செய்ய விரும்பும் நம் அண்ணல் ராஜாஜி சென்ற வருடம் மார்ச்சு மாதத்தில் "நயா பைசாவால் நாட்டில் குழப்பம் உண்டாக்காமல், இப்போது நிலவிவரும் நாணயங்களில் ஒன்றாகிய காலணாக்களை அடிப்படையில் வைத்து, நூறு காலணாக்கள் கொண்ட "நயா ரூப்பா"வை ஏற்படுத்தி நாட்டில் பெரும்பான்மையோராயுள்ள ஏழை எளியவர்களை நலமுறச் செய்யுங்கள்" என்று கூறினார். ஆனால் அந்தப் பொன்மொழிகள் புறக்கணிக்கப்பட்டன.

"நயா பைசா" அமுலாகியுள்ள சென்ற ஓராண்டு காலமாகப் பொதுமக்களுக்கு ஏற்பட்டுள்ள கஷ்டமும் நஷ்டமும் கணக்கில் அடங்கா. இதை முன்னமே கணித்துணர்ந்து, "நயா பைசா முறை நாணயங்கள் அச்சடிக்கப்பட்டு விட்டனவே என்று தயங்க

வேண்டாம். அவற்றைத் திரும்பவும் உருக்கிப் புதிதாக 'நயா ருப்யா' முறை நாணயங்களாக அச்சிட்டு வழங்கிவிடுவதே சாலச் சிறந்தது. இதில் ஏற்படும் சிரமமும் செலவும் அற்பமானவையாகும்'' என்று நயமாகவும் தெளிவாகவும் அறிவுறுத்திய இப்பெருந்தகையாரின் அரிய யோசனை-இப்போது காலம் தாழ்த்தியேனும் நம் மதிப்புக்குரிய அரசினரால் பரிவுடன் ஏற்கப்படுமா?

சிவகங்கை|
18—5—58

க. கிருஷ்ணமூர்த்தி

## ஏமாற்று வித்தையா?

'ஆகா! நமது சென்னை சர்க்கார் ஆட்சி மொழிப் பிரச்னையை எவ்வளவு எளிதாகத் தீர்த்து விட்டார்கள்? 'ஹிந்தியும் ஆங்கிலமும் இரண்டும் மத்திய ஆட்சி மொழியாக இருக்க வேண்டும்' என நமது கல்வி மந்திரி எவ்வளவு ஆவேசமாகக் கௌஹாட்டியாங்கிரஸில் போராடினார் என்று எல்லோரும் புகழ்ந்தார்கள். அப்பொழுதே ராஜாஜி அவர்கள் தமது ஆழ்ந்த அரசியல் அனுபவத்தின் காரணமாக, 'இது வெறும் ஏமாற்று வித்தை. சென்னை சர்க்கார் மக்களை மயக்கித் தங்கள் பதவியைக் காப்பாற்றிக் கொள்ளச் செய்யும் தந்திரம்' என்பதை எடுத்துக் காட்டினார்கள். அந்தத் தீர்க்கதரிசி சொன்னது எவ்வளவு உண்மை என்பது வெட்ட வெளிச்சமாகி விட்டது. ஐ. ஏ. எஸ். உத்தியோகஸ்தர்கள் 'ஹிந்தி' உயர்தரப் பரீட்சையில் தேறவேண்டுமாம். இது சென்னை சர்க்காரின் சென்ற வார உத்தரவு. கண்ணிருந்தும் பார்க்க மறுக்கும் 'இந்தி ஆதரவாளர்கள்' இனியாவது விழித்தெழுவார்களாக!

நேருஜி அண்மையில் பேசிய ஒன்றையும் ஞாபகப்படுத்த விரும்புகிறேன். ''சர்க்கார் உத்தியோகங்களுக்கு வைக்கப்படும் இந்திப் பரீட்சையில் நானே தேற மாட்டேன். விளக்கங்களில் உள்ள இந்தி எனக்கே புரிவது கஷ்டம்'' என்றார் நேருஜி. இந்தி எளிதில் கற்று வடநாட்டவரையும் மிஞ்சிவிட முடியும் என்று சொல்லும் பிரமுகர்கள் இப்பொழுதாவது மனத் தெளிவு பெறுவார்களாக!

பாப்பநாயக்கன்பாளையம்
17—5—58

பி. ஆர். துரைசாமி

## மூடிக் கிடப்பதேன்?

மதுரை மாவட்டத்தில் உள்ள வேடசந்தூரில் சர்க்கார் 'ஸ்தல அபிவிருத்தி'த் திட்டத்தின்கீழ் ரூபாய் இருபதினாயிரம் மதிப்புள்ள மருத்துவ சிகிச்சை நிலையம் 1—4—56ல் கட்டி முடிக்கப்பட்டு 21—7—57ம் நாளன்று அமைச்சர் திரு கக்கன் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. திறப்புவிழா நடந்த நாளிலிருந்து இந்நாள்வரை மருத்துவ மனை மூடிக் கிடக்கிறது; பெண் டாக்டர் இல்லாத காரணத்தால். அமைச்சர்கள் திறப்பு விழாக்களுக்குச் செல்லுகிறார்களே யொழிய, அவர்கள் துவக்கி வைத்த ஸ்தாபனங்கள் தொடர்ந்து நடைபெறுகின்றனவா, இல்லையா என்பதைக் கண்காணிக்க ஏனோ மறந்து விடுகின்றனர். பொது மக்கள் வரிப்பணத்தில்

## பலராமனுக்கு வாழ்த்து



'ஹிந்து' பத்திரிகையின் அமெரிக்க நிருபர் கே. பலராமன் அவர்களுக்கு அமெரிக்காவிலுள்ள கலிபோர்னியா பல்கலைக் கழகத்தினர் பரிசு வழங்கியிருக்கிறார்கள்.

பத்திரிகை நிருபர்களின் தொழில் கத்தி முனையில் நடப்பதுபோல் மிகவும் சிரமமான தொழில். எந்தச் செய்தியிலும் சிறிது கற்பனையைக் கலந்து கண் காது மூக்கு வைத்து விட்டால், அத்தகைய செய்தியினால் ஒரு நாட்டில் அதிகப்படியான நட்பையும் வளர்க்கலாம்; அதிகப்படியான விரோதத்தையும் வளர்க்கலாம். ஆனால் உண்மையான நிலையை மட்டும் உணர்த்த முடியாது. உண்மையின் அடிப்படையில் ஒரு நாட்டுக்கும் மற்றொரு நாட்டுக்கும் உண்டாகும் நட்பே உறுதியான நட்பல்லவா?

ஆகவே, அமெரிக்காவில் உள்ள வெளிநாட்டுப் பத்திரிகை நிருபர்களில் அமெரிக்கச் செய்திகளையும், ஐ. நா. சபை விவகாரங்களையும் விருப்பு வெறுப்பின்றிப் பொதுநோக்குடன் கண்டு செய்திகளை அனுப்புபவர்களுக்குப் பரிசு வழங்க ஒரு திட்டம் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இதில் ஸ்ரீ கே. பலராமன் இவ் வருஷத்திய முதல் பரிசைப் பெற்றிருக்கிறார்.

பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகளுக்கும், அமெரிக்காவுக்குமிடையே பரஸ்பர நல்லுணர்ச்சியை வளர்த்து, ஒருவரை யொருவர் சரியாகப் புரிந்து கொள்வதற்காக உண்மையோடு செய்த சேவையைப் பாராட்டிச் சென்ற வருஷம் அமெரிக்காவிலுள்ள '' ஆங்கிலம் பேசும் சங்கத்தார் '' ஸ்ரீ பலராமனுக்கே பரிசு வழங்கினார்கள்.

இப்படி வருஷத்தோறும் அரிய பணி புரிந்து, பெரும் பாராட்டுதல்களைப் பெற்றுவரும் திரு கே. பலராமனுக்கு நமது வாழ்த்துக்கள். அவருடைய பணி மேலும் சிறப்பதாக!

கட்டி முடிக்கப்பட்ட மருத்துவ விடுதி இரண்டு ஆண்டுகளாகப் பயனற்றுக் கிடக்கிறது. சர்க்கார், ஒரு பெண் டாக்டரைத் தேர்ந்தெடுத்து அனுப்பி மேற்படி நிலையம் நல்லமுறையில்செயலாற்ற ஆவனசெய்யாது அலட்சியத்துடனும், கடமையுணர்ச்சி இன்றியும் இருக்கிறார்கள்.

வேடசந்தூர்
19—5—58

வி. நாகசுந்தரம்

## அதிகாரிகள் கடமை

அரசாங்கத்தார், முக்கியமாக விவசாயிகளுக்கும், மற்றச் சிறிய மூலதன கிராமீய, வீட்டு, சிறு தொழில்களை நடத்தும் பொது மக்களுக்கும், கிராம அபிவிருத்தி சாதனங்களைச் செய்து தரப் பல கோடிக்கணக்கான தொகை ஒதுக்கி வைத்து உதவி செய்து வருகிறார்கள். செய்வோருக்கும், உதவியைப் பெறுவோருக்கும் நேரடியான தொடர்பு வேண்டும் என்னும் எண்ணம் கொண்டு, அபரிமிதமான சம்பளங்கள் கொடுத்தும், அதிக தொகை செலவழித்தும் 'ப்ளாக் டெவலப்மெண்ட்' என்னும் ஒரு புது இலாகாவை உருவாக்கியிருக்கிறார்கள். மேற்படி இலாகா, பொது மக்களுக்குச் சர்க்காக்கள் வழங்கிவருகிறது. பஞ்சும் அங்கே விற்கப்படுகிறது. ஆனால் பஞ்சு வாங்குவதற்குப் போனால், 'மாலையில் வா, காலையில் வா, நாளை வா, அடுத்த வாரம் வா' என்று படையெடுக்க வைக்கிறார்கள். சிட்டங்கள் கொண்டு போனால் 'இதில் முறுக்கு கம்மி, இதில் அதிகம்' என்று திருப்பிவிடப்படுகிறது. ஆனால் வெளியே இதே சிட்டங்கள் பேரம் பேசப்பட்டு, குறைந்த விலைக்குப் பலரால் வாங்கப்பட்டு வருகிறது.

0-6-9 அணவுக்குப் பஞ்சு வாங்கி, நான்கு நாட்கள் கஷ்டப்பட்டு நூற்று, 4 சிட்டங்களைக் கொண்டு போய்க் கொடுத்தால் இம்மாதிரி திருப்பி அனுப்பப்படுகின்றன. அவ்வப்பொழுது, ப்ளாக் டெவலப்மெண்ட் அதிகாரிகள், உதவி பெற்ற நபர்களை ஒன்றுகக் கூட்டி, அவர்களுடைய குறைகளையும், அனுபவிக்கும் கஷ்ட நஷ்டங்களையும் கேட்டு, அவைகளை நிவர்த்தி செய்ய வேண்டும். எருவு கடன், மாடு வாங்கக் கடன், நிலச் சீர்திருத்தக் கடன், கிணறு வெட்டக் கடன் முதலிய பல கடன்பட்டவர்களையும் அழைத்து அவர்கள் பெற்ற தொகையை எவ்வாறு உபயோகப்படுத்தினார்கள் என்று கேட்டு, அவர்களுக்கு ஏற்படும் தொல்லைகளையும் கேட்டுப் பரிகாரம் செய்தால்தான் ஐந்தாண்டுத் திட்டத்துக்காக ஏற்படுத்தப்பட்ட இந்த இலாகாவினால் நன்மை ஏற்படும்.

தர்மபுரி
12—5—58

எஸ். சுந்தரம்

## ஜனநாயகத்துக்கு விரோதம்

கட்சி வேறு, அரசாங்கம் வேறு என்ற ஜனநாயகத்தன்மையை அனுசரித்து, தேவிகுளம் பீர்மேடு உபதேர்தலில் கேரள மந்திரிகள் தேர்தல் பிரசாரம் செய்யவில்லை.

இதற்காக ஜனநாயகத்தில் பற்றுள்ளவர்கள் கேரள மந்திரிகளையும், கம்யூனிஸ்ட் கட்சியையும் பாராட்ட வேண்டும்.

அகில இந்திய தேர்தல் கமிஷனர், "மந்திரிகள் தேர்தல் பிரசாரம் செய்யக் கூடாது" என்று அறிக்கை விட்டிருந்தும், ஜனநாயகம் பேசும் சென்னை மாநில காங்கிரஸ் மந்திரிகள் தேவிகுளம் பீர்மேடு உபதேர்தலில் காங்கிரஸ் கட்சியின் சார்பாகத் தேர்தல் பிரசாரம் செய்தார்கள். காங்கிரஸ் மந்திரிகள் தேர்தல் பிரசாரம் செய்தது, தேர்தல் கமிஷனர் அறிக்கைக்கு விரோதமாகும். அதோடு மட்டுமல்ல, ஜனநாயகத்துக்கும் விரோதமாகும்.

மதுரை
22—5—'58

ஆர். கே. ராமானுஜம்

## கருணை காட்டுமா?

சென்னை அரசாங்கம் 1956ம் வருடத்தில் "குடியானவர் பாதுகாப்பு மசோதா", "நியாய வார மசோதா" இந்த இரண்டு மசோதாக்களைக் கொண்டு வந்தது. இதில் பல குறைபாடுகள் இருக்கின்றன என்று பல மிராசுதார்களும், எம். எல். ஏ.க்களும் மந்திரிகளும். காங்கிரஸ் கமிட்டித் தலைவர்களும் கூறினார்கள். அப்படியிருந்தும் மேற்படி சட்டத்தில் ஒருவித மாறுதலும் செய்யப்படவில்லை. இதனால் பெரும் நிலச்சுவான்தார்களுக்கு எவ்வித நஷ்டமும் இல்லை. நான்கு, ஐந்து ஏக்கர் உள்ள சிறு நிலச்சுவான்தார்கள் தான் பாதிக்கப்படுகிறார்கள். ஏனெனில் இவர்களுக்குப் பணம் இல்லை. பணம் இல்லாததால் வசதிகளும் இல்லை. "குடியானவர் பாதுகாப்பு மசோதா" "நியாய வார மசோதா" இந்த இரண்டு சட்டங்கள் இருப்பதால், சாகுபடி செய்யும் குடியானவர்கள் குத்தகைக்கு விடப்பட்ட பூமியையும் சொந்த விவசாயத்துக்குக் கேட்டால் மறுக்கிறார்கள். சொந்தத்துக்குக் கொடுக்காமல் அவர்களே குத்தகைக்கு வைத்துக் கொள்ளட்டும் என்று இருந்தாலும் அவர்கள் குத்தகையையும் சரியாகக் கொடுப்பதில்லை. இப்படியே விட்டு விட்டால் சிறு நிலச்சுவான்தார்களின் கதி என்ன ஆவது? இவர்கள் கோர்ட்டுக்குச் சென்று வாதாடப் பணம் இல்லை. இவர்கள் நிலை இப்படியே போனால் சிறு நிலச்சுவான்தார்கள் வறுமையால் வாடி வதங்க வேண்டியதுதான்.

ஆகையால், சிறு நிலச்சுவான்தார்களுக்கு, 4,5 ஏக்கருக்குக் குறைவாக உள்ளவர்களுக்கு, சொந்தத்தில் விவசாயம் செய்ய வேண்டும் என்று கேட்டால் பூமியைச் சொந்தக்காரர் வசம் விட்டுவிட வேண்டுமென்று சட்டத்தில் ஒரு திருத்தம் கொண்டுவரப்பட வேண்டும். 4, 5 ஏக்கர் உள்ளவர்களுக்கு நியாயவார மசோதாவில் இருந்து பூரண விலக்கு அளிக்கப்பட வேண்டும். ஏனெனில் இவர்கள் உழுது பயிரிடும் குடியானவர்களைக் காட்டிலும் மிகவும் ஏழைகள்.

திருபாதிரிப்புலியூர்
19—5—58

எஸ். நாகராஜன்



திரு வி. விஜயரங்கம் அவர்களின் புதல்வி சௌ. சரஸ்வதிக்கும், பிரசுநர் திரு கந்தசாமிக்கும் திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறியது.



ஆக்பா இந்தியா பிரைவேட் கம்பெனியின் பிரதிநிதி திரு சி. குப்புசாமிக்கும், சௌ. சாவித்திரிக்கும் விவாகம் விமரிசையாக நடைபெற்றது.

# வாழ்க மணமக்கள்



கல்வி ஏஜன்ஸி இன்ஸ்பெக்டர் திரு எஸ். கோபாலகிருஷ்ணனின் சகோதரி சௌ. ராஜத்துக்கும், திரு சுப்பிரமணியத்துக்கும் திருமணம் நடைபெற்றது.



ஆந்திரா அக்கௌண்டெண்ட் ஜெனரல் காரியாலயத்தைச் சேர்ந்த திரு என்.எஸ். கரும்பேஸ்வரனுக்கும் சௌ. அகிலாண்டேசுவரிக்கும் திருமணம் நடைபெற்றது.



திரு வேதாந்தம் அவர்களின் புதல்வர் திரு கே. வி. சீனிவாசனுக்கும் சௌ. அலர்மேலுமங்கைக்கும் செங்கல்பட்டில் விவாகம் நடந்தது.



காரைக்குடியில் திரு எஸ். ராமசந்தரம் பி.எஸ்ஸி. பி.டி.க்கும், சௌ. ராஜலக்ஷ்மிக்கும் விவாகம் வெகு சிறப்பாக நடந்தேறியது.



திரு பி. ராஜமாணிக்கம் அவர்களின் புதல்வி சௌ. ராதாவுக்கும் திரு கிருஷ்ண மூர்த்திக்கும் பங்களூரில் திருமணம் நடந்தேறியது.



சென்ட்ரல் பி. டபிள்யூ. டி.யைச் சேர்ந்த அதிகாரி திரு ராமச்சந்திரன் சௌ. பாலாம்பாளைத் திருமணம் செய்து கொண்டார்.



இந்தியன் பாங்கின் இன்ஸ்பெக்டர் திரு ஒய். கிருஷ்ணமூர்த்தி அவர்களின் புதல்வி கிரிஜாவுக்கும் திரு ராமச்சந்திர னுக்கும் திருமணம் நடந்தது.



தென்னிந்திய ரயில்வே காரியாலயத் தைச் சேர்ந்த திரு சீனிவாசனுக்கும், சௌ. விசாலாட்சிக்கும் விவாகம் சிறப் பாக நடைபெற்றது.



சென்னை மீக் ஸ்டோர்ஸ் அதிபர் திரு டி. வி. சீனிவாசனது புதல்வி சௌ. சகுந்தலாவுக்கும் திரு ராமமூர்த்திக்கும் திருமணம் நடந்தேறியது.



பிரபல கால் பந்தாட்டக்காரர் திரு பி. ஜானகிராமுக்கும் சௌ. மோகனாபாய்க் கும் மே மாதம் 5-ந்தேதி திருமணம் வெகு விமரிசையாக நடைபெற்றது.

# ஆவிகள் நடனம்

டைபோர் ஸெகல்ஜ்

**கா**ட்டு ஜாதிப் பெண் ஒருத்தி நோயுற்றிருந்தாள். அவள் நிலைமை கவலைக்கிடமாக இருந்ததால், அந்தப் பகுதியிலுள்ள எல்லாப் பேயோட்டிகளும் ஒன்றாகக் கூடி அவளுக்குச் சிகிச்சை செய்ய முற்பட்டார்கள். எனவே, மறுநாள் காலை அந்தப் பேயோட்டிகளுடைய முதல் கூட்டம் ஏற்பாடாகியிருந்தது. அம்மாதிரி ஏழு கூட்டங்கள் நடந்த பிறகே அந்தப் பெண் குணம் அடைவாளாம். முதல் கூட்டத்துக்குப் பூர்வாங்கமாகப் பற்பல நிகழ்ச்சிகள் நடந்து கொண்டிருந்தன. எல்லாம் மர்மமாகவும் விசித்திரமாகவும் இருந்தன. பல பேயோட்டிகள் வந்து கொண்டும் போய்க் கொண்டும் இருந்தனர்.

அவர்களில் ஒருவன் தன்னுடைய இரண்டு சிஷ்யர்களின் உதவியுடன் ஏதோ ஒரு சூரணம் தயாரித்துக் கொண்டிருந்தான். அதைப் பார்க்க என்னை அனுமதித்ததால், நான் அவர்கள் என்ன செய்கிறார்களென்று கவனித்தேன். புகையிலையை அனலில் நன்றாக வாட்டினார்கள். அதேபோல் லவங்கப் பட்டை போன்ற ருசியுள்ள ஒரு மரப்பட்டையையும் நன்றாகக் காய்ச்சிக் கொண்டார்கள். மிளகு காரத்தை நிகர்த்த ஒருவித விதைகளையும் அனலில் வறுத்தனர். மூன்றையும் இடித்துப் பொடி செய்தனர். நான் ஒவ்வொன்றையும் பார்த்ததுமன்றித் தின்று ருசி பார்த்தேன். ஆனால் எதற்காக அந்த சூரணம்: அதை எவ்வாறு உபயோகப்படுத்தப் போகிறார்கள் என்பது மட்டும் வேறு யாருக்கும் தெரியாது. அதுதான் அதிலுள்ள ரகசியம்.

மறுநாள் காலை சீக்கிரமாகவே நான் தூங்கி எழுந்தேன். அந்தக் காட்டு ஜாதியினரும் அதிகாலையிலேயே எழுந்துவிட்டனர். மறுபடியும் அந்தப் பேயோட்டிகள் இப்படியும் அப்படியுமாக வந்துகொண்டும் போய்க் கொண்டுமிருந்தனர். அவர்களிருந்த குடிசையின் உட்புறம் தடித்த ஒரு கோரைப் பாயைக் கொண்டு இருபாதியாகத் தடுக்கப்பட்டிருந்தது. பேயோட்டிகளல்லாதவர்களும், பெண்களும், குழந்தைகளும் அந்தப் பாய்த் தட்டிக்குப் பின்னால் இருந்தனர். குடிசைக்கு முன்னால் ஒரு வயது முதிர்ந்த பேயோட்டி நாணல்களாலும் குடுக்கைகளாலுமான ஊதலைப் பலமாக ஊதி அதுவரையில் வந்து சேராத பேயோட்டிகளையெல்லாம் அழைத்தான்.

இவ்வளவு விரிவான ஏற்பாடுகள் செய்து ஆரம்பிக்கப் போகும் நிகழ்ச்சியைக் காண நான் மிகவும் பரபரப்படைந்தேன். இதைப் பார்க்காமலே நான் ஒருகால் இந்த இடத்தை விட்டு அகல நேர்ந்து விடுமோ என்று பயந்தேன். இதுதான் அவர்களுடைய பழக்க வழக்கங்களில் முக்கியமான அம்சம். அதைப் பார்க்காமல் எப்படிப் போவது? ஆனாலும் என்னால் செய்யக் கூடியது ஒன்றுமில்லை. பரிசுகள் வழங்கினாலும் பலனில்லை. பணிந்து கேட்டுக் கொண்டாலும் பிரயோசனமில்லை. நான் உள்ளே செல்ல அனுமதிக்கப்படவில்லை.

இருந்தாலும் கடைசி முறையாக முயற்சி செய்து பார்ப்பது என்று முடிவு செய்தேன். பேயோட்டிகளின் தலைவனை அணுகி, "நீங்கள் நடத்தப் போகும் இந்த நிகழ்ச்சியைத் தூரத்திலிருந்தபடியே பார்க்க எனக்கு அனுமதி கொடுங்கள். வெள்ளையர் வசிக்கும் பகுதிகளில் நானும் ஒரு பேயோட்டுபவன்தான்" என்று ஒரு பொய்யைக் கலந்து அவர்கள் பாஷையில் கூறினேன்.

அவர்களுடைய ரகசியத்தைக் கண்டு பிடிக்க இந்தத் தந்திரத்தைக் கையாளுவதைத் தவிர வேறு வழியில்லை.

"அப்படியா, இதை ஏன் நீ முன்னாடியே தெரிவிக்கவில்லை? நீயும் ஒருபேயோட்டியானால் எங்கள் நிகழ்ச்சியைப் பார்ப்பதுமன்றி, அதில் நீ பங்கு கொள்ளவும் வேண்டும். அப்போதுதான் உன்னுடைய சக்திகளையும் எங்கள் சக்திகளுடன் இணைத்துக் கொள்ள முடியும்" என்று அத்தலைவன் பதில் சொன்னான்.



ஏராளமானவர்களைக் கொன்று முதல் பரிசு பெற்றவன்

சிறிது நேரத்துக்கெல்லாம் யாரோ ஒருவன் வந்து என்னை அழைத்தான். ஒரு முற்றத்தின் முன்னால் எல்லாப் பேயோட்டிகளும் வட்டமாக உட்கார்ந்திருந்தனர். ஒவ்வொருவனும் ஒரு 'ஸ்டூலி'ன் மீது அமர்ந்திருந்தான். மொத்தம் பன்னிரண்டு பேர்கள் இருந்தனர். குறைந்த வயதுள்ள ஒரு பேயோட்டியின் பக்கத்தில் ஒரு காலி ஸ்டூல் போடப்பட்டிருந்தது. அதில் உட்காரும்படி என்னைப் பணித்தனர். அவர்களெல்லாரும் என்னையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தனர். அவர்களுக்கு நடுவில் ஒரு சதுர மேஜை போல் ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. அதன் மீது அவர்கள் முன்தினம் இடித்துப் பொடி செய்த சூரணம் முழுதும் ஜாக்கிரதையாகக் குவித்து வைக்கப்பட்டிருந்தது.

அதன் பக்கத்தில் மேஜை மீது சுமார் ஒரு கஜம் நீளமுள்ள நாணல் குழாயுமிருந்தது. சிறிது நேரம் அவர்களிடையே மௌனம்

நிலையது. அவர்கள் எல்லோரும் தத்தம் மனத்தை இவ்வுலக வியவகாரங்களிலிருந்து விலக்கி ஒருமுகப்படுத்திக் கொண்டிருப்பதாகத் தெரிந்தது.

பிறகு அவர்களின் தலைவன் நாணல் குழாயை எடுத்துக் கனிசமான அளவு சூரணத்தை அதில் திணித்து அதன் ஒரு நுனியைத் தன்னுடைய மூக்கில் அழுத்திக் கொண்டு மறு நுனியை அடுத்தவனிடம் நீட்டினான். அந்த அடுத்தவன் குழாயின் மறு நுனியிலிருந்துபலமாக வாயால் ஊதிக் குழாயிலிருந்த புகையிலை, லவங்கப்பட்டை, மிளகு சூரணமெல்லாவற்றையும் தலைவன் மூக்கினுள் செலுத்தினான். இதன் நெடியினால் அவன் இருமத் தொடங்கினான்; தும்மினான். கண்களிலிருந்து ஜலம் பெருகத் தொடங்கிவிட்டது. எனினும், அவன் மறுபடியும் குழாயில் சூரணத்தை இட்டு நிரப்பினான். மறுபடியும் முன்போலவே அடுத்தவன் குழாயை ஊதி, தலைவன் மூக்கினுள் சூரணம் முழுவதையும் செலுத்தினான். இவ்வாறு பத்துத் தடவைகள் நடந்தன. பதினோராவது முறை செய்த போது அவன் வாந்தி எடுத்தான். ஆனால் மேலும் மேலும் மூக்கினுள்சூரணம்செலுத்தப்படுவது மட்டும் நிற்கவில்லை. ஐம்பதாவது முறை சூரணத்தைச் செலுத்தியபின் அந்தத் தலைவன் எவ்வித மனித உணர்ச்சியுமின்றி ஒரு யந்திரம் போலாகி விட்டான். மொத்தம் இருநூற்றைம்பது தடவைகள் இவ்வாறு சூரணம் ஊதி ஊதி மூக்கில் திணிக்கப்பட்டதை நானே அன்று எண்ணினேன். தலைவனுடைய கண்கள் கண்ணாடி போல் உணர்வின்றி ஒளிவீசிக் கொண்டிருந்தன. மீண்டும் குழாயைநிரப்பி அடுத்தவனுடைய மூக்கிலே ஊதி ஊதித் திணித்தான். அவனால் நூறு தடவைகள் இவ்வாறு சூரணம் ஏற்றுக் கொள்ள முடிந்தது. மற்றவர்களின் சக்தி படிப்படியாகக் குறைந்து கொண்டே சென்றது. கடைசியிலிருந்த இரண்டு இளம் பேயோட்டிகளில் ஒருவன் பத்து முறையும் மற்றவன் பன்னிரண்டு முறையும்தான் செலுத்திக் கொள்ள முடிந்தது.

இந்தச் சூரணத்தின் பலனாகச் சில பேயோட்டிகள் பரவசமுற்ற நிலையில் இருப்பது போலக் காணப்பட்டனர். இறந்த முன்னோர்களின் ஆவி அவர்களுக்குட் புகுந்துவிட்டது! சம்பந்தமில்லாத வார்த்தைகள் அவர்கள் வாயிலிருந்து வெளிப்பட்டன. அவற்றைக் கேட்டுத் தலைவன் முன்னோர்களது ஆவிகளின் சித்தம் என்ன என்பதை உணர்ந்து விளக்கினான்.



காட்டு மக்களை
ஆட்டி வைக்கும் மந்திரவாதி

கடைசியாக என்னுடைய முறை வந்தது!

நானும் குழாயை என் மூக்கினுள் திணித்துக் கொண்டு மற்றவர்கள் செய்ததைப் போலவே கண்களைக் கெட்டியாக மூடிக் கொண்டேன். மூக்கின் துவாரத்தையே அடைத்துக் கொள்ள வேண்டுமென்று பிரயத்தனப்பட்டேன். ஆனால் முடியவில்லை. அடுத்த நிமிஷத்தில் ஊதப்பட்ட வேகத்தில் அந்த ராட்சஸ சூரணம் என் மூக்கினுள்ளே சென்று, அதைத் துளைத்துக் கொண்டு உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால் வரையிலும் உடல் முழுதும் பரவிவிட்டது. இருளடைந்த என் மனத்தில் பல நட்சத்திரங்கள் பளிச்சிட்டன. உலகமே இருளடைந்து பிரளய கால முடிவுக்கு வந்து விட்டதோ என்று தோன்றியது. இவ்வாறு நீண்ட நேரம் அப்படியே உட்கார்ந்திருந்தேன். அல்லது சில நிமிஷந்தானா? எனக்குச் சரியாக ஒன்றும் நினைவில்லை. கடைசியாக, எப்படியோ சமாளித்துக் கொண்டுகண்ணைத்திறந்த போது, மற்றவர்களெல்லோரும் என்னைக் கேலியாகப் பார்த்துக் கொண்டிருந்தது தெரிந்தது. என்னுடைய சாமர்த்தியத்தைப் பற்றி அவர்கள் குறைவாகவே எண்ணினர் என்பது வெளிப்படை. நான் இப்போது அவர்களுடைய ''சகபேயோட்டி'' என்ற நிலையில் இருந்தேனல்லவா? எனவே இதைக் கடைசி வரையில் பார்த்து விட வேண்டுமென்று, தலைவன் பக்கம் திரும்பினேன். மேலும் சூரணத்தை என் மூக்கில் செலுத்துமாறு சைகை செய்தேன்.

அவன் இரண்டாவது, மூன்றாவது, நான்காவது முறை குழாயை ஊதிச் சூரணத்தைச் செலுத்தினான். ஐந்தாவது முறை செய்தபோது நான் மூர்ச்சித்து விழுந்து விட்டேன்.

எனக்கு நினைவு வந்தபோது, நான் ஒரு ஓடைக்கருகில் என் உடல் நனைந்து கிடத்தப்பட்டிருந்தேன். நான் அங்கு எப்படிச் சென்றேன்? நான் முற்றிலும் நினைவிழக்கவில்லையாம். உட்கார்ந்த இடத்திலிருந்து அரை நினைவுடனேயே எழுந்து நானாகவே நடந்து, சூரணத்தின் எரிச்சலைத் தணித்துக் கொள்ள, ஓடையை அடைந்தேனாம். ஓடையில் விழுந்து முழுகிவிடாதபடி டாக்கிரி என்ற மற்றொரு பேயோட்டி என்னை இழுத்து வெளியில் போட்டானாம். இதையெல்லாம் அவன் பிற்பாடுதான் எனக்குச் சொன்னான்.

மறுநாளும் இதே நிகழ்ச்சிதான். முதல் நாள் அதில் நான் பங்கு கொண்டுவிட்டதால், இரண்டாம் நாளும் கலந்து கொள்ள வேண்டியிருந்தது. சிறிது சிறிதாக இந்தச் சூரணத்

தின் நெடிக்கு! நான் பழகிப்போய்னேன். இறுதிக் கட்டத்தில் நாற்பது முறை என்னால் தாங்க முடிந்தது. இது ஒரு சாதனையாகவே கருதப்பட்டது. நானும் அவர்கள் மதிப்புக்குரியவனாக ஆகிவிட்டேன். அவர்களுடைய ரகசியங்களை யெல்லாம் இனி நான் தெரிந்து கொள்ளத் தடை ஏதுமில்லை.

ஆமாம், அந்த நோயாளிப் பெண்ணின் கதி என்ன ஆயிற்று?

இதை அறிந்து கொள்ள ஆவல் கொண்டவனாக, ஒவ்வொரு கூட்டத்தின் பிறகும் அந்தப் பெண்ணைப் பார்த்துவரச் சென்றேன். ஆறுவது நாள் முதல் நாள் எப்படி இருந்தாளோ அவ்வாறேதான் அந்தப் பெண் காணப்பட்டாள். குணமடைந்ததாகத் தெரியவில்லை.

அவர்கள் முறையில் எனக்கு இருந்த சந்தேகத்தைத் தெரிவித்தபோது, "நான்தான் ஏழு முறை கூட்டம் போட வேண்டுமென்று சொன்னேனே. இதுவரை ஆறு கூட்டங்கள் தானே நடந்திருக்கின்றன?" என்று அபைடோ சொன்னான்.

ஏழாவது கூட்டம் முடிந்ததும் அந்தப் பெண்ணைப் பார்க்கச் சென்றேன். அவள் படுக்கையில் காணப்படவில்லை. அந்தப் பெண் முற்றம் முழுதும் ஓடியாடி மற்றச் சிறுமிகளுடன் கொம்மாளமடித்துக் கொண்டிருந்தாள். அவள்தான் நோய்வாய்ப்பட்டிருந்தவள் என்றால் எவரும் நம்பவே மாட்டார்கள்.

இந்த விசித்திரத்தை என்னால் புரிந்து கொள்ளமுடியவில்லை. எங்கள் எல்லோருக்கும் ஏதோ ஒரு நல்ல காரியம் செய்து முடித்தோம் என்ற உணர்ச்சிதான் இருந்தது. "நாங்கள்" என்று என்னையும் சேர்த்துக் கொண்டுதான் சொல்லுகிறேன். ஏனெனில் அந்தப் பெண்ணின் தகப்பனார் பேயோட்டி வைத்தியர்களுக்குச் சன்மானம் வழங்கியபோது, எனக்கும் சேர்த்துத்தான் வழங்கினார். பக்குவம் செய்யப்பட்ட குரங்கு மாமிசம்தான் எங்களுக்குச் சன்மானம்.

காட்டுப் பிரயாணத்தின் பன்னிரண்டாவது நாள் நாங்கள் உயூரு என்னும் ஜாதியினர் வசித்த பகுதியை அடைந்தோம். இந்த மரபைச் சேர்ந்தவர்கள் அங்கு சுமார் நூறு பேர்கள் இருந்தனர்.

நாங்கள் அவர்கள் முன்னால் திடீரென்று தோன்றியது, அவர்களுக்கு அதிர்ச்சியை உண்டாக்கியதாகத் தெரிந்தது. ஏனெனில் அவர்கள் புதியதாக வீடு கட்டி அதில் குடிபுகும் விழாவைக் கொண்டாடிக் கொண்டிருந்தனர். அன்று அவர்கள் கொண்டாட்டத்தின் கடைசி நாள். அதற்காகப் பேயோட்டிகளின் கூட்டமொன்று ஏற்பாடாகியிருந்தது. அன்று இரவு இறந்த முன்னோர்களின் ஆன்ம சாந்திக்காக ஒரு விருந்தும் நடக்க இருந்தது.

அன்று அங்கே தங்கி அவர்கள் பழக்க வழக்கங்களில் புதுமையான அம்சங்கள் ஏதேனும் உள்ளதா என்பதைக் கண்டறிய ஆவல் கொண்டேன். நாங்கள் அங்கு இருக்கலாமா என்பதைப் பற்றி அவர்களுக்குள்ளே சிறு விவாதம் நடந்தது. இறுதியில் நாங்கள் அன்றையப் பொழுது அங்கே தங்கலாம்



**காட்டு ஜாதியினரின் முக்கிய உணவான பாம்பு பக்குவம் செய்யப்படுகிறது!**

என்றும், பேயோட்டிகள் கூட்டத்தில் நானும் துபாரி ஜாதி பேயோட்டுபவர்களும் கலந்து கொள்ளலா மென்றும், அந்தத் தலைவனே எங்களுக்கு அனுமதியளித்தான். ஆனால் ஒரு கண்டிப்பான நிபந்தனை. அவர்கள் வசித்த பொதுக் குடிசைக்கு அப்பால் குறிப்பிட்ட ஒரு இடத்தில் காட்டிலேயேதான் நாங்கள் எல்லோரும் அன்றிரவு தூங்க வேண்டும். ஏனெனில் இந்தக் குடிசையில்தான் முன்னோர்களின் ஆவிகளுக்கு விருந்துபசாரம் நடக்க இருந்தது.

பூதாவேசத்துக்கான கொலு உச்சிப்போது கூடியது. துபாரி ஜாதியினரிடையே கூடினது போலவேதான் இங்கும் நடந்தது. ஆனால் ஓரேடே என்ற பெயருள்ள அவர்கள் தலைவன் சூரணத்தைக் கணிசமான அளவு தன் மூக்கின் வழியே செலுத்திக் கொண்ட பின்னர், அவனுள் 'ஜாகௌர்' என்ற காட்டு மிருகத்தின் ஆவி புகுந்து கொண்டது. அவன் கைகளைத் தரையில் ஊன்றி ஒரு புலி தாவுவதுபோல் நடக்க ஆரம்பித்தான். அதைப் போலவே ஊளையிட்டான். தாவித் தாவிப் பாய்ந்தான். இவ்விதம் சாதாரணமாக அவனால் குதிக்கவே முடியாது. அந்த முற்றம் முழுதும் இவ்வாறு சுற்றிச் சுற்றிக் குதித்து விட்டுக் கடைசியாக மற்றொரு ஊளை விட்டான். அவன் இடத்துக்குத் திரும்பினான். தலையை உதறி விட்டு நிமிர்ந்து நின்றான். அவன் முகம் வெளிறிப் போயிருந்தது. ஆழ்ந்த தூக்கத்திலிருந்து விழித்திருந்தவன் போல் காணப்பட்டான்.

இது அன்றைய நிகழ்ச்சியில் முதல் கட்டம். இப்போது மறுபடியும் அந்தச் சூரணத்தை முன்போலவே ஏற்றுக் கொண்டபின், இரண்டாவது கட்டம் ஆரம்பமாயிற்று. நாங்கள் எல்லோரும் நாடக மேடையில் உட்காருவது போல் வரிசையாகப் பல வரிசைகளில் உட்கார்ந்தோம். எங்களுக்கு முன்னால் ஒரு காலி இடத்தில் தலைமைப் பேயோட்டி ஒரு சிவப்பு பக்ஷி இறகைக் குத்திட்டுத் தரையில் நிற்க வைத்தான். அதன் நுனி சூரியனை நோக்கியிருந்தது. இந்த இறகைச் சுற்றி நீண்ட சடங்கு நடந்து கொண்டிருந்தது. தன்னுடைய உடல் முழுவதையும் தடவித் தடவி, தூர்த் தேவதைகளின் வாடையே இல்லாத



**மந்திரவாதி இந்தக் கட்டுரை ஆசிரியரின் மூக்கில் பொடியை ஊதுகிறான்.**

படி தலைமைப் பேயோட்டி ஏதேதோ செய்து கொண்டிருந்தான்.

அதே போல் எனக்கும் இதர பேயோட்டிகளுக்கும் கூட அவனே தடவித் தடவி விட்டு எல்லோரையும் சுத்தி செய்தான். பிறகு அந்த இறகினிடம் சென்று அதைச் சுற்றிச் சுற்றி மேலும் பலவித சடங்குகள் செய்தான். எல்லாம் துர்த்தேவதைகளை விரட்டுவதற்காகத்தான். பிறகு தன் இருகைகளையும் உயரத் தூக்கி ஆகாயத்திலிருந்து சுபதேவதைகளை அந்த இறகில் ஆவாஹனம் செய்தான்.

''இனிமேல் இங்கே இருப்பது சாத்தியமல்ல'' என்றே எனக்குத் தோன்றியது. ஆனால் அப்போது தான் அந்த விசித்திரமான சம்பவம் ஏற்பட்டது. நடுவிலிருந்த அந்தச் சிவப்பு இறகு வலமும் இடமுமாக அசைய ஆரம்பித்தது. முதலில் மெதுவாகவும் கம்பீரமாகவும் ஒரு கடிகாரத்தின் குண்டு அசைவதுபோல் ஆடியது. நாங்கள் கல்லெனச் சமைந்து போனோம். அது ஏதோ உயிரே பெற்று விட்டது போலவே தோன்றியது. இவ்வாறு சில நிமிஷங்கள் ஆடிய பிறகு அது நிலைத்து நின்றது. மறுபடியும் முன் போலவே அசைய ஆரம்பித்தது.

இந்த இறகின் சலனத்துக்கு வெளியிலிருந்து எந்த வித சக்தியையும் காரணமாகக் கூற முடியவில்லை. அப்படி ஒன்றையும் நான் காணவில்லை. என் முன்னால் நிகழ்ந்ததற்கு என்னால் எவ்வித விளக்கமும் சொல்ல முடியாது. பேயோட்டிகளில் ஒருவன், ''ஆவிகள் எல்லாம் எங்கள் அழைப்பை ஏற்றுக் கொண்டு விட்டன. இன்றிரவு எங்கள் விழாவுக்கு அவர்கள் வருவார்கள். இதுதான் இந்தச் சிறகின் அசைவுக்கு அர்த்தம்'' என்றான்.

பிற்பகல் பொழுதை அன்றிரவு வரப் போகும் முன்னோர்களின் ஆவிகளை வரவேற்பதற்குரிய ஏற்பாடுகளைச் செய்வதில் கழித்தோம். முன்னாடியே சுத்தம்செய்யப்பட்ட குடிசையின் ஒரு தனி இடத்தில் உணவுவகைகளும் பான வகைகளும் நிரம்பிய பெரிய பாத்திரங்கள் இரண்டு வரிசைகளாக வைக்கப்பட்டன.

மாலைப் பொழுதானதும் நாங்கள் நால்வரும் அந்தத் துபாரி ஜாதியாரும் எங்கள் கயிற்று ஏணைகளை எடுத்துக் கொண்டு அந்த இடத்துக்கப்பால் நூறு கஜத்தில் படுக்கச் சென்றோம். உயூரு ஜாதியினர்கள் அந்தக் குடிசைக்குள் சென்று அங்கேயே அடைந்து கிடந்தனர்.

மற்றவர்களெல்லாம் தூங்கி விட்டபின்னர் நான் எழுந்து குடிசைப் பக்கமாகச்சென்றேன்: அவர்கள் கண்களில் படாமல், மறைவான இடத்திலிருந்து குடிசைக்குள் என்ன நடக்கிறதென்று கவனிக்கத் தொடங்கினேன்.

நிசப்தம் நிலவிய அக்குடிசையிலிருந்து குறிப்பிட்ட ஒரு நேரத்தில் மரத் துண்டுகள் விழுவது போலும், குடிசைக் கம்பங்களின் மீது மரக் கட்டைகளால் தட்டுவது போலும், வைக்கோல் கூரையைக் கம்புகளால் அடிப்பது போலும் சத்தம் கேட்டது. இறந்தவர்களது ஆவிகள் குடிசைக்குள் வந்து புகுந்தன என்பதற்கு இதுதான் அறிகுறி. இதை அங்கு கூடியிருந்த அந்த ஜாதிப் பெண்டிரும் சிறுவர்களும் புரிந்து கொண்டனர் என்றே தோன்றியது. அவர்கள் பரபரப்பெய்தி மெய் மறந்து கூக்குரலிட்டனர்.

கால்மணி நேரம் சென்றதும் இந்தச் சத்தம் அடங்கியது. பிறகு இனிமையான கீதம் தாழ்ந்த குரலில் கேட்கத் தொடங்கியது. மேலுலகத்துக்கான பாட்டு போல் இருந்தது. பாட்டு ஓசையில் அந்த ஜாதித் தலைவன் கச்சிநாமுவின் குரல் கணீரென்று தனித்துக் கேட்டது. குடிசைக்குள் புகுந்து விட்ட ஆவிகளில் சில அவன் மூலமாகப் பாடினர் என்பது நன்றாகவே விளங்கியது.

மேலும் அரை மணிக்குப் பின், பெண்கள் பாடும் ஓசையும் கேட்டது. இறந்தவர்களின் ஆவிகளில் பெண்களின் ஆவியும் கூடியிருந்தது என்பது திண்ணம். முதலில் தயங்கித் தயங்கி ஆரம்பித்த இந்தப் பாட்டு போகப் போக விறுவிறுப்புற்றது. இந்தப் பாட்டுக்களின் இனிமை என்னைப் பரவசப் படுத்திவிட்டது.

அந்த இருட்டின் அமைதியில் பாட்டுகளின் வார்த்தைகள் கூடத் தெளிவாகக் கேட்டன. ஆனால் அவற்றின் பொருளைக் கூற அங்கே யாரும் இல்லை. எனக்குத் தெரிந்த வார்த்தைகளைக் கொண்டு அவற்றுக்குப் பொருள் கண்டு பிடிக்க முடிய வில்லை.

பாட்டுகள் முடிந்ததும் காலடிச் சத்தம் குடிசைக்குள் கேட்டது. மண்பாண்டங்கள் ஒன்றோடொன்று இடிபடுவது போலும், சுவைத்துத் தின்பது போலும் ஓசை கேட்டது. மேலுலகத்து ஆவிகளின் பசி அகரப் பசியாகத்தான் இருந்திருக்க வேண்டும்.

அன்றிரவு முழுதும் அவ்விருந்து நடந்தது. விடியற்காலம் ஆவிகளெல்லாம் விடை பெற்றுச் சென்றன. முன் போலவே கம்பங்களைத் தட்டுவது போன்ற ஓசையும் கூரையை அடிப்பது போன்ற ஓசையும் கேட்டன. இவை தான் ஆவிகள் திரும்பிச் செல்லுகின்றன என்பதற்கு அடையாளமாகும்.

காலையில் இரவெல்லாம் கண் விழித்ததால் சோர்வுற்றிருந்தாலும் அந்த ஜாதியினர் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கியிருந்தனர். ''நேற்றிரவு பாட்டு எப்படியிருந்தது?'' என்று அவர்கள் என்னைக் கேட்டனர்.

''உங்கள் முன்னோர்களின் ஆவிகள் அற்புதமாகப்பாடுகின்றன'' என்று நான் பதிலளித்து விட்டு அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டேன்.

# ப்ரீஸ் சோப்புக்கு ஒரு 'புதுமைத் தோற்றம்'!




## புதிய மேலுறை

ரோஜா நிறமுள்ளது, லேஸ் போன்ற
சித்திர வேலைப்பாடு அமைந்தது

## புதிய வடிவம்




மழமழப்பு மிகுந்தது . . .
கண்கவரும் அழகுள்ளது

## அதிக நறுமணம்

உங்கள் மேனிமீது அதிக
நேரம் கமழ்ந்திருக்கும்

சரும ஆரோக்கியத்திற்கான ஆக்டமர் கலந்த சோப்—**ப்ரீஸ்**

BZ. 10-50 TM



## அத்தியாயம் 9

# பித்தமும் சித்தமும்

**வா**யச் சண்டை போட்டுக் கொள்வதும் சரி, கைச் சண்டை போட்டுக் கொள்வதும் சரி, அவ்வளவு விரும்பக்கூடிய விஷயங்களல்ல. அதற்காக இந்தக் காலத்தில் எதிரில் நிற்பவர் இடது கன்னத்தில் அறைந்தால் வலது கன்னத்தைத் திருப்பிக் காட்டிக் கொண்டிருக்கவும் முடியாது. தணிகாசலம் குமாரசாமியைவிட உடல் வலுவில் குறைந்தவனல்ல. ஆனால் குமாரசாமி வயதில் சிறிது மூத்தவர்; செங்கமலத்தின் கணவர். அவரோ அவன் எதிரில் நின்றுகொண்டு அவனை, 'நூறுமுறை தூக்கில் போட்டால் என்ன?' என்று கேட்டுக்கொண்டிருக்கிறார்.

சாலையின் சந்தடியற்ற இருட்டில் குமாரசாமியுடன் நேருக்கு நேர் நின்றுகொண்டு அவன் திடீர்த் தாக்குதலை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய தோளில் பதிந்த அவரது வலது கரம் நடுங்கியது. "நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்று திரும்பவும் கேட்டார்.

"இனிமேல் சொல்வதற்கு ஒன்றுமில்லை."

"அப்படியானால்?..."

"என்னை நூறு தரம் தூக்கில் போடுவதற்கு முன்னால் உங்களை ஆயிரந் தடவைகள் தூக்கில் போட வேண்டும். அப்போதுகூட என் கோபம் தீராது."

"என்ன!" அவருடைய பிடியில் அழுத்தம் தெரிந்தது. இலேசாகத் தோள் வலியெடுத்தது.

"கதையில் வரும் கதாநாயகரை நான் கடைசியில் நல்ல மனிதராய் மாற்றியிருக்கிறேன். மனம் திருந்தி மனைவியுடன் வாழ்வதாக எழுதியிருக்கிறேன். நான் அப்படிச் செய்திருப்பது தப்பு. அவரை மன்னிக்க முடியாத குற்றவாளியாக்கிச் சுட்டுத் தள்ளியிருக்க வேண்டும். துப்பாக்கியில் குண்டுகள் தீருகிற வரையில் சுட வேண்டும்!"

அவர் தாக்கினால், எதிர்த் தாக்குதல் கூடாது என்று இதற்குள் முடிவு கட்டிவிட்டான் தணிகாசலம். இரண்டு அறைகளை அவரிட[illegible]த்து வாங்கிக் கொண்[illegible]ம் பரவாயில்லை. [illegible]கிக் கொண்ட பிறகு அவரைக் காரில் தூக்கிப் போட்டு, வந்த வழியில் திருப்பி அனுப்ப வேண்டும். பிறகு தனியாக இருளில் நடந்து போக வேண்டியது தான். கௌரியும் தாயாரும் வீட்டில் எதிர்பார்த்துத் துடிதுடித்துப் போய் விடுவார்கள்.

# பாவை விளக்கு

அகிலன்

அவனை ஒன்றும் செய்யாமல் அவர் மாத்திரம் காரில் ஏறிக் கொண்டார். நேரே அதை விரட்டிக் கொண்டு போனார். 'எங்கே போகிறார், என்ன செய்யப் போகிறார், தான் செய்ய வேண்டியது என்ன?' என்று அவனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. 'க்ஷணப் பித்தம் க்ஷணச் சித்தம் போலிருக்கிறதே!' என்று எண்ணிக் கொண்டு பேசாமல் நின்றான் தணிகாசலம்.

காரைத் திருப்பிக் கொண்டு வந்து முன் கதவைத் திறந்து விட்டு, ''ஏறுங்கள்!'' என்றார். ஏறிக் கொண்டவுடன் பழையபடியே கார் வந்து கடற்கரையோரமாக நின்றது. இருவரும் இறங்கி வந்து அருகில் இருந்த சிமெண்டுப் பெஞ்சியில் உட்கார்ந்தார்கள். குமாரசாமி தணிகாசலத்தின் கழுத்தில் அன்புடன் கையைப் போட்டு வளைத்துக் கொண்டு, ''ஏன் உங்களுக்கு என்னிடம் இவ்வளவு கோபம்?'' என்று கேட்டார். அந்தக் கேள்வியில் ஒலித்த கனிவும், அவரது கரத்தின் மிருதுவான ஸ்பரிசமும் தணிகாசலத்தை அடியுடன் மாற்றி விட்டன. அவன் கண்களும் கலங்கி விட்டன.

''செங்கமலம் என் தங்கை; உடன் பிறவாத தங்கை'' என்று அவன் தடுமாறினான். ''உடன்பிறந்த தங்கையென்றால் என் வீட்டில் வைத்திருக்கலாம். யாரும் ஒன்றும் குற்றம் குறை சொல்ல மாட்டார்கள். நான் இப்போது கையாலாகாதவன். செங்கமலம் படும் துன்பத்தைப் பார்த்தபிறகு என்னால் சகிக்க முடியவில்லை.''

அவர் கரம் அவன் தோளிலிருந்து நழுவியது. ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்து இழுத்தார். தணிகாசலம் தொடர்ந்து பேசினான்: ''ஒரு மனிதனுக்கு மற்றொரு மனிதரின் மனத்தை நோகச் செய்ய உரிமை கிடையாது. நானும் இதையெல்லாம் யோசித்துப் பார்த்தேன். எனக்கு வேறு வழிகள் தோன்றவில்லை. இப்படிச் செய்தால் செங்கமலத்துக்கு ஒரு வழி பிறக்காதா என்று நினைத்தேன். என்னுடைய நோக்கத்தில் தவறு இல்லை. செய்கைக்கு என்னை மன்னித்துக் கொள்ளுங்கள். அவளுடைய தலைவிதி எதுவோ அதன் படி நடந்து விட்டுப் போகட்டும். இனிமேல் செங்கமலத்துக்காக உங்களிடம் கெஞ்ச மாட்டேன்.''

''பயங்கரமான மனிதர் நீங்கள்.''

''உங்களுடைய ஆத்திரம் தீர என்னை நீங்கள் அடிக்கலாம். நான் எழுதிய குறிப்புக்கு இனிமேல் வேலை கிடையாது. தாராளமாய்க் கிழித்தெறியுங்கள். படமும் வேண்டாம்; பணமும் வேண்டாம்'' என்றான் தணிகாசலம்.

''இதையே தான் நான் படமாக எடுக்கப்போகிறேன்.''

"வேண்டாம்."

"நீங்கள் அதைக் கொடுத்து விட்ட பிறகு முடிவு என்னுடையதுதானே?"

"நோக்கம் நிறைவேறாத வரையில் அதை நீங்கள் தவறாக உபயோகித்துக் கொண்டதாக நான் நினைப்பேன். உங்களுடைய நண்பர்களிடம் நான் உண்மையைச் சொல்லி விடுவேன்."

"இன்னுமா என்னிடம் உங்களுக்குச் சந்தேகம்?" என்று கேட்டார் குமாரசாமி. "எந்த விஷயத்தை அவர்கள் என்னிடம் நேரில் சொல்லி வந்தார்களோ, அதை நீங்கள் எழுதிக் கொடுத்திருக்கிறீர்கள். நான் இப்போது பழைய குமாரசாமி இல்லை. போன வாரத்தில் தான் புதுப்பட்டிக்குப் போய் அவளைத் தேடி விட்டு ஏமாற்றத்துடன் திரும்பி வந்தேன். கடவுளே இப்போது உங்களை என்னிடம் அனுப்பி வைத்திருக்கிறார்."

தணிகாசலத்தின் ஆனந்தத்துக்கு அளவில்லாமல் போய் விட்டது.

"நேற்று வரையில் என் நண்பர்களைச் சேர்த்து மூன்று சகோதரர்கள் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். இன்றிலிருந்து நீங்கள் என் அருமைத் தம்பி; இனி நாம் நால்வர்" என்றார் குமாரசாமி.

தணிகாசலம் அவரிடம் செங்கமலத்தின் பம்பாய் விலாசத்தைக் கொடுத்தான். தனக்குத் தெரிந்த விவரங்களையும் கூறினான். மறுநாளே அவர் விமானத்தில் பம்பாய்க்குப் புறப்படுவதாகக் கூறினார். திரும்பி வந்தவுடன் அதே கதையைப் படமாக்க வேண்டுமென்றும் தெரிவித்தார். அந்தச் சிந்திப் பெண் இப்போது அவரிடம் இல்லையாம். அவள் நினைத்தபடி வாழ முடியவில்லை என்பதற்காகப் பம்பாய்க்கே திரும்பி விட்டாளாம். 'கெட்ட கனவுகளைப் போல் மத்தியில் நடந்தவைகளை மறந்து விடுவேன்' என்றார். "இதையேதான் படமாக்க வேண்டும். என்னைப் போல் எத்தனையோ குமாரசாமிகள் இங்கே இருக்கிறார்கள். இதனால் எனக்கொன்றும் வருத்தமில்லை. நீங்கள் எழுதியிருந்த விதம்தான் என்னைச் சித்திரவதை செய்து விட்டது. நேரில் நீங்கள் கண்டது போலவே பல சம்பவங்கள் புனையப்பட்டிருந்தன."

"நெஞ்சில் கலைஞனுக்கு நெருப்பு எரிந்து கொண்டிருந்தால், உண்மைகள் தாமாகவே அவனைத் தேடிக் கொண்டு வந்து சேரும்" என்றான் தணிகாசலம். "உண்மையை நேருக்கு நேர் காணப் பயந்தவனும் சரி, செத்துப் போன சடலமும் சரி, ஒன்றுதான்."

தணிகாசலத்தை அவன் வீட்டில் கொண்டு போய் விட்டு விட்டுத் தம் வீடு சென்றார் குமாரசாமி. ஒரு வாரம் கழித்துச் சந்திப்பதாய்ச் சொன்னார். மறுநாள் அவர் பம்பாய்க்குப் புறப்படப் போவதும், சில நாட்கள் அங்கு தங்கப் போவதும், குடும்பத்துடன் திரும்பி வரப் போவதும் நிச்சயமாகி விட்டன. வெற்றி வீரனைப் போல் இரண்டு வாய்ச் சோறு அதிகமாகச் சாப்பிட்டு விட்டுத் தணிகாசலம் படுக்கைக்குச் சென்று விட்டான்.

அதிகமாய்ச் சாப்பிட்டதாலோ, அல்லது மனத்தில் ஏற்பட்ட குதூகலத்தாலோ இதுவரையில் காணாத பல இன்பக் கனவுகளை அவன் அன்று கண்டான். கனவுகளில் செங்கமலம் வரவில்லை. உமா வந்தாள். தோற்றத்தில் அவள் பழைய உமாவாகவே இருந்தாலும், அவள் நடந்து கொண்ட விதம் மிகவும் விசித்திரமாக இருந்தது. தணிகாசலத்தின் கரங்களைப் பற்றி இழுத்துக் கொண்டு அவள் எங்கெல்லாமோ சென்றாள். மலைகளின் உச்சியில் அவர்கள் நடந்தார்கள். பஞ்சுப் பொதியலைப் போன்ற மேகங்களின் மத்தியில் கந்தர்வர்கள் போல் உலாவினார்கள். இறக்கைகளே முளைக்காமல் அவர்களால் எப்படி வானத்தின் உயரத்தில் எழும்பிப் பறக்க முடிந்தது? பறந்துகொண்டே உமா தான் எழுதிய கவிதை ஒன்றை அவன் காதருகில் இனிமையாகப் பாடினாள். ஏற்கனவே அவள் எழுதாத புதுக் கவிதை அது. அவளுடைய அருமையான காதற் கவிதை.

மறக்க முடியாத பழைய சம்பவங்களில் சில உருமாறிப் புது மெருகு பெற்றுக் கனவில் வந்து கலந்தன :—

தாஜ்மஹாலின் இடது புறத்துக் கோபுரத்தின் உச்சிக்கு அவனும் அவளும் ஒன்றாகப் புறப்பட்டார்களல்லவா? "நமக்கெல்லாம் இருதயம் இடது புறத்தில்தானே துடிக்கிறது? தாஜ்மஹாலின் இருதயம் இந்தக் கோபுரம். அதற்காகத்தான் என்னை இங்கே அழைத்துக் கொண்டு வந்திருக்கிறீர்கள்!" என்றாள்

உமா. படிகளில் ஏற முடியவில்லை. அவள் ஒன்றும் மூச்சுத் திணறிச் சிரமப்பட வில்லை. அந்தச் சிரமத்தை அவனிடமே விட்டு விடுகிருள். தன்னைத் தூக்கிச் சுமந்துகொண்டு மேலே போகச் சொல் கிருள். அதுவா அவனுக்குச் சிரமம்? மலர்மாலையை இருகரங்களிலும் ஏந்திக் கொண்டு செல்வதற்கு மனிதனுக்குக் கூலி வேண்டுமா என்ன? அந்த மலரின் மணம் தன் கரங்களால் அவன் கழுத்தை வளைத்துக் கொள்ளும்போது, அதை அவன் சுமப்பதற்குத் தயங்குவானு, என்ன? "வானத்தை முட்டிப் பிளக்கும் அளவுக்கு இந்தக் கோபுரம் உயரே, உயரே உயர்ந்திருக்கக் கூடாதா? படிகளின் எண்ணிக்கைக்கு ஓர் முடிவு எதற்கு? மேலே, மேலே, மேலே போய்க் கொண்டிருக்க வேண்டும்!"

அவர்கள் உச்சிக்குப் போய்ச் சேருவதற்குள் முழு நிலவும் வானத்தின் உச்சிக்கு வந்து விட்டது. பௌர்ணமி இரவின் நடு நிசி வேளையில் அங்கே இருந்து கொண்டு கீழே வளைந்து செல்லும் யமுனையை அவர்கள் பார்க்கிருர்கள். யமுனையின் நீல நிறம் அதனிடம் இல்லை. அது சலசலத்து ஓடவும் இல்லை. நிலவில் மயங்கி நின்ற தாஜ்மஹாலின் பேரழகைக் கண்டு அது சொக்கிப் போய் ஓடுவதையும் மறந்து அதே இடத்தில் நின்று விட்டது. நீருக்குப் பதிலாக நிலவைத் தேக்கிக்கொண்டு அது நின்றது.

கீழே வந்து பார்த்தால் பேராசிரியர் எங்கோ போய் விட்டார். காவற்காரர்களைக் கூட அங்கு காணும். அவர்களைத் தவிர அங்கு யாருமில்லை. நிலவில் தாஜ்மஹாலைப் பார்த்த பிறகுதான் தணிகாசலம் அதன் மேலிருந்த வெறுப்பை மாற்றிக் கொண்டான். இப்படி ஒரு அதிசயம், காதலின் சின்னம் உலகில் வேறெங்கும் இருக்குமா?

தாஜ்மஹால் உள் வாசலுக்கு நேர் எதிரிலிருந்த பளிங்கு மேடையில் அவர்கள் ஒன்ருக உட்கார்ந்தார்கள். நீர்த் தேக்கத்தில் மலர்ந்திருந்த அல்லி மலர்களை ஒவ்வொன்ருய்க் கணக்கெடுத்தாள் உமா. "இப்போது இந்தத் தண்ணீரில் தாஜ்மஹாலின் பிரதிபிம்பம் தெரியுமல்லவா? அந்தப் பிரதிபிம்பத்தில் நாம் இருவரும் இருப்போமல்லவா?" என்று கொஞ்சுவது போல் கேட்டாள் உமா. "நம்மை நாமே இப்போது தண்ணீரில் பார்த்துக் கொள்ள முடியாது. இந்தத் தவிப்பை வைத்துக் கொண்டு நான் ஒரு அருமையான கவிதை எழுதப் போகிறேன்."

அதற்குப் பிறகு உமா சிட்டாய்ப் பறந்தோடி அந்தப் பளிங்குக் கல் பாதை



கல்வித் துறையில் வாழ்நாள் எல்லாம் ஈடுபட்டு இலங்கையில் பல பள்ளி ஸ்தாபனங்கள் நிறுவி, பல ஆயிரம் தன் மாணக்கர்களை உத்பத்தி செய்யக் காரணபூதராயிருக்கும் பாடி ஸ்ரீ வேங்கடராமய்யரின் சதாபிஷேக வைபவம் புது தில்லி லோதி எஸ்டேட்டில் சிறப்பாக நடைபெற்றது. இலங்கையைச் சேர்ந்த பல அன்பர்களும் தில்லி அன்பர்களும் கூடி விழாவைச் சிறப்பித்தனர். வாழ்க, பாடி ஸ்ரீ வேங்கடராமய்யர்—ஸ்ரீமதி சரஸ்வதி அம்மாள்!

முழுவதும் நடனமாடினுள். இந்த உலகம் முழுவதையும் ஒரு குடைக் கீழ் கட்டியாளும் மன்னனின் செருக்குடன் தணிகாசலம் அந்த மேடையிலிருந்து, அவள் நடனத்தை ரசித்தான். உமாவுக்குத் தெரியாத கலைகள் ஏது? என்ன அற்புதமாக அவள் பாடுகிருள்! உமாவுக்கு முன்னல் செங்கமலத்தின் ஆடலும் பாடலும் எந்த மூலைக்கு? அவள் சோகப் பாடலைப் பாடினுள்; ஊழித் தாண்டவம் ஆடினுள். உமா அப்படியெல்லாம் செய்யவில்லை. இளவேனிற் காலத்தில், தமிழகத்துப் பொதிகை மலைச் சாரலில், பூத்த ஒரு சிறு மலர்க் கொடி அங்கே வந்து ஆனந்த நடனமாடுகிறது. தன் இளமையையும், அன்பையும், ஆசையையும் பாடுகிறது. ஆஹா!......

கனவு கலைந்தது. பொழுது விடிந்தது. சந்திரனுக்குப் பதிலாகச் சூரியன் அவனைக் கிள்ளி எழுப்பினுன். தணிகாசலம் முதலில் பொழுது விடிந்ததற்காக மிகவும் கவலைப்பட்டான். அடுத்தாற் போல் தான் கண்ட கனவுகளுக்காக வருத்தப்பட்டான். காணத் தகாத கனவுகள் அல்லவா அவை!

ஒருபோதும் உமா இப்படியெல்லாம் நடந்துகொண்டிருக்க மாட்டாள். அவளைப் பற்றி இவ்விதமாகக் கனவு காண்பதே மிகப் பெரிய குற்றம்; மன்னிக்க முடியாத குற்றம். உமாவுக்கும் மற்றப்

பெண்களுக்கும் அப்போது வித்தியாசமென்ன? இந்தக் கனவைப் பற்றி அவள் கேள்விப் பட்டாலே அவனை மனிதனாக மதிக்க மாட்டாள். நினைவாக வருவதற்குப் பயப்படும் எண்ணங்கள் இப்படித் திருட்டுத்தனமாகக் கனவுகளாய் நெளிந்து பழிதீர்க்கப் பார்க்கின்றனவா? "உமா! என்னை மன்னித்துவிடு: நான் வேண்டுமென்றே கனவு காணவில்லை" என்று தனக்குள் அவன் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டான்.

பித்த மயக்கத்தால் ஏற்பட்ட இன்பக் கனவுகள் அவைகள். சூரியன் கொடுத்த சூட்டில் சிறிது சிறிதாகச் சந்திரன் எழுப்பிய பித்தம் மறைந்தது. சித்தத்தின் தெளிவில் அவன் கண்ட அந்தக் காணக் கூடாத கனவுகளுக்குப் பிராயச் சித்தம் தேடிக் கொள்ளப் பார்த்தான்.

## அத்தியாயம் 10

# சந்தனக் கிளை விறகாகுமா?

பேராசிரியர் சந்திரசேகரன் தமது மனைவி சந்திரலேகாவுடன் தில்லியிலிருந்து சென்னைக்கு வந்து விட்டார். தணிகாசலம் குடியிருந்த மாடிப் பகுதியில் அவர்கள் தனிக் குடித்தனம் வைத்துக் கொள்ளப் போகிறார்களாம். சென்னைக்கு வந்த மறுநாள் இருவரும் தணிகாசலத்தைப் பார்ப்பதற்காக அவன் வீட்டுக்கு வந்தார்கள். சௌந்தரத்தம்மாளிடம் வேறு எங்கோ போவதாகச் சொல்லி விட்டு, அவர் சந்திரலேகாவை அழைத்துக் கொண்டு வந்தாராம். உமாவைப் பற்றிப் புதிய செய்திகள் ஏதும் அவர்களிடமிருந்து கிடைக்கவில்லை. அவனிடமே கேட்டு ஏமாற்றமடைந்தார்கள். 'எங்கே போயிருப்பாள்!' என்று எல்லோரும் கூடித் தலைகளைப் போட்டு உடைத்துக் கொண்ட பிறகு, அவர்கள் பேச்சு அடுத்த கட்டத்துக்கு வந்தது. கணவனும் மனைவியும் தங்களுக்குள் ஒரு விஷயத்தைக் கூடிப் பேசி கொண்டு வந்திருப்பார்களென்று தணிகாசலம் ஒருவாறு ஊகித்து உணர்ந்து கொண்டான்.

சந்திரலேகாவுக்குச் சரியாகத் தமிழ் பேசத் தெரியா விட்டாலும், வீட்டுப் பெண்களுடன் அவள் கலகலப்பாகப் பழகினாள். கௌரியைப் பிரியத்துடன் அணைத்துக் கொண்டு அவள் உச்சியில் முத்தமிட்டாள். அவளுக்காக வாங்கி வந்த வெற்றிலை-பாக்கு, பூ, மஞ்சள், குங்குமம் முதலியவற்றை அவளிடம் கொடுத்து ஆசீர்வதித்தாள். பிறகு, கல்யாணி அம்மாளின் பாதங்களைத் தொட்டுப் பணிவுடன் வணங்கினாள். முதற் சந்திப்பிலேயே பெண்கள் இருவரும் அவளுடைய அன்பில் ஈடுபாடு கொண்டு விட்டார்கள். சௌந்தரத்தம்மாளின் கொடுமையான செருக்குக்கும் சந்திரலேகாவின் பரிவுக்கும் ஏணி வைத்தாலும் எட்டாதல்லவா?

பேராசிரியர் தலைகீழாக மாறிப் போயிருந்தார். புதுதில்லிக்குப் போவதற்கு முன்னால் அவரிடம் காணப்பட்ட நெஞ்சழுத்தம் இப்பொழுது இல்லை. மகளின் வேண்டுகோளுக்கே நேரடியாகப் பதில் சொல்லாமல் மழுப்பி விட்டவர் அவர். அவளுடைய கடிதத்தை எடுத்துக் கொண்டு அவனிடம் ஓடிவந்தபோது கூட, அவளைத் தேடிக் கண்டு பிடிப்பதில் மாத்திரம் அவன் உதவியை நாடினார். "அவள் இஷ்டப்படியே வாழட்டும்!" என்ற ஒரு சொல் அவர் வாயிலிருந்து அன்று வரவில்லை.—மூல காரணம் சௌந்தரத்தம்மாள் என்பதை அவன் கண்டு கொண்டான்.

சந்திரசேகரன் எடுப்பார் கைப்பிள்ளையாக விளங்கினார். பாதரசம் தடவாத வெறும் வெள்ளைக் கண்ணாடி அவர் மனம். அவருக்குப் பின்னால் சௌந்தரத்தம்மாள் நின்று கொண்டிருந்த போது அவள் கருத்தைத் தம் கருத்தாகப் பிரதிபலித்தார். இப்போது அந்தக் கண்ணாடிக்குப் பின் நின்று கொண்டிருந்தவள் சந்திரலேகா. சந்திரலேகாவின் பேச்சைக் கேட்டு, உமாவிடம் தாம் பராமுகமாக நடந்து கொண்டதற்காக மிகவும் வருத்தப் பட்டார். இனிமேல் மனமாற்றத்துக்கு இடமில்லை. "உமாவின் கடிதத்தைப் படித்து விட்டு இவரை வாட்டி எடுத்து விட்டேன்," என்றாள் சந்திரலேகா. பேராசிரியரும் "ஆமாம்" என்பதற்கு அடையாளமாகத் தலையாட்டினார். அத்துடன் நிற்காமல், "உமா வந்து விட்டால் சந்திரலேகா சொல்கிறபடியே செய்து விடலாம்" என்றும் கூறினார்.

'சந்திரலேகா சொல்லுகிறபடியா?' தணிகாசலம் சந்திரலேகாவைத் திரும்பிப் பார்த்தான். சிறிது கூடத் தயக்கமில்லாமல் சாதாரண விஷயம் ஒன்றைப் பேசுவதுபோல் சந்திரலேகா பேசினாள்: "உலகத்தில் நடக்காத அதிசயமா இது! எத்தனையோ பேர்கள் எப்படி யெல்லாமோ வாழ்கிறார்கள். உங்கள் மனைவியும் தாயாருமே ஒப்புக் கொள்ளுகிறார்

கள். தவிர்க்க முடியாத நிலை என்று தெரிந்த பிறகு, நாமெல்லோரும் கூடி ஒரு நல்ல முடிவுக்கு வர வேண்டியது தான். வீணுக நீங்கள் ஏன் இப்படிக் குழம்பித் தவிக்க வேண்டும்?''

"என்ன முடிவு என்பதையும் நீயே சொல்லிவிடு'' என்றார் பேராசிரியர்.

''நீங்களே உங்கள் வாயால் சொல்லுங்கள்'' என்றாள் சந்திரலேகா.

"உமாவை இனி நீங்கள் தடையின்றிக் கல்யாணம் செய்து கொள்ளலாம்.''

"உமா இப்பொழுது எங்கே இருக்கிறாள்?'' என்று சிறிது எரிச்சலுடன் கேட்டான் தணிகாசலம்.

''அதுதான் ஒருவருக்கும் தெரியவில்லை.''

சிரிப்பதா, அழுவதா என்று அவனுக்கும் தெரியவில்லை.'' அவள் இங்கே இல்லாதபோது இந்தப் பேச்செல்லாம் எதற்கு?''

பேராசிரியர் இதனால் ஒன்றும் சோர்வடையக் காணோம். உமா அவருக்கு எழுதிய கடிதத்தைப் பிரித்துக் காட்டி, "முதலில் உங்கள் முடிவைச் சொல்லுங்கள்'' என்று கேட்டார்.

"முதலில் உமாவின் முடிவைத் தெரிந்து கொள்ளுங்கள். அவள் கல்யாணத்தை விரும்பவில்லை.''

"என்ன! அப்படியானால் அவள் எழுதிய எழுத்து பொய்யாகுமா?''

"எழுத்துப் பொய்யல்ல; அதன் பொருளை உணர்ந்து கொள்ளத்தான் உங்களுக்குத் தெரியவில்லை.''

கடிதத்தைப் பார்த்தபடியே அவளிடம் பேராசிரியர் பேசினார்.

"'அவர் ஒருவரைத் தவிர, கௌரிக்கும் அத்தைக்கும் சம்மதம்தான்' என்று அவள் எழுதியிருக்கிறாள். மனைவியாக வாழ்வதாகவும் சொல்லியிருக்கிறாள். இதைவிடத் தெளிவாக அவள் எப்படித் தன் கருத்தைச் சொல்ல முடியும்?''

"நெருக்கடி, நிர்ப்பந்தம், அபவாதம் இவைகளைத் தாங்க முடியாமல் இவள் இப்படி உங்களுக்கு எழுதியிருக்கிறாள். இதை நான் நம்பவில்லை.''

பேராசிரியருக்குக் கோபம் வந்துவிட்டது. "அவள் ஊரை விட்டு ஓடியதற்கு இதுவரையில் நானே முழுப் பொறுப்பென்று நினைத்துக்கொண்டிருந்தேன். உங்களுக்கும் இதில் பெரும் பங்கு உண்டு. என்னைவிட நீங்களே அவளை அதிகமாய் அலைக்கழித்திருக்கிறீர்கள்'' என்று ஆத்திரத்தோடு கூறினார்.

''பெரும் பங்கு என்ன? முழுப்பொறுப்பும் என்னுடையதாகவே இருக்கட்டும். நீங்கள் எனக்கு என்ன தண்டனை கொடுக்க நினைக்கிறீர்கள்?''

சந்திரலேகா குறுக்கிட்டு அவர்களுக்கு மத்தியில் சமாதானம் செய்ய முன் வந்தாள். தணிகாசலத்துக்கும் உமாவுக்கும் உண்மையிலேயே மண வாழ்வில் விருப்பம் இருப்பது போலவும், ஆனால் வேண்டுமென்றே அவர்கள் விலகிநிற்பது போலவும் அவள் பரிபூரணமாக நம்பினாள். தணிகாசலத்திடம் அவள் கூறினாள்: "பெண்களுடைய பொறுமை உணர்ச்சி ஒன்றுதான் உங்களுக்குத் தெரியும். அதனால் நீங்கள் வீண் கவலைப்படுகிறீர்கள். அளவற்ற பொறுமையும் அவர்களுக்கு உண்டு. இரண்டு பேருமே தாராளமாக விட்டுக் கொடுத்துப் பழகக் கூடியவர்கள். என்னையே எடுத்துக் கொள்ளுங்கள். நாளைக்கே உமாவின் அப்பா விரும்பினால் அவருக்கு மற்றொரு கல்யாணம் செய்து வைப்பேன். என்னைத் திருமணம் செய்து கொண்டதால் அவருக்கு என்ன சுகம்?''

"நீ சும்மாயிருக்க மாட்டாயா?'' என்று அவள் மீது சீறிப் பாய்ந்தார் பேராசிரியர் சந்திரசேகரன்.

இந்தப் பேச்சுக்களால் சந்திரலேகா உமாவுக்குமே இழுக்குத் தேடுவதுபோல்



பம்பாய்வாழ் தமிழ்ப் பிரமுகர் திரு டி. வி. ராமானுஜம் அவர்களின் புதல்வி சௌபாக்கியவதி சரோஜாவுக்கும் ஸ்ரீ டி. என். ராகவாச்சாரியார் அவர்களின் புதல்வர் ஸ்ரீ டி. ஆர். சாரநாதனுக்கும் சென்ற மாதம் பன்னிரண்டாம் தேதி பம்பாய் மாதுங்காவில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. திருமணத்துக்குப் பம்பாய் நகரப் பிரமுகர்களும், ஏராளமான நண்பர்களும், உறவினர்களும் விஜயம் செய்து மணமக்களை ஆசீர்வதித்தனர். வாழ்க மணமக்கள்!



தணிகாசலத்துக்குத் தோன்றியது. உமா விரும்புகிற வாழ்க்கை வேறு; இவர்கள் சொல்லுகிற வாழ்க்கை வேறு. உமாவை மற்ற யாராலுமே புரிந்து கொள்ள முடியாது போலும்! தணிகாசலம் மனம் புழுங்கி மௌனம் சாதித்தான்.

சந்திரலேகா அவனைத் தூண்டித் துருவிச் சில கேள்விகள் கேட்க முனைந்தாள்:

"நீங்களும் உமாவும் பல வருஷங்களாய்ப் பழகியிருக்கிறீர்கள். உங்களைப் பற்றிப் பேசி நீங்களே இதுவரையில் ஒரு முடிவுக்கு வந்ததில்லையா?"

"எங்களைப் பற்றிப் பேச எங்களுக்கு விருப்பமுமில்லை; நேரமுமில்லை; அப்படிப் பேசி யிருந்தாலும் அது வெறும் கற்பனைப் பேச்சுத்தான்."

"அவள்தான் பெண்; தன் மனத்தை மூடி மறைத்துக் கொண்டு உங்களிடம் பழகி யிருப்பாள். நீங்கள் ஆண்பிள்ளையாயிற்றே?......இப்படிக் கேட்பதற்காக நீங்கள் வருத்தப்படக் கூடாது. நீங்கள் அவளுடைய அழகில், இளமையில், ஒரு போதும் மயங்கியதில்லையா?"

தணிகாசலம் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான்.

"மனம் திறந்து சொல்லுங்கள். நான் உங்கள் தாயாருக்குச் சமம். அவளுடைய பேச்சும், சிரிப்பும், பார்வையும் உங்கள் கற்பனைகளைத் தூண்டவில்லையா? அவளை அடைய வேண்டும் என்று—உங்களுக்கே சொந்தமாக்கிக் கொள்ள வேண்டும் என்று—நீங்கள் ஆசைப்பட்டதில்லையா?"

"ஆசையில் பலவிதங்களுண்டு. எளிதில் கிடைக்கக் கூடிய பொருள்களுக்கு நான் அவ்வளவாக ஆசைப்படுவதில்லை. எனக்கு எளிதில் கிடைக்கக் கூடிய பொருளாக இருந்தாலும் இவள் மிக உயர்ந்த பொருளாக இருந்தாள்."

"என்ன உயர்வு இவளிடம்? உமாவும் சாதாரணப் பெண்தானே?"

"எல்லா மரங்களையுமே வெட்டிக் காயப்போட்டு அடுப்பில் விறகாக எரிக்கலாம். ஆசை நெருப்பு பற்றி எரியும் போது அது எந்த விறகென்று பார்ப்பதில்லை. சந்தன மர நிழலில் உட்கார்ந்திருப்பவனை, 'ஏன் அந்த மரத்தை வெட்டி அடுப்பில் போடவில்லை?' என்று நீங்கள் கேட்பது போலிருக்கிறது. சந்தன மரமும் மரந்தான்; கருவேல மரமும் மரந்தான். அவள் சந்தன மரமென்பது எனக்குத்தான் தெரியும். தெய்வமென்று என்னை நம்பி, அவளுக்காக என்னைத் தெய்வமாகவே நடிக்கவும் செய்து விட்டாள். எனக்குள்ளே இருந்த சிறுமையும் வெறியும் வெளிப்பட்டிருந்தால் என்றைக்கோ அவள் என்னைக் காறி உமிழ்ந்து விட்டு ஓடியிருப்பாள்" என்றான் தணிகாசலம்.

சந்திரலேகாவுக்கு இதைக் கேட்டவுடன் புல்லரித்தது. தான் இதுவரையில் நம்பிக் கொண்டிருந்த காரணத்தை விட, மற்றொரு விநோதமான காரணம் அப்போதுதான் அவளுக்குப் புலப்பட்டது. சந்தன மரத்தில் சிற்பங்கள் செய்யும் கலைஞனிடம் அவள் எப்படியோ அகப்பட்டு விட்டாள். அவன் எப்படி அவளைச் சாதாரண உணர்ச்சி நெருப்பில் தூக்கி எறியச் சம்மதிப்பான்?

பேராசிரியர் குறுக்கிட்டார்: "அவள் உங்களைக் காதலிப்பதாக உங்களுக்கே எழுதியிருக்கிறாளே!"

"'காதலால் கசிந்து கண்ணீர் மல்கி' என்று அடியார் கூட ஆண்டவனிடம் முறையிடுகிறார். மனத்துக்கு மனம் காதல் என்ற சொல்லுக்குப் பொருள் வேறுபடும்" என்றான் தணிகாசலம்.

"பிரசித்தி பெற்ற கிரேக்க ஞானி பிளாட்டோவின் மன வாழ்வு என்ற கருத்தில் உங்களுக்கு நம்பிக்கை இருக்கிறதா!" என்றாள் சந்திரலேகா.

"எனக்கு நம்பிக்கை யில்லை; அவள் நம்புகிறாள். அவள் நம்பிக்கையில் நான் ஏன் குறுக்கிட வேண்டும்?"

"அப்படியானால்...?"

"மன வாழ்வு வாழ்பவள் மனைவியாக வாழ முடியாது. உடல் பற்றுதலை விட மனப் பற்றுதல்தான் மிகவும் அபாயகரமானது. அவளை விட எனக்குக் குடும்ப வாழ்க்கையில் அநுபவ அறிவு உண்டு."

"நீங்கள்தான் அவள் போக்குக்கு விட்டுக் கொடுக்க வேண்டும்" என்றார் பேராசிரியர் சந்திரசேகரன்.

"விட்டுக் கொடுக்க வேண்டியவர் நான் இல்லை; நீங்கள்தான். அவள் கன்னியாகவே வாழட்டுமே!"

"நீங்கள் உமாவைக் கல்யாணம் செய்து கொள்ள முடியாதா?"

"முடியாது!"..

பேராசிரியரும் சந்திர லேகாவும் அவன் பேச்சைக் கேட்டுத் திடுக்கிட்டார்கள். என்றாலும் சந்திரலேகா, "இதை நான் உங்களுடைய முடிவான முடிவாக நினைக்கவில்லை; அவள் திரும்பி வந்து விட்டால், உங்களால் மறுக்க முடியாது" என்றாள். "முதலில் அவளைத் தேடிக் கண்டு பிடிப்போம்.

அதற்குள் நமக்குச் சண்டை எதற்கு?—வாருங்கள் போவோம்'' என்று பேராசிரியரை அழைத்தாள்.

அவர்கள் அவனிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றார்கள்.

* * *

சாயங்காலம் பையன் பரமசிவத்தை அழைத்துக் கொண்டு கடற்கரைக்குக் காற்று வாங்கப் போனான் தணிகாசலம். தண்ணீருக்கு முன்னால் போய் அமர்ந்தான். அவன் எதிரே எல்லையற்ற கடல் விரிந்து பரந்து கிடந்தது. அலைகள் கடற்கரை மணலில் வந்து அதைத் தழுவி முத்தமிட்டன. எத்தனை காலமாக இப்படிக் கடல் ஓயாமல் அலை அலையாக அலைத்துக் கொண்டிருக்கிறதோ என்று எண்ணமிட்டான். உடனே அவன் நினைவு பின்னோக்கிச் சென்றது.

ரவியைக் கல்யாணம் செய்து கொள்ளச் 'சொல்லி, முன்பு ஒருநாள் உமாவிடம் தூது சொல்ல வந்தானல்லவா? அதே இடம்; அதே நேரம்; அதே சூழ்நிலை; உமா மட்டும் இல்லை.

ஆனால் அவன் கற்பனை செய்து கொண்ட உமா, அன்றைக்கு மணலில் கன்னித் தெய்வம் போல், கண் மூடித் தியானத்தில் அமர்ந்தது போலவே இன்றும் அமர்ந்து கொண்டிருக்கிறாள். அன்றைக்குப் பேசிய அதே வார்த்தைகளை இன்றைக்கும் பேசுகிறாள்.

'நீங்கள் கடலைப் பார்த்துக்கொண்டே ஒரு கதையை உருவாக்குங்கள். உங்கள் மனத்தில் நர்த்தனமாடும் கலைத் தேவியின் திருவடிகளுக்கு நான் மானசீகமாக மலர் தூவிக் கொண்டே இருக்கிறேன். இந்தச் சூழ்நிலையில் ஒரு கற்பனை பிறக்காவிட்டால் நீங்கள் கலைஞரே அல்ல.—உம்! என்னைத் திரும்பிப் பார்க்காதீர்கள்!'

"உன்னை இனிப் பார்க்கவே முடியாதா, உமா?'' என்று அவனுக்குக் கதறி அழ வேண்டும் போல் இருந்தது.

''பார்க்கவே முடியாதா?''

அன்றைக்குப் பிறந்த கதையை அவன் இன்னும் எழுதவில்லை. அவளிடம் வேறு ஒரு கற்பனையைச் சொல்லித் தப்பித்துக் கொண்டான்.

உண்மையாக அன்றைக்குப் பிறந்த கற்பனை, அழியாச் சித்திரம் இதுதான்: இனம் புரியாத பருவத்தில் ஒரு இளைஞனின் மனம் தனக்கேற்ற காதலியின் சித்திரத்தைத் தன் மனத்தில் வரைந்து மகிழ்கிறது. வயது வளர்ந்து உலகத்தின் சிறுமைகளில் அவன் அடிபட்டு உழன்ற பின்னர், அந்தக் காதலி மெய்யாகவே அவன் முன்னால் வந்து நிற்கிறாள். அவன் இதயத்தில் எப்பொழுதோ இடம் பெற்ற கற்பனைச் சித்திரம் உருவம் பெற்று உயிர் பெற்று ஆடிப்பாடிக் கொண்டு, பேசிச் சிரித்துக் கொண்டு அவன் முன்னே வந்து நிற்கிறாள். அவனிடம் பழகுகிறாள். மனம் விட்டுப் பழகுகிறாள். அவனுக்கு எல்லா விதத்திலும் உதவிகள் புரிகிறாள். அவள் இல்லாமல் அவனால் வாழ முடியாதோ என்ற நிலை கூட ஏற்படுகிறது. இந்தச் சமயத்தில் அவள் அவனைக் கல்யாணம் செய்து கொள்ளக் கேட்க வேண்டும் என்ற எண்ணத்துடன் அவன் முன்னே வந்து நிற்கிறாள். 'நீ எனக்குத் தகுதியானவள் அல்ல; என்னைவிட உயர்ந்தவள். சந்தனக் கிளையை முறித்து விறகாக்கச் சொல்கிறாயா? வேண்டாம். போய் விடு!' என்று அந்த இளைஞன் அவளைத் திருப்பி அனுப்புகிறான்.

திருப்பி அனுப்பப் பெற்ற உமா திரும்பியும் வருவாளா? வந்தால் அவனை எந்த முறையில் எப்படி ஏற்றுக் கொள்வது? கடல் அலைகள் ஓயவில்லை: ஒழியவில்லை; அழியவில்லை. (தொடரும்)



கர்நாடக சங்கீதத்துக்கு ஆதாரமான நாகஸ்வரக் கலையில் சிறந்து விளங்கியவரும், பிடில் வித்வான் மாயூரம் கோவிந்தராஜ பிள்ளையின் மாமனருமான வழுவூர் ஸ்ரீ வீராசாமி பிள்ளை மே மாதம் 9உ காலை இறைவனடி சேர்ந்தார். எழுபத்திரண்டு வயதான திரு வீராசாமி பிள்ளை வித்வான்களின் மதிப்புக்கும் பாராட்டுதலுக்கும் பாத்திரமானவர். நாகஸ்வரத்திலும் வாய்ப்பாட்டிலும் சிறந்த வித்வான்களைத் தோற்றுவித்தவர். சென்னை ராஜ்ய சங்கீத நாடக அகாடமியால் கௌரவ உபகார மான்யம் அளித்துப் போற்றிப் பாராட்டப்பட்ட கலைஞர்.

அன்னாருடைய நண்பர்களுக்கும் குடும்பத்தாருக்கும் ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.




ஹிந்திப் படங்களிலெல்லாம் வர வர, பாஷைதான் ஹிந்தியாயிருக்கிறது. மற்றப்படி சங்கீதம், உடைகள், நடனம், பழக்க வழக்கங்கள் யாவும் ஆங்கிலப் பாணியையே பின்பற்றி வருகின்றன. இவ்வளவும் போதாக் குறைக்கு, படத்தின் பெயரே ஆங்கிலத்தில் வைக்கப்படுகின்றன. ஆனால், பாரதப் பண்பு என்று பேசுவதிலும் எழுதுவதிலும் மட்டும் குறைவே இல்லை.

“பன்னிரண்டாவது மணி” என்னும் இந்த ஹிந்திப்படம் ஒரு துப்பறியும் கதை— மர்மக் கொலையை முக்கிய அம்சமாகக் கொண்டிருக்கும் துப்பறியும் கதை. கொலை செய்தவன் மர்மமாகக் கொல்லவில்லை. பம்பாய் ரயில்வே ஸ்டேஷனில், பிளாட்பாரத்தில், நல்ல ஜனக்கூட்டத்தில், டில்லியிலிருந்து வண்டி வந்து நிற்கிறது. அதிலிருந்து இறங்கிய ஒரு பெண்ணைத் துப்பாக்கியால் ஒருவன் சுட்டு விடுகிறான். ஆனால் கொலைக் குற்றம் பானி சௌதுரி என்னும் அழகிய பெண் மேல் சுமத்தப்படுகிறது. அதற்குக் காரணம், அதே சமயத்தில் அவள் கையிலிருந்து ஒரு துப்பாக்கிக் குண்டு வெடித்ததுதான். உண்மைக் குற்றவாளி யார் என்பதுதான் கதை. அழகியின் காதலனே துப்பறிந்து, நீதிமன்றத்தில் வாதாடி வெற்றி பெறுகிறான்.

கதையில் சிக்கலுக்கு இடம் இல்லை. கொலையுண்டவளின் கணவன் அவளைக் கொலை செய்வதற்கு ஒரு ஆளை அமர்த்தி அவனிடம் ஒரு கைத் துப்பாக்கியைக் கொடுத்து விட்டு, அழகியின் ஹேம்பப் பையில் அவளுக்குத் தெரியாமல் இன்னொரு கைத் துப்பாக்கியைப் போட்டு, ஸ்டேஷனில் அதை எடுத்துச் சுடுகிறான். ஆகவே, கொலை செய்தவன் வேறு, அப்பொழுது சுடப்பட்ட துப்பாக்கியும் வேறு என்பது முன்னாலேயே தெரிந்து விடுகிறது.

பானி சௌதுரியாக நடிக்கும் வாஹிதா ரஹ்மான் படம் முழுதும் கவர்ச்சியாகத் தோன்றி, காதலித்து எல்லோருடைய உள்ளங்களையும் கவர்ந்து விடுகிறார். வாஹிதாவின் காதலனாகத் தோன்றும் குருதத் நன்றாக நடித்திருக்கிறார். அவர் துப்பறியும் கட்டங்கள் நன்கு படமாக்கப்பட்டிருக்கின்றன.

கொலைகாரக் கணவனாக வரும் ரஹ்மான், அழுத்தமான முகபாவங்களுடன் மிகவும் அநாயாசமாக நடித்திருக்கிறார். குருதத்தின் துப்பறியும் காரியங்களுக்கு உதவியாளனாக வரும் ஜானிவாக்கர் அவருக்கு உதவி செய்வதோடு மட்டுமல்லாமல் படத்தின் ஹாஸ்யப் பகுதிக்கும் உதவியாயிருக்கிறார்.

திரைக் கதையின் முற்பகுதி ஒரே ஐரோப்பிய நடனமாகவும், காதல் பாட்டுகளாகவும் போய் விடுகிறது. இடைவேளைக்குப் பிறகுதான் கதை ஆரம்பமாகி, முடிகிறது. இரவு பன்னிரண்டு மணிக்குக் கொலை நடக்கிறபடியினால் படத்துக்கு அந்தப் பெயர் வந்தது.

ஹிந்தியில் எத்தனையோ நல்ல படங்கள் வந்திருக்கின்றன. ஆனால், துப்பறியும் படம் என்ற பெயருடன் வெளி வந்திருப்பவைகளில் பெரும்பாலானவை உபயோகமற்றவை; தரம் குறைந்தவை. புலியைப் பார்த்துப் பூனை சூடு இழுத்துக் கொண்ட கதையாக மேல்நாட்டுக் கதையைக் காப்பியடிக்கும் வழக்கம் அதிகமாகிவிட்டது. ஆனால், அதிலும் வெற்றி பெறவில்லை. தோல்விக்கு உதாரணமாக “12-வது மணி” என்னும் இப்படத்தைக் கூறலாம்.

— காந்தன்



*புதுமை பெறுக!*
*இதம் பெறுக!*
*நளினமாய் இருங்கள்! நாள்முழுதும்!*

மணமுள்ள சார்மிஸ் டால்கம் பௌடர் உபயோகித்த பின் நீங்கள் பெறும் உணர்ச்சிகள் இவை. சார்மிஸ் குளுமையும் புத்துணர்ச்சியும் அளிக்கிறது ... உன்னத மனோ ரம்மிய மணம் கொண்டது.




# சார்மிஸ்
## டால்கம் பவுடர்

உன்னத மனோரம்மிய மணத்துடன்.

---

குழந்தைகளின் ஈரல், குலைக்கட்டி வியாதிகளுக்கு

# ஜம்மியின் "லிவர்க்யூர்"

## மாதாந்திர விஜயம்

எமது வாடிக்கையாளர்களின் நலனையும், சௌகரியத்தையும் முன்னிட்டு எமது டாக்டர் கீழ்க்கண்ட இடங்களில் ஒவ்வொரு மாதமும் குறிப்பிட்ட தேதிகளில் விஜயம் செய்கிறார். அப்பொழுது அவரை நேரில் கலந்து ஆலோசிக்கலாம்.

ஆலோசனை நேரம் : குறிப்பு:—காலை 9 முதல் 11 மணி வரை; மாலை 3 முதல் 5 மணி வரை

| இடம் | தேதி | இடம் | தேதி |
|---|---|---|---|
| கரூர் | 1 காலை | விருதுநகர் | 9 காலை 8 to 9 |
| சேலம் | 2 காலை & மாலை | கோவில்பட்டி | 9 10 to 12 : முற்பகல் |
| ஈரோடு | 3 காலை | தூத்துக்குடி | 9 மாலை |
| திருப்பூர் | 3 மாலை | திருநெல்வேலி | 10 காலை & மாலை, 11 காலை |
| கோயமுத்தூர் | 4 காலை & மாலை | ஸ்ரீவைகுண்டம் | 11 மாலை |
| பாலக்காடு | 5 காலை | அம்பாசமுத்திரம் | 12 காலை |
| பொள்ளாச்சி | 5 2 to 3 மாலை | தென்காசி | 12 மாலை |
| உடுமலைப்பேட்டை | 5 4 to 5 மாலை | திருவனந்தபுரம் | 13 காலை & மாலை |
| பழனி | 5 6 to 7 மாலை | ராஜபாளையம் | 14 காலை |
| திண்டுக்கல் | 6 காலை | சிவகங்கை | 14 மாலை |
| பெரியகுளம் | 6 மாலை | காரைக்குடி | 15 காலை & மாலை |
| மதுரை | 7 & 8 காலை & மாலை | தேவகோட்டை | 16 காலை |
| | | புதுக்கோட்டை | 16 மாலை |

சிலோன், மலேயா, பர்மா முதலான இடங்களுக்கு விநியோகஸ்தர்கள் தேவை

○●○

## ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்

சென்னை - திருச்சிராப்பள்ளி - கும்பகோணம்

# தரத்திற்கும் உறுதிக்கும் நிகரற்றது




# ஹத்திபாயின்

## ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள்

எப்பொழுதும் பிரகாசத்துடன், நீடித்து உழைப்பவை

* * *

**ஹத்திபாய் துளஸிதாஸ் & ஸன்ஸ்**

122, கன்ஸரா சால், பம்பாய் 2.



அரசியல் உலகத்தைப் போலவே, இலக்கிய உலகத்திலும் பெரும்புகழ் பெற்றவர், காலஞ்சென்ற மௌலானா அபுல்கலாம் ஆஸாத்.

புலமை பெருக்கெடுத்து ஓட, போதனை பரவோட அவர் இயற்றியிருக்கும் சிறந்த அரபிச் சிறுகதையொன்றைக் 'கல்கி' நேயர்களுக்குப் பெருமையுடன் அளிக்கிறோம். — ஆசிரியர்

# இமைக்கும் நேரத்தில்

மௌலானா அபுல்கலாம் ஆஸாத்

தமிழாக்கம் : ரா. வீ.

பாக்தாத் நகரத்திலே, 'ஹஜ்ரத் ஷேக் ஜுனீத் பாக்தாதி'யின் பெருமையும் எளிமையும் எவ்வளவுக் கெவ்வளவு பிரசித்தமோ, அவ்வளவுக் கவ்வளவு 'இப்ன சாபாத்'தின் திருட்டும் துஷ்டத்தனமும் பெயர் போனவை.

கடந்த பத்து ஆண்டுகளாக 'மதாயன்' சிறையில் 'இப்ன-சாபாத்' அடைபட்டிருந்தான். மக்கள் அவனது பயங்கரக் கொடுமைத் தாக்குதலிலிருந்து தப்பித் தைரியமாக வாழ்ந்து வந்தனர். ஆயினும் அவனது அச்சமின்மை, ஆணவச் செயல் சம்பந்தமான கதைகள் அவர்களுக்கு மறக்கவில்லை. எப்பொழுதாவது, ஏதாவது துணிகரத் திருட்டைக் கேள்விப்பட நேர்ந்தால், 'இதென்ன, இன்னொரு 'இப்ன-சாபாத்' பிறந்துவிட்டானா, என்ன ?' என்றே பேசிக் கொள்வார்கள்.

'இப்ன-சாபாத்'தின் குடும்ப விவரங்கள் முழுவதும் யாருக்கும் சரிவரத் தெரியாது. ஆம், அவன் முதன் முதலாகத் திருட்டுக் குற்றம் சாட்டப்பட்டு, தக்சர் தெருவில் பிடிக்கப்பட்டபொழுது, போலீஸ் ஸ்டேஷனில் அவனைப் பற்றி விசாரணை நடத்தினர். அதில் அவன் பாக்தாத் நகரத்தைச் சேர்ந்தவன் அல்ல என்பது வெளியாகியது. அவன் தாய் தந்தையர் 'தூஸ்' என்னும் இடத்திலிருந்து ஒரு வியாபாரிகள் கூட்டத்துடன் வந்து கொண்டிருந்தார்கள் என்றும், வழியிலே நோய்வாய்ப்பட்டு மரித்து விட்டார்கள் என்றும் தெரிய வந்தன. வியாபாரிகள் கூட்டம் அவன்மீது இரக்கம் கொண்டு, பாக்தாத் நகரத்திலே கொண்டு வந்து சேர்த்ததாம். இது அவன் சிறைப்பிடிக்கப்பட்ட இரண்டு ஆண்டுகளுக்கு முந்திய செய்தி.

அந்த இரண்டு ஆண்டுகளையும் அவன் எப்படி எங்கே கழித்தான் என்பது யாருக்கும் தெரியாது. கைது செய்யப்பட்டபொழுது அவனுக்கு வயது பதினைந்து. போலீஸ் ஸ்டேஷன் திண்ணையில் அவனைப் படுக்க வைத்துக் கசையடி கொடுத்தார்கள்; அப்பொழுதே விடுதலையும் செய்து விட்டார்கள்.

முதல் தண்டனை அவனிடம் அதிசயமான மாறுதல் ஒன்றை நிகழச் செய்தது. இதுவரை அவன் பயங்கொள்ளிப் பையனாக இருந்தான்; அடக்க ஒடுக்கமுள்ளவனாக இருந்தான். ஆனால் கசையடி வாங்கியபின் அச்சந் தவிர்த்த குற்றவாளியின் ஆன்மா அவன் உள்ளத்திலே குடிகொண்டு விட்டது. சிறிது காலத்துக்குள்ளேயே அவன் மிகுந்த துணிச்சல்காரனாகவும், தேர்ந்த திருடனாகவும் மாறி விட்டான்.

இப்பொழுது அவன் சிறுசிறு திருட்டுக்களை விட்டொழித்தான். முதன் முதலில் அவன் திருட முற்பட்டபொழுது இரண்டு நாட்கள் பட்டினி, அவனை ரொட்டிக் கிடங்குக்கு இழுத்துச் சென்றது. ஆனால் இப்பொழுதெல்லாம் அவன் பசியால் வாடி வயிற்றுத் தீயை அணைப்பதற்காகத் திருடப் போவதில்லை. திருட்டுத் தொழிலிலே ஒரு ஆர்வம் பிறந்து, அந்த ஆர்வத்துக்கு அடிபணிந்தவனாகித் திருடப் போனான். அதனால் அவன் கண் இப்பொழுது ரொட்டிக் கிடங்குகளைச் சல்லடை போட்டுச் சலிப்பதில்லை; நகைக் கடை

நடுவில் இருப்பவர்: இவரைத் தெரியுமா? ரொம்பத் தைரியசாலி. அயோக்கியனாக இருந்தால் அவன் முகத்துக்கு நேரே 'அயோக்கியன்' என்று தைரியமாகச் சுட்டிக் காட்டி விடுவார்!



கண்ணாடிக்காரர்: ஓஹோ! அப்படி யாரையோ சுட்டிக் காட்டி விட்டுத் தான் இப்போ வாரம்போலே இருக்கு!

களின் இரும்புப் பெட்டிகளையும், பெரிய வியாபாரிகளின் கிடங்குகளையும் சூறையாடத் திட்டம் போட்டது.

அவன் உள்ளத்தை வெற்றியின் வெறி, படைத் தலைவனின் உறுதி, போர்வீரனின் ஆண்மை, அறிவாளியின் ஆற்றல் ஆகியவை ஆட்கொண்டிருந்தன.

ஆயினும் உலகம் அவனைப் பாக்தாத் நகரத்துத் திருடனாகவே வைத்துப் பார்க்கத்தான் விரும்பியது. அதனால், இந்தக் கலையில் அவனது இயல்பான அத்தனை குணங்களும் பரிமளிக்கத் தொடங்கின; பட்டை தீட்டப் பெற்ற வைரத்தின் மெருகுடன் 'பளி'ரென்று பிரகாசிக்கத் தொடங்கின.

சில நாட்களில், 'இப்ன-சாபாத்'தின் கொடுஞ் செயல்கள் அவன் விஷயத்தில் ஆட்சி பீடம் அதிக அக்கறை செலுத்தும்படியான அளவுக்கு எல்லைமீறி அதிகரித்தன.

கடைசியில் ஒரு நாள் அவன் கைது செய்யப் பட்டான். நியாய ஸ்தலத்தின் தீர்ப்புப்படி கொலையாளியின் கொடுவாள் அவனது ஒரு கையைப் பதம் பார்த்து அகற்றிவிட்டது.

'இப்ன சாபாத்'தின் கை துண்டிக்கப் பட்டதே, உண்மையில் அது துண்டிக்கப் பட்டதா? சூரபதுமனின் தலைபோல, ஒரு கை போகப் பல கைகள் முளைத்துவிட்டன. ஒரு கைக்குப் பலம் கொடுக்கப் பல கைகள் தோன்றி, 'இப்ன-சாபாத்'தின் வெட்டுண்ட கைக்குப் பெருமை யளித்தன. அவன் ஈராக்கில் உள்ள எல்லாத் திருடர்களையும் துஷ்டர்களையும் ஒன்று சேர்த்துவைத்து ஒரு நல்ல குழு அமைத்துக் கொண்டான். ராணுவத் தளவாடங்களுடன் கொள்ளையடிக்கக் கூட முற்பட்டு விட்டான். கொஞ்ச காலத்துக்குள்ளேயே அவன் ஈராக் முழுவதையும் ஆட்டிப் படைத்து அயர அடித்து விட்டான்.

ஆனால் ஒரு தடவை அவன் தோழர்கள் அனைவரும் வெளியே போயிருந்த பொழுது, அவனும் ஓடத் தன்னைத் தயார் செய்து கொண்டிருந்த பொழுது, ஆட்சியினர் வந்து விட்டனர்; அவனைக் கைது செய்து விலங்கும் மாட்டி விட்டனர்.

இந்தத் தடவை அவன் ஒரு கொள்ளைக்காரன் என்ற முறையில் சிறைப்பட்டிருந்தான். அதற்கான தண்டனை மரணம் ஒன்றே. தனக்கு மரண தண்டனை அளிக்கப்பட மாட்டாது என்று உத்தரவாதம் அளித்தால், தனது தோழர்கள் அனைவரையும் பிடித்துத் தந்து விடுவதாக அவன் கோர்ட்டார் அவர்களிடம் கூறினான்.

இவ்விதமாக அவன் தப்பிவிட்டான். ஆனால் நூற்றுக்கு மேற்பட்ட அவனது தோழர்கள் மரண தண்டனைக்கு உள்ளாயினர். அப்படியும் அவனுக்கு ஆயுள் முழுவதும் சிறையில் செக்குமாடாக உழைத்து வாடி மடியும்படியான தண்டனை அளிக்கப்பட்டது.

கோடைகாலம். நள்ளிரவு கழிந்திருந்தது. கறுப்புப் போர்வையில் தன்னை மூடி மறைத்துக் கொண்டு ஒருவன் மௌனமாக மெதுவாக நடந்து கொண்டிருந்தான். அவன் ஒரு சந்து திரும்பி இன்னொரு சந்தில் நுழைந்ததும் ஒரு வீட்டை ஒட்டினாற் போலிருந்த ஆலோடிக்கு அடியில் போய் நின்று கொண்டான். அப்புறம் நீண்ட நெடிய மூச்சு விட்டான். எத்தனையோ நேரமாக அடங்கிக் கிடந்த மூச்சுக்குச் சுதந்திரமாக வெளிவர இடம் கிடைத்தது போலிருந்தது, அவன் மூச்சு விட்ட விதம். பிறகு வானத்தை அண்ணாந்து பார்த்து அவன் தனக்குத்தானே கூறிக் கொண்டான்:

"மூன்றும் யாமமும் கழிந்து விட்டது. இன்றைக்கென்று என்ன சோதனை? எங்கு போனாலும் நமது காரியம் இன்று நிறைவேறுவதாகக் காணோமே!"

இவன் யார் என்று சொல்லவும் வேண்டுமா? 'இப்ன-சாபாத்'தான். பத்து ஆண்டுகள் சிறையிலே அடைபட்டுக் கிடந்தவன், எப்படியோ சிறையை விட்டு வெளியேறி ஓடி வந்திருந்தான்; வந்ததும் வராததுமாகத் தன் தொழிலைத் தொடங்க மறுபடியும் முற்பட்டிருந்தான்.

இது அவனது புதிய திருட்டு வாழ்க்கையின் முதல் இரவு. அதனால் தன் நேரம் வீணாவதைக் கண்டு அவன் மனம் பொருமலாயிற்று.

அவன் பூமியிலே காது வைத்து ஒவ்வொரு பக்கத்து ஓசையையும், தூர தூரத்து ஓசையையும் கவனமாகக் கேட்டான். பிறகு தைரியமாக முன்னேறினான். ஆலோடியை ஒட்டிச் சென்ற சுவர் மிக நீண்டு சென்று கொண்டிருந்தது. அதன் நடுவே ஒரு பெரிய வாசற்படியிருந்தது.

'கரக்' என்னும் இந்தப் பகுதியில் பெரும்பாலும் செல்வந்தர்களின் தோட்டம், துரவுகள் இருந்தன; அல்லது வியாபாரிகளின் கிடங்குகள் இருந்தன.

இரண்டில் ஒன்றாக இருக்க வேண்டும் என்று அவன் முடிவு கட்டினான். அவன் அந்த வாசற்படியை அடைந்து கதவின் மேல் கை வைத்தான். அது உடனே திறந்து கொண்டது. அடுத்த விநாடி 'இப்ன-சாபாத்'தின் கால்கள் கட்டடத்தின் முற்றத்துக்குள்ளே அடி எடுத்து வைத்து விட்டன. முற்றத்தை மையமாகக் கொண்டு நாற்புறமும் பற்பல சிறிய அறைகள் இருந்தன. நடுவிலே சற்றுப் பெரியதாக ஒரு கட்டடம் இருந்தது.

அவன் நடுவிலே இருந்த அந்தக் கட்டடத்தை நோக்கி நடந்தான். ஆனால் அதிசயம் என்னவென்றால், அந்தக் கட்டடத்தின் கதவு உள்பக்கமாகத் தாளிடப்படவில்லை.

உள்ளே நுழைந்த 'இப்ன-சாபாத்' அது பெரும் ஹாலாக இருப்பதைக் கண்டான். ஆனால் அந்த அறை பிரமாதமாக அலங்கரிக்கப்பட்டிருக்கவும் இல்லை; அதிலே விலையுயர்ந்த பொருள் இருப்பதற்கான அறிகுறியும் தோன்றவில்லை. ஒரு பக்கம் பேரீச்சை ஓலையினால் முடையப்பட்டபாய் மட்டும் விரித்திருந்தது. அதன் ஒருபுறத்தில், தோலாலான தலையணை ஒன்று போடப்பட்டிருந்தது.

ஒரு மூலையில் மட்டும் கனத்த கம்பளித் துணிகள், அவசரத்தில் தூக்கியெறியப்பட்டவை போலச் சிதறிக் கிடந்தன. அவற்றுக்கு அருகிலேயே தோல் தொப்பிகள் கிடந்தன.

பத்து ஆண்டுகளுக்குப் பின் இன்றுதான் தன் தொழிலைச் சுதந்திரமாகச் செய்யும் வாய்ப்பு மீண்டும் 'இப்ன-சாபாத்'துக்குக் கிடைத்திருந்தது. இந்தக் கட்டடத்தில் தனக்குத் தேவையானது ஒன்றும் கிடைக்கவில்லை என்பதைக் கண்டபொழுது அவனுக்குக் கோபம் கோபமாக வந்தது.

கம்பளித் துண்டங்கள் இருந்தன. அவற்றுக்கு உகந்த விலையும் கிடைக்கக் கூடுந்தான். ஆயினும் என்ன பயன்? அதோடு 'இப்ன-சாபாத்'தோ ஒன்றிக் கட்டை; அவனுக்குக் கையும் ஒன்றே. 'இந்தக் 'கரக்'கும் இந்தக் 'கரக்'கில் வசிப்பவர்களும் நாசமற்றுப்போக!' என்று தனக்குள் முணுமுணுத்துக் கொண்டான். அத்தனை பெரிய வீட்டிலே கழுதை கூடப் போர்த்திக் கொள்ளக் கூசும் மோட்டா கம்பளித் துணிகளை அடுக்கி வைத்திருக்கும் வியாபாரிக்கு லட்சார்ச்சனை செய்தான்.

இரவோ ஓடிக் கொண்டிருந்தது. இன்னொரு இடத்துக்குப் போகலாம் என்றாலோ, அதற்குப் பொழுதில்லை. எனவே அவன், ஒரு கம்பளியை எடுத்துக் கீழே விரித்தான். எவ்வளவு முடியுமோ, அவ்வளவு கம்பளிகளை எடுத்துப் போகும் முயற்சியில் ஈடுபட்டான்.

கம்பளித் துண்டங்களோ மிகக் கனமாகவும் மோட்டாவாகவும் இருந்தன. அவற்றைச் சுருட்டிக் கட்டி முடிச்சுப் போடுவது என்பது எளிய காரியமாக இல்லை. இரண்டு கைகள் உள்ளவர்கள் செய்வதே சிரமம். 'இப்ன-சாபாத்' ஒரு கையை வைத்துக் கொண்டு என்ன செய்வான், பாவம்! அவன் மிகுந்த பிரயாசை எடுத்துக் கொண்டபின் பற்களை உபயோகித்தான். வெட்டுண்ட கையின் முழங்கையை உபயோகித்து ஒரு முனையை அழுத்திப் பிடித்தான். ஆனால் என்ன முயன்றும் அவனால் முடிச்சுப் போட முடியவில்லை. அவன் அந்த முயற்சியில் அலுத்துச் சலித்துக் களைத்துப் போய்விட்டான்.

இச்சமயத்தில்தான் திடீரென்று அவன் துணுக்குறும்படியான ஒரு காரியம் நடந்தது. அவனது கூரிய செவிகள் தூரத்தில் யாரோ மெதுவாக அடியெடுத்து நடந்து வரும் ஒலியைக் கேட்டன.

ஒரு விநாடி மௌனம் நிலவியது. பிறகு வாசற்படியில் யாரோ நிற்பதுபோன்ற ஒரு தோற்றம். 'இப்ன-சாபாத்' பதற்றமுற்று எழுந்து நின்றான். ஆனால் நகருவதற்கு முன் கதவு திறந்தது. ஒருவன் கையிலே விளக்கேந்தியவாறு அவன் எதிரே வந்து நின்றான். அவன் உடலைப் பழுப்பு நிறமுள்ள ஒரு நீண்ட சட்டை அலங்கரித்தது. அதைச் சுற்றி இடுப்பிலே பட்டை கட்டியிருந்தது. தலையிலே ஒரு கூரான தளர்வான தொப்பி; அது புருவத்தை மூடி மறைத்தவாறு காட்சியளித்தது.

உடல் மிகவும் பலவீனமுற்றுத் தோற்றம் அளித்தது. உயரமான உருவம் காரணமாக இடுப்பு கொஞ்சம் வளைந்திருந்தது. ஆனால் அவன் முகத்திலே உடல் பலவீனத்தினால் உண்டாகும் உணர்ச்சி நெகிழ்வு பிரதிபலிக்கவில்லை. நீண்ட எலும்புக் கூட்டிலே, கம்பீரமான அழகிய முகம் வைத்தது போன்றிருந்தது. கன்னம் சதைப் பற்று அற்றிருந்தது. ஆயினும் முகத்திலே வீசிய காந்தி, பார்ப்பவர்களைப் பிரமிக்க வைத்தது, பக்தி பூணச் செய்யும் சக்தி பெற்றிருந்தது; உடல் பலம் இல்லாவிட்டாலும் உள்ள பலம் உரம் பாய்ந்திருக்கிறது என்பதை எடுத்துக் காட்டுவதாக இருந்தது. ஒளிச் சுடர் விட்டுப் பிரகாசிக்கும் இரு விழிகளைப் பார்க்கும்பொழுது, உலகத்தின் அமைதியும் ஆனந்தமும் இவ்விரு ஆழம் காண இயலாத கண்களுக்குள் அடங்கிக் கிடக்கின்றனவோ என்று சொல்லும்படியாக இருந்தன.

சில நிமிஷங்கள் அவன் விளக்கைச் சற்று உயரத் தூக்கிப் பிடித்து, 'இப்ன-சாபாத்'தைப் பார்த்தவாறு நின்றான். பிறகு, புரிந்து கொள்ள வேண்டியதைப் புரிந்து கொண்டு விட்டவன்போல் முன்னேறினான்.

விளக்கை ஒரு புறமாக வைத்து விட்டு, முறுவலித்தவாறே அவன் சொன்னான்: "நண்பா! ஆண்டவன் உனக்கு அருள் புரிவாராக. நீ செய்ய நினைக்கும் வேலை வெளிச்சமும், தோழனும் இன்றிச் செய்ய முடியாது. இதோ விளக்கு இருக்கிறது. தோழன் ஸ்தானத்தில் நான் இருக்கிறேன். விளக்கு வெளிச்சத்தில் நாம் இருவரும் தைரியமாக இந்த வேலையைச் செய்து முடிப்போம்!"



இறங்குபவர்: நான் வருகிறேன்! உங்கள் காரில் ஏறிவிட்டால் ஏதேனும் அபாயம்



ஏற்படாமல் தப்பிப்பது ரொம்பச் சிரமம். இனிமேல் ஜாக்கிரதையாகக் காரை ஓட்ட மாட்டீரோ?

அவன் சிறிது நேரம் நின்று ஏதோ யோசனை செய்தான். பிறகு, 'இப்ன-சாபாத்'தைப் பார்த்து, "நீ மிகவும் களைப்புற்றுக் காணப் படுகிறாய். நெற்றி முழுவதும் வியர்வையினால் நனைந்திருக்கிறது. அப்பப்பா! அறை மூடிக் கிடக்கிறது. அதனால்தான் இத்தனை புழுக்கம்! என்ன கஷ்டம், பார்! மனிதன் வயிற்றுப் பாட்டுக்காக எத்தனை பெரிய ஆபத்துக்களை யெல்லாம் விலைக்கு வாங்கிக்கொள்ள வேண்டி வருகிறது! அதோ பாய் விரித்திருக்கிறது. தலையணையும் பக்கத்தில் இருக்கிறது. நீ கொஞ்ச நேரம் இளைப்பாறு. அதற்குள் நீ அரைகுறையாகச் செய்திருக்கும் இந்த வேலையைச் செய்து முடித்து விடுகிறேன்!" என்றான்.

இதைச் சொல்லி முடித்ததும், அவன் 'இப்ன-சாபாத்'தை உட்காருமாறு ஜாடை காட்டினான். தன் கைக்குட்டையை எடுத்து அவனது நெற்றி வியர்வையைத் துடைத்தான். அதுமட்டும் அல்ல; உட்காராமல் நின்று கொண்டிருந்தவனைத் தோள்பட்டையில் கை வைத்து அழுத்திப் பாயில் உட்காரவும் வைத்து விட்டான்.

இச் சம்பவங்களெல்லாம் வெகு விரைவில் நடந்தன. 'இப்ன-சாபாத்'தின் மூளை வேலை செய்து, என்ன ஏது என்று அறிய வாய்ப்பே அளிக்கவில்லை. தன் நினைவு இழந்த மனிதனைப் போல் அந்த வேற்று மனிதன் சொன்னபடியெல்லாம் ஆடி, 'இப்ன-சாபாத்' பாயில் படுத்து விட்டான்.

அப்புறம்தான் அந்தப் புதிய மனிதன், தான் சொன்னபடி வேலையைத் துவங்கி விட்டான் என்பதை அவன் கண்டான்.

அந்த மனிதன், இப்ன-சாபாத்' கட்டி முடிக்க போட்ட முயன்ற மூட்டையில் இன்னும் இரண்டு கம்பளித் துண்டங்களை எடுத்து வைத்தான். அதை இரண்டாக்கி இரண்டு மூட்டையாக—ஒன்று சிறியது, ஒன்று பெரியது—கட்டினான். பிறகு திடீரென்று ஏதோ நினைவு வந்தவன் போல், தனது போர்வையையும் எடுத்து அந்த மூட்டையில் வைத்துக் கட்டினான். பிறகு 'இப்ன-சாபாத்' தினிடம் சென்று, "நண்பா! உன் வாடிய முகம் நீ மிகவும் பசித்திருக்கிறாய் என்பதையும் எடுத்துக் காட்டுகிறது. அதனால் நீ புறப் படுவதற்கு முன்பாகக் கொஞ்சம் பால் அருந் தினால் நன்றாயிருக்கும்!" என்றான். 'இப்ன-சாபாத்' வாய் திறந்து ஒன்று சொல்வதற்கு முன்பாகவே, அவன் அங்கிருந்து வெளியே போய் விட்டான்.

இப்பொழுது 'இப்ன-சாபாத்' தனியனாகி விட்டான்.

அந்தப் புது மனிதனின் தோற்றமும் அவன் நடந்து கொண்ட முறையும், அவன் அங் கிருந்த வரையில், 'இப்ன - சாபாத்'தை ஒன்றுமே யோசிக்க விடவில்லை. அவன் மட்டும்தான் அந்த அறையில் என்று ஆகி விட்ட பொழுது, அவன் மூளை மீண்டும் சிறுகச் சிறுகத் தன் யோசிக்கும் சக்தியைப் பெற்றது.

நிகழ்ந்த நிகழ்ச்சியை, அவன், தான் பார்த்துப் பழக்கப்பட்டுப் போன முறையிலேயே சிந்தித்தான். அவன் தன் மனத்துள் நினைத்தான்: 'இவனும் நமது சகதொழிலாளியாகத் தான் இருக்க வேண்டும். இங்கேயே எங்கே யாவது பக்கத்தில் இருப்பான் போலிருக் கிறது. இவனுக்கு இந்த வீட்டில் ஆள் நட மாட்டம் இடையாது என்பது தெரிந்திருக் கும். அதனால்தான் தைரியமாக வெளிச் சத்தை எடுத்துக் கொண்டு வந்திருக்கிறான். ஆனால் நான் அவனுக்கு முன்னதாகவே இங்கே வந்திருக்கிறேன் என்பதைக் கண்ட பொழுது, எனக்கு ஒத்தாசை செய்து ஒரு பங்கு பெறலாம் என்ற ஆசையிலேயே இப் படிக் காரியத்தில் முனைந்திருக்கிறான்.'

இப்படி 'இப்ன-சாபாத்' யோசித்துக் கொண்டிருக்கும் பொழுதே, அந்தப் புதிய மனிதன் மரக் கோப்பை ஒன்றில் பால் எடுத்துக் கொண்டு திரும்பி வந்து விட்டான். "இந்தா! உனக்காகப் பால்கொண்டு வந்திருக் கிறேன். பருகிப் பசியையும் தாகத்தையும் தணித்துக் கொள்!" என்றான்.

'இப்ன சாபாத்' ஒரேமூச்சில் கோப்பையைக் காலி செய்து விட்டான். உடல் ஒரு நிலைக்கு வந்ததும், அவனைக் காரியக் கவலை பற்றிக் கொண்டது. "இதோ, பார்! நான் உனக்கு முன்னால் வந்து விட்டேன். காரியத்தையும் துவங்கி விட்டேன். அதனால் சட்டப்படி பார்க்கப் போனால் இதில் உனக்கு ஒரு பங்கும் கிடையாது; உரிமையும் கிடையாது. இருந்தாலும் உன் கெட்டிக்காரத்தனத்தை யும் சாமர்த்தியத்தையும் கண்டு, உன்னையும் என்னுடைய கொள்ளையில் கூட்டாளியாகச் சேர்த்துக் கொள்வதில் எனக்குத் தடை யில்லை. உனக்கு விருப்பம் இருக்குமானால் எப்பொழுதுக்குமே உன்னுடன் ஒரு ஒப்பந்தம் செய்து கொள்ளக்கூட நான் தயார். ஆனால் இன்றைய பொருளில் உனக்குச் சம பங்கு தர முடியாது. இப்பொழுதே சொல்லி விட் டேன். பின்னால் தகராறு கிராறு செய்யக் கூடாது. ஏனென்றால் இன்றைய வேலை..."

அவன் வார்த்தையை முடிப்பதற்கு முன் பாகவே, அந்தப் புது மனிதன் பேசலுற் றான்: "நண்பா! எதற்காக உன் மனத் தைப் போட்டு உழைத்துக் கொள்கிறாய்? வா, முதலில் வேலையை முடிப்போம். இரண்டு மூட்டைகளாகக் கட்டியிருக்கிறேன். பெரி யதை நான் எடுத்துக் கொள்கிறேன். சிறிய மூட்டையை நீ எடுத்துக் கொள். என் பங்கு, உன் பங்கு என்ற பேச்சு அப்புறம் ஆகட்டும். இப்பொழுதே இதைத் தீர்த்துக்

# ஆண்டுகள் பலவாகினும் அழகு குன்றாத ஆடைகளை அணியுங்கள்!

ஹறுவா

லஸ்டலின்



ட்ரில்

நெ. ஏஸி. எஸ்
5208 ஏஸி
3000 — குறிப்
பிட்டு கேளுங்
கள்.



ப்ளெயின்
ரகம் எல் 49 : 4
என்றும், 'செக்'
ரகம் எல் 9 : 6
என்றும் கேளுங்
கள். 'டாபி' ரக
மும் கிடைக்
கிறது.

இந்த நம்பர்களைச்
சொல்லுங்கள்:
பி 17 (ராணு
வத்தினர்
அணிவது
இது) பி 37,
பி 11, பி 94,
பி 39, பி 83.



எடுப்பான தோற்றம், உகப்பான உடைக்கு
பின்னி துணியே ஏற்றது. இந்த பிரசித்த
டிரேட் மார்க்குகள் உள்ள துணிகளை
வாங்குங்கள்.



பக்கிங்ஹாம் & கர்னாடிக் கம்பெனி லிமிடெட்
மானேஜிங் ஏஜெண்டுகள்,
பின்னி & கோ (மதராஸ்) லிமிடெட், சென்னை

BY 30

கொள்வானேன்? நீ என்னுடன் ஒரு ஒப்பந்தம் செய்து கொள்ளத் தயாராயிருப்பதாக நீதான் சொன்னாயே! எனக்கும் சம்மதம் தான். நீ நிரந்தரமாக ஒப்பந்தம் ஏதாவது செய்து கொள்ள விரும்பினால், நானும் கட்டுப்பட்டு நடக்கத் தயாராயிருக்கிறேன்!''

''ரொம்ப சரி! நான் யார் என்று உனக்கு இன்னும் தெரியாது. தெரிந்தால், அப்புறம் சந்தோஷப்படுவாய். நாடு முழுவதிலும் தேடினாலும் கூட என்னைப் போன்ற தலைவன் உனக்குக் கிடைக்க மாட்டான்!''

இவ்விதம் கூறியவாறே 'இப்ன-சாபாத்' தன் மூட்டையைத் தூக்கிக் கொண்டான். அது மிகவும் இலேசாக இருந்தது. இருவரும் வெளியே வந்தார்கள். முன்பே புது மனிதனின் முதுகு கூனியிருந்தது. சுமையைத் தூக்கிக் கொண்டதும், இன்னும் வளைந்துவிட்டது. இருட்டில் நடப்பது இயல்பாகவே சிரமம். அதோடு சுமையுடன் நடப்பதென்றால் கேட்க வேண்டுமா?

'இப்ன-சாபாத்'தின் சுமையோ இலேசாக இருந்தது. அதனால் அவன் வேகமாக நடந்து கொண்டிருந்தான். அடிக்கடி அந்தப் புது மனிதனைத் திரும்பிப் பார்த்து, வேகமாக நடக்கும்படி கட்டளையும் பிறப்பித்துக் கொண்டிருந்தான்.

ஆனால் அத்தனை பெரும் சுமையைத் தூக்கிக் கொண்டு நடப்பது அந்த மனிதனின் சக்திக்கு அப்பாற்பட்ட விஷயமாக இருந்தது. அதனால் அவன் அடிக்கடி தடுமாறினான். தடுக்கிக் கீழே விழுந்து விடுவான் போலிருந்தது.

இருட்டில் கல் தடுக்கிக் கால் சதையைப் பெயர்க்கவே செய்தது. ஒரு தடவை நல்ல அடி பட்டுக் கிறங்கினான். ஆயினும் அவன் நிற்கவோ இளைப்பாறவோ முயலவில்லை. 'இப்ன-சாபாத்'துடன் நடந்து செல்லவே முயன்றான்.

ஆனால் 'இப்ன-சாபாத்' அதனாலெல்லாம் திருப்தி அடையவில்லை. கட்டளை பிறப்பித்தவன் கடைசியில் பலமான வசவிலேயே இறங்கி விட்டான்.

இதற்குள் ஆற்றுப் பாலம் வந்து விட்டது. அது கொஞ்சம் மேடு. பலவீனமான உடல்; நடந்து வந்த களைப்பு; சுமையோ அழுத்தியது. புது மனிதனால் சமாளிக்க முடியவில்லை. இந்தத்தடவை தன்னையும் மீறிக் கீழே விழவே விழுந்து விட்டான்.

உடனே அவன் எழுந்திருக்கவும் முயன்றான். ஆனால் அதற்குள்ளாக 'இப்ன - சாபாத்' அவனைக் காலால் ஒரு உதை கொடுத்துத் திட்டி, ''இத்தனை சுமையைத் தூக்க முடியாது என்று தோன்றினால் எதற்காகக் கொண்டு வந்தாய்?'' என்று சீறி விழுந்தான்.

மூச்சுத் திணறியவாறே அம்மனிதன் எழுந்தான். அவன் முகத்திலே வலியோ சிரமமோ தோன்றுவதற்குப் பதிலாக வெட்கம் தோன்றியது. அவன் உடனே மூட்டையைத் தூக்கிக் கொண்டு நடந்தான்.

நகரத்தின் அதிக ஜன சந்தடியற்ற இடம் ஒன்றை அடைந்ததும் இருவரும் நின்றனர். அங்கே ஒரு பாழடைந்த கட்டடத்தின் முற்றம் இருந்தது. அந்த முற்றத்தை அடைந்ததும் 'இப்ன-சாபாத்' நின்று விட்டான். அந்தப் புது மனிதனைக் கூப்பிட்டு மூட்டையைக் கீழே இறக்குமாறு பணித்தான். பிறகு ஒரே தாண்டலாகத் தாண்டி வீட்டினுள் நுழைந்தான். அப்புது மனிதன் அந்த இரண்டு மூட்டைகளையும் தூக்கி உள்ளே விட்டெறிந்தான். பிறகு அவனும் தாவி அந்தக் கட்டடத்துக்குள் சென்றான்.




அந்தக் கட்டடத்தில் ஒரு கீழ் அறை இருந்தது. அதில்தான் 'இப்ன-சாபாத்' சிறைச்சாலையிலிருந்து தப்பி ஓடி வந்தபின் ஒளிந்து கொண்டிருந்தான். ஆனால் அவன் அந்தக் கீழ் அறைக்குள் போகவில்லை. ஏனென்றால் அந்தப் புது மனிதனுக்கு அவன் தன் ரகசிய அறையைக் காட்ட விரும்பவில்லை

ஒரு பக்கத்தில் கிடந்த கருங்கற்களில் ஒன்றைத் தேடி 'இப்ன-சாபாத்' உட்கார்ந்து கொண்டான் அந்தப் புது மனிதன் ஒருபுறம் நின்று ஆசுவாசப்படுத்திக் கொள்ளலானான்.

திடீரென்று அந்த வேற்று மனிதன் 'இப்ன-சாபாத்'தின் அருகில் வந்து, ''நண்பா! நான் என் பணியை முடித்து விட்டேன் நான் போய் வருகிறேன் இந்தக் காரியத்தைச் செய்யும்பொழுது என்னிடத்திலே தோன்றிய பலவீனத்தையும், சோம்பலையும், அவற்றின் காரணமாக உனக்கு உண்டான சிரமத்தையும் கண்டு மிகவும் வெட்கமுறுகிறேன்; அதற்காக நான் உன்னிடம் மன்னிப்பும் கோருகிறேன். கடவுள் செயலும் நம் செயலும் ஒன்றாக இருக்கக் கூடிய செயல் இந்த உலகத்தில் ஒன்றே ஒன்றுதான். அது ஒருவரை யொருவர் மன்னிப்பது என்பதாகும். ஆனால் விடை பெற்றுக் கொள்வதற்கு முன்பாக நான் உன்னிடம் ஒரு விஷயத்தைச் சொல்ல விரும்புகிறேன். நீ நினைக்கும் ஆள் நான் அல்ல. இன்று நீ என்னைப் பார்த்தாயே, அந்த வீட்டில்தான் நான் இருக்கிறேன். நீ இருட்டில் உட்கார்ந்து சிரமப்படுவதைப் பார்த்தேன். நீ என் வீட்டுக்கு வந்த பின் என் விருந்தினனாகி விட்டாய். விருந்தினனுக்கு உதவ வேண்டியது வீட்டாளாகிய என் கடமை. ஆனால் வருத்தத்துக்குரிய விஷயம் என்னவென்றால், நான் உனக்குப் போதுமான மட்டுமரியாதைகள் செய்ய முடியவில்லை; கௌரவிக்க முடியவில்லை. நீதான் என் வீட்டைப் பார்த்து விட்டாய். உனக்கு ஏதாவது எப்பொழுதாவது தேவையிருக்குமானால், சங்கோசமின்றி நீ வரலாம். ஆண்டவனின் அருளும் ஆசியும் உனக்குப் பரிபூரணமாய் எப்பொழுதும் கிடைத்த வண்ணம் இருக்கட்டும்.''

இதைச் சொன்னதும் அவன் 'இப்னு-சாபாத்'தின் கையைத் தன் கையில் ஏந்தி வணக்கம் தெரிவித்தான். அடுத்த கணமே அங்கிருந்து வேகமாக வெளியேறி விட்டான்.

வேற்று மனிதன் வெளியேறி விட்டான். ஆனால் 'இப்னு-சாபாத்'தை வேறு உலகத்தில் விட்டுச் சென்று விட்டான்.

நடுப்பகல் நகர்ந்து பொழுது சாய்ந்து விட்டது. வெய்யில் பணக்காரர்களைக் கீழ் அறைகளிலும், ஏழைகளைச் சுவர் நிழலிலும் இதுவரை உட்கார வைத்திருந்தது. இப்பொழுது இருவரும் வெளியே வரலாயினர். ஆனால் 'இப்னு-சாபாத்' மட்டும், இரவு போய் எந்த இடத்தில் உட்கார்ந்தானோ, அதே இடத்தில் உட்கார்ந்திருந்தான். இரவு கொண்டு வந்த இரண்டு மூட்டைகளும் அப்படியே அவன் எதிரே கிடந்தன. அவனது கண்கள் இரவு தனக்கு உதவியாக வந்த தோழனைத் தேடுவது போல் வட்டமிட்டுக் கொண்டிருந்தன. பன்னிரண்டு மணி நேரம் கழிந்து விட்டது. ஆனால் உடல், உயிர் ஆகியவற்றின் தேவை அவனைத் துன்புறுத்தவில்லை. அந்தப் பசியும் - அதற்காகத்தானே அவனது ஒரு கை துண்டிக்கப்பட்டது—அவனை அணுகித் துன்புறுத்தவில்லை. அச்சம் — அதன் காரணமாகத்தானே சூரிய வெளிச்சம் அவனைப் பொறுத்தவரை உலகத்துக்கே தேவையில்லாத நிய பொருளாகப்பட்டது— அவனை அண்டி அஞ்ச வைக்கவில்லை.

அவன் மூளையிலே — அவனது எண்ணம், செயல், சக்தி முழுவதும் ஒரு குறிப்புள்ளியாக ஒன்றிப் போய்—இரவு தனக்கு உதவிக்கு வந்த வேற்று மனிதனின் முகமாக உருமாறி நின்றன. இப்பொழுது அதுவும் அவன் பார்வையிலிருந்து மறைந்து விட்டது. அவன் கண்களுக்குப் புலனாக ஒரு உலகத்தின் ஒளியை அவனுக்குக் காட்டி விட்டு அவ்வுருவம் மறைந்து விட்டது. அவன் பார்வையை மறைத்திருந்த திரை விலகிவிட்டது. வானத்துச் சூரியனைப் போலவே, அன்பென்னும் சூரியன் ஒருவனும் இருக்கிறான். அவன் பிரகாசிக்கும் பொழுது உள்ளம், ஆத்மா இரண்டையும் கவ்வி மறைத்திருக்கும் இருள் அகன்று விடுகிறது என்பதும் அவனுக்குத் தெளிவாகப் புலனாகியது.

அன்பென்னும் சூரியனின் முதல் கதிர் 'இப்னு — சாபாத்'தின் இதயத்திலே படிந்தது. அடுத்த கணம் இருளில் மூழ்கிக் கிடந்தவன் வெளிச்சத்துக்கு வந்து விட்டான்.

அவன் யோசிக்க யோசிக்க அவனது இதயப் புண் ஆழமாகிக் கொண்டே வந்தது. ஒவ்வொரு விஷயத்தையும் நினைக்கும்பொழுது ஒரு புதுப் புண் உண்டாகி ஊசி போல் குத்துவதாகவே அவனுக்குப் பட்டது.

சூரியன் மலைவாயில் விழுந்து கொண்டிருந்தான். பாக்தாத நகரத்தின் பள்ளிவாசற் கோபுரங்களிலே தொழுகைக்காக நகரா முழங்குவது கேட்டது.

'இப்னு-சாபாத்' உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து எழுந்தான். உடலிலே போர்வையை எடுத்துப் போர்த்திக் கொண்டான். சிறிதும் தயக்கமின்றி வெளியே புறப்பட்டு விட்டான். இப்பொழுது அவன் மனதிலே அச்சம் பெயருக்குக்கூட இல்லை; அச்சத்தின் ஸ்தானத்தை வேறு பொருள் பற்றிக் கொண்டு விட்டது.

■ அவன் முன்னாள் இரவு சென்றிருந்த 'கரக்'கின் அதே பகுதிக்குச் சென்றான். கட்டடத்தைக் கண்டு பிடிக்க அவனுக்குச் சிரமம் ஏற்படவில்லை. கட்டடத்தின் அருகிலேயே ஒரு விறகுவெட்டியின் குடிசை இருந்தது. அவன் அதற்கு அருகில் சென்று, ''அதோ பெரிய கட்டடம் ஒன்று தெரிகிறதே, அதில் எந்த வியாபாரி குடியிருக்கிறார்?'' என்று கேட்டான்.

''வியாபாரியா?'' விறகு வெட்டி வியப்புடன் கேட்டான். ''நீ இந்த ஊர் ஆள் இல்லை போலிருக்கிறது. இங்கே வியாபாரி எங்கே வந்தான்? அந்த வீட்டில் ஹஜரத் ஷேக் ஜுனைத் பாக்தாதி அல்லவா வசிக்கிறார்!'' என்றான்.

'இப்னு-சாபாத்' அந்தப் பெரியவரின் பெயரைக் கேள்விப்பட்டிருந்தான். ஆனால் அவரை அவன் பார்த்ததுதான் இல்லை. முகம் தெரியாத மனிதரின் பெருமை மட்டும் அவனுக்கு எப்படியோ தெரிந்திருந்தது.

கட்டடத்தின் கதவு முன்னாள் இரவு போலவே அப்பொழுதும் திறந்திருந்தது. அவன் உள்ளே சென்றான். எதிரே இரவு கண்ட அதே பெரிய அறை இருந்தது. இங்கும் அங்கும் பார்த்துவிட்டு அவன் மெதுவாக அதற்குள் நுழைந்தான்.

இரவு விரித்திருந்த அதே பாய் கிடந்தது. இரவு பார்த்த தலையணையும் அங்கே காணப்பட்டது. தலையணையில் கையூன்றி அந்த விசித்திர மனிதன் உட்கார்ந்திருந்தான். முப்பது நாற்பதுபேர்கள் அவனுக்கெதிரே உட்கார்ந்திருந்தனர். அவர்தான் ஷேக் ஜுனைத் பாக்தாதி என்பதைப் புரிந்து கொள்ள 'இப்னு சாபாத்'துக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை.

இதற்குள் இரவு தொழுகைக்கு நகரா முழங்கியது. எல்லோரும் எழுந்து புறப்பட்டதும் ஷேக் பாக்தாதியும் எழுந்திருந்தார். அவர் வாசற்படியில் அடி எடுத்து வைத்ததும் 'இப்னு-சாபாத்' பரக்கப் பரக்க ஓடி வந்து அவர் காலடிகளிலே விழுந்தான்.

அவனது ஈரம் காணாத கண்கள் அருவியாகப் பெருகின. கண்ணீர் வெள்ளம் கரை புரண்டு எழுந்து விட்டால், உள்ளத்தில் அழுக்கு எங்கேயாவது தேங்கி நிற்பதுண்டா? அசுத்தத்தைச் சுத்தமாக்கும் குணம் நீர் வெள்ளத்துக்கு உண்டு என்பது உலகமறிந்த விஷயமாயிற்றே!

ஷேக் குனிந்து அவன் தலையைத் தூக்கினார். அவன் எழுந்து நின்றான். ஆனால் பேச வாய் திறக்கவில்லை; நா புரளவில்லை. இனி அதற்கு அவசியம்தான் என்ன? விழிகள் பேசத் தொடங்கி விட்டால், வாய் பேச வேண்டும் என்பது எங்கேயாவது உண்டா?

இது நடந்து எத்தனையோ காலம் ஓடி விட்டது. ஷேக் அஹமத் பின் ஸாபாத் என்னும்பெயர்பெற்ற 'இப்னு-சாபாத்', ஷேக் ஜுனைத் பாக்தாதியின் முக்கிய சீடர்களிலே ஒருவனாகிவிட்டான். இன்றும் ஷேக்மார்கள் கூறுகிறார்கள், ''பிறர் பல்லாண்டு பல்லாண்டுகளாகத் தாண்டமுடியாத பாதையை 'இப்னு-சாபாத்' கண்ணிமைக்கும் நேரத்திலே கடந்து விட்டான்!'' என்று.

—'நவநீத் ஹிந்தி'



# கலிங்கா டியூப்ஸ்

தண்ணீர், காஸ், எஃகு, கலாய்
குழாய்கள் அரை அங்குலம்
முதல் இரண்டு அங்குலம் வரை

(B. S. S. 1387/1947 - Class A & B)

## கலிங்கா டியூப்ஸ் லிமிடெட்

**33, சித்தரஞ்சன், அவின்யூ, கல்கத்தா - 12**

(பாக்டரி : சௌத்வார், கட்டாக்)



கேரளம், சென்னை, பாண்டிச்சேரி, மைசூர், ஆந்திர ராஜ்யங்களுக்கு
பிரத்தியேக விநியோகஸ்தர்கள் :

**சௌத் இந்தியா கார்ப்பரேஷன்**
**(ஏஜன்ஸீஸ்) பிரைவேட் லிட்.**
2, அர்மீனியன் தெரு - சென்னை-1

**எம். சி. சுந்தரராஜன் & கம்பெனி**
290, லிங்கி செட்டித் தெரு
த. பெ. நெ. 182 - சென்னை-1



தென் பிராந்தியத்திற்கு ஸோல் ஏஜண்டுகள் :

**டியூப் ஸப்ளேயர்ஸ் லிமிடெட்**
2, அர்மீனியன் தெரு - - சென்னை-1

# ஸோஷலிஸமும் ஜனநாயகமும்

க. சந்தானம்

## 8. சர்க்கார் சேவகம்

நிலைபெற்ற அரசாங்கம் இருக்கும் பொழுது சர்க்கார் சேவகர்களும் இருப்பார்கள். சஞ்சார சகாப்தத்தில் சமூகத் தலைவர்களைத் தவிர வேறு அரசர்கள் இல்லாமையால், சர்க்கார் சேவகர்களென்ற தனிக் குழு ஒன்றும் இருந்திருக்க முடியாது. விவசாய சகாப்தத்தில் சேனை, அரசனின் மாளிகை சேவகர்கள், வெளியூர்களில் அவனுடைய காரியஸ்தர்கள் முதலிய சேவகர்கள் இருந்தனர். ஆனால் அவர்களுடைய எண்ணிக்கை மிகவும் குறைவு. ஆயிரம் மக்களுக்கு ஒருவர் இருப்பர்.

இயந்திர சகாப்தத்தில் சர்க்கார் சேவகம் ஓர் முக்கிய தொழிலாகிறது. எல்லா இயந்திரசாலைகளும் தனியார் முதலாளி ஸ்தாபனங்களிடமிருக்கும் அமெரிக்க ஐக்கிய நாட்டில் 72 லட்சம் சர்க்கார் சேவகர்கள் இருக்கிறார்கள். பாரதத்தில் 7ல் ஒரு பங்கு ஜனத்தொகையுள்ள பிரிட்டனில் 30 லட்சம் சேவகர்கள் இருக்கிறார்கள். முக்கால் பங்கு விவசாய சகாப்தத்திலிருக்கும் பாரதத்திலும் இப்பொழுது மத்திய, ராஜ்ய சர்க்கார்களின் கீழ் 30 லட்சம் சேவகர்கள் இருக்கின்றனர். இவர்களின் சங்கியை வருஷத்துக்கு 50,000 விகிதத்தில் பெருகி வருகிறதென்று கணக்கிட்டிருக்கிறார்கள்.

பொதுஉடைமை நாடுகளில் எல்லாத் தொழிலாளர்களுமே சர்க்கார் சேவகர்கள் என்று கூறுவது மிகையாகாது.

சர்க்கார் சேவகர்களை இரு வகுப்பாராகப் பிரிக்கலாம். ரயில், தபால், தந்தி போன்ற சர்க்காருக்கு வருமானம் கொடுக்கும் தொழில்களில் வேலை செய்வோர்; அவ்விதமின்றிச் சைனியம், நிர்வாகம், கல்வி முதலிய பொது சமூக சேவைகளில் பணி செய்வோர். சாதாரணமாக, முதலாளிகள் நடத்தும் தொழில்களில் தொழிலாளிகளின் ஊதியம் அவற்றின் லாபத்தை அனுசரித்திருக்கும். சர்க்கார் சேவகத்தில் இந்த நியமத்தை அனுஷ்டிக்க முடியாது. தற்சமயம் ரயில், தபால் இலாகாக்கள் லாபகரமாக இருப்பினும் முன்னர் பல வருஷங்களுக்கு நஷ்டத்தில் வேலை செய்து வந்தன. வரிப் பணத்திலிருந்து நஷ்டத்தை ஈடு செய்ய வேண்டியிருந்தது. அவ்விதமே பொதுச் சேவகர்களும் ரயில், தபால் ஊழியர்களுக்குச் சரியாகச் சம்பளம், படி முதலிய ஊதியம் கேட்கின்றனர். 1948ம் வருஷத்தில் சம்பளக் கமிஷனின் யாதாஸ்தை அனுசரித்து எல்லா மத்திய அரசாங்க சேவகர்களுக்கும் ஒரே விதமான ஊதிய விகிதம் ஏற்படுத்தப்பட்டது. ராஜ்ய அரசாங்கங்கள் அம்மாதிரி உயர்ந்த சம்பளம் கொடுக்க முடியவில்லை. ஆதலால் அவற்றின் சேவகர்களிடம் அதிருப்தி பரவி வருகிறது.

இயந்திரத் தொழில் வளர்ந்திருக்கும் நாடுகளில் தொழிலாளிக்கும், சர்க்கார் சேவகர்களுக்கும் சம ஊதியம் இருப்பதில் அதிக கஷ்டமில்லை. ஆனால் பாரதத்தைப் போல் பேரளவு விவசாயமும், சிறிதளவு இயந்திரத் தொழிலும் இருக்கும் தேசங்களில் சர்க்கார் சேவகர்களுக்கும் இயந்திரத் தொழிலாளர் விகிதத்தில் ஊதியம் கொடுப்பதால் மக்கள் மீது மிதமிஞ்சிய வரிகள் சுமத்த வேண்டியிருக்கிறது. இயந்திரத் தொழில் வளர்ச்சியடைவதற்குத் தேவையான முதல் திரட்டுவதும் சாத்தியமாகாது. 'போலீஸ்காரர்களும், ஆரம்பப் பள்ளி ஆசிரியர்களும் ஒரு துணி மில் தொழிலாளிக்குக் குறைந்தவர்களா? அவர்களுக்கும் அதே ஊதியம் கிடைப்பது நியாயமல்லவா?' என்று வாதாடுகிறார்கள். பொதுச் சேவகர்களின் சம்பளம் ஏழை விவசாயிகளிடமிருந்து வசூல் செய்யப்படுவதை மறந்து விடுகிறார்கள்.

சர்க்கார் சேவகர்கள் சமூகத்தில் ஓர் பெரும் பகுதியினராவதால் பல அரசியல் சிக்கல்கள் ஏற்படுகின்றன. ஜனநாயகத்தில் சுதந்திரப் பிரஜைகள், கட்சிகளின் வாதப் பிரதிவாதங்களை ஆராய்ந்து தமக்குப் பிடித்த கட்சிக்கு வாக்குக் கொடுத்து, அதில் பெரும்பான்மையோரின் ஆதரவைப் பெற்ற கட்சி மந்திரி சபை அமைத்து ராஜ்ய நிர்வாகம் செய்ய வேண்டும். சர்க்கார் சேவகர்கள் அரசியல் கட்சிகளில் சேரலாமா என்பது முதல் சிக்கல். அப்படிச் சேருவதற்கு உரிமை கொடுத்தால் ஒவ்வோர் காரியாலயத்திலுள்ள சேவகர்களும் பல கட்சிகளாகப் பிரிந்து பொதுக் காரியம் கெட்டுப் போய் விடும். சேரக் கூடாதென்று தடுத்தால், தங்கள் உத்தியோகத்துக்காக ஜனநாயகத்தில் பங்கெடுத்துக் கொள்ளும் உரிமையை இழந்தவர்களாவார்கள். சர்க்கார் சேவகர்களின் தொகை சிறிதாக இருக்கும் வரையில் சிலர் அவ்வுரிமையை இழந்தால் பாதகமில்லை. அது வளர்ந்து சமூகத்தில் ஒரு கணிசமான பாகமாகி விட்டால், சர்க்கார் சேவகர்களெல்லோரையும் அரசியலிலிருந்து விலக்கி விட்டால், அரசியல் குன்றி விடும். சட்டசபைகளில் தொண்டுபுரியத் திறமையுள்ளவர்கள் கிடைப்பது கஷ்டமாகி விடும். சர்க்கார் தொழிற்சாலைகளிலும், வியாபார முறையில் நடத்தும் தொழில்களில் பணி செய்யும் சேவகர்களுக்கு அரசியலில் பங்கெடுத்துக் கொள்ளும் சுதந்திரம் அளித்து விட்டு, பொது நிர்வாகத்திலும் சேவைகளிலும் ஈடுபட்டிருப்போரை மட்டும் அரசியலிலிருந்து ஒதுக்கி வைக்கலாம் என்று யோசனை கூறப்படுகிறது. இது நியாயமல்ல, தொழில்வாரிப் பிரதிநிதிகள் மூலம் சட்டசபைகளை அமைப்பதே நல்ல வழி என்றும் சிலர் கூறுகின்றனர்.

சர்க்கார் சேவகர்கள் தொழில் சங்கங்கள் அமைத்து, அவற்றின் மூலம் அரசியலில் பங்கெடுத்துக் கொள்ள வேண்டுமென்று

வாதிக்கப்படுகிறது. அப்பொழுது அவர்களுடைய சம்பளங்களை ஓயாமல் உயர்த்த வேண்டி வரும். அவ்விதம் உறுதி கூறும் கட்சிக்கே அவர்கள் வாக்களிப்பார்கள். சர்க்கார் சேவகர்கள் படித்தவர்களானதாலும், சுயநலம் மிகவும் தீவிரமான உணர்ச்சியானதாலும் அவர்களின் வாக்கை அலட்சியம் செய்யும் அரசியல் கட்சி எளிதில் பதவிக்கு வர முடியாது.

பொதுவுடைமை நாடுகளில் எல்லோரும் சர்க்கார் சேவகர் நிலையில் இருக்கிறார்களே. அங்கே எப்படி அரசியலைச் சமாளிக்கிறார்கள் என்று வினவலாம். அதற்குப் பதில் வெகு சுலபம். அந்த நாடுகளில் ஜனநாயகமில்லை. வெளிக்கு வாக்குரிமை கொடுக்கப்பட்டாலும், பொதுவுடைமைக் கட்சிக்காரர்கள் மட்டுமே அபேட்சகர்களாக இருக்கலாம். கட்சியின் உத்தரவின் பேரில் அவர்கள் அபேட்சகர்களாவார்கள். இவ்விதம் பொது உடைமைக் கட்சித் தலைவர்களால் நியமிக்கப்பட்டவர்களே சட்டசபையில் கூடி அத்தலைவர்களைப் போற்றி அவர்களுடைய திட்டங்களை ஆதரித்து விட்டுக் கலைந்துவிடுவார்கள். ஸ்டாலின் உயிருடன் இருந்த பொழுது அவருடைய தீர்மானங்களை ஆரவாரத்துடன் ஏற்ற ருஷிய பார்லிமெண்ட் அதே ஆரவாரத்துடன் அவர் கொடிய ராட்சஸர் என்று சமீபத்தில் முடிவு செய்துள்ளது.

முதலாளித்துவ சமூகம் ஒன்றில் மட்டும் ஜனநாயகம் சரிவர நடைபெறும் என்று அதன் வாதிகள் பிடிவாதம் செய்கின்றனர். ஆனால் முதலாளித்துவ நாடுகளில் முதலாளிகள் தங்கள் கையாட்களைச் சட்டசபை அங்கத்தினர்களாக நிறுத்தி வைத்துப் பணத்தை வாரி இறைத்துத் தேர்தலைச் சூதாட்டமாக்குகின்றனர். அரசியல் கட்சிகளும் அவர்களின் பணத்தை எதிர்பார்த்துத் தமது திட்டத்தைத் தயார் செய்து கொள்ளுகின்றன.

முதலாளித்துவத்தை ஒழித்து, சர்க்கார் நேரில் எவ்விதத் தொழிலும் செய்யாமல் அவற்றை யெல்லாம் தனித்தனியான பொது ஸ்தாபனங்களாக ஏற்படுத்தி, தொழிலாளிகளுக்கு அரசியல் சுதந்திரம் கொடுத்து விட்டால் ஜனநாயகம் நிலைத்து நிற்குமென்று பொதுநலவாதிகள் அபிப்பிராயப்படுகின்றனர்.

கூடிய வரையில் தொழிலையும், வியாபாரத்தையும் கூட்டுறவு முறையில் செய்தால் இந்தச் சிக்கல்களுக்கு இடம் இருக்காது என்றும் கூறப்படுகிறது.

இந்தச் சிக்கல்களையெல்லாம் தீர்ப்பதற்கு ஒரே வழியிருப்பதாகத் தோன்றவில்லை. ஒவ்வொரு நாடும் தனது மக்களின் மனோபாவங்களை அனுசரித்துத் தனது வழியைத் தேடிக் கண்டு பிடித்துக் கொள்ளவேண்டும்.

## சொத்துரிமை

பொருளாதார சாஸ்திரத்தில் வேறு எந்த விஷயத்தைக் காட்டிலும் சொத்துரிமையைப் பற்றியே தீவிர வாத விவாதம் இருந்து வருகிறது. எல்லாச் சொத்தும் திருட்டுச் சொத்தேயாகுமென்கிறார்கள் பல பெரியோர். மற்றெல்லாக் கொள்கைகளிலும் மலைக்கும் மடுவுக்குமுள்ள அபிப்பிராய பேதங்கள் கொண்ட மத குருக்களும், நாஸ்திகத்தையே மதமாகக் கொண்ட பொதுவுடைமைத் தத்துவாசிரியர்களும் சொத்துரிமையைக் கண்டிக்கின்றனர். அவ்வப்போது தனக்குத் தேவையான பொருளைத் தவிர, மற்றச் சாமான்களையோ, செல்வத்தையோ சொந்தமாகச் சேகரித்து வைப்பது கடவுளிடம் அவநம்பிக்கையாகுமென்றும், உலகப் பற்றை வளர்க்குமென்றும் மத குருக்கள் உபதேசித்தனர். பிறர் உழைப்பை அக்கிரமமாக அபகரிக்காமல் சொத்து சேர்க்க முடியாது என்பது மார்க்ஸ் பெரியாரின் மூலக் கொள்கை.

இதற்கு எதிராக, சொத்துரிமையின் பேரிலேயே எல்லாச் சுதந்திரங்களும், குடும்பமும், ஜனநாயகமும் நிலைத்திருக்கின்றனவென்பது பல பொருளாதார, அரசியல் அறிஞரின் சித்தாந்தம். சொத்தின் மூலம் அதன் சொந்தக்காரன் கவலை தீர்ந்து கவிதை, கலை, அரசியல் முதலிய துறைகளில் தேர்ச்சியடையக்கூடும். அப்படியின்றி, சமூகத்தில் அனைவரும் அன்றாடக் கூலிக்கு வேலை செய்து பிழைத்தால் எவருக்கும் சமூகத்தின் நாகரிக சம்பத்துக்களைப் பெருக்க அவகாசமும், அக்கறையுமிராது என்று வாதிக்கின்றனர். மதங்களின் சரித்திரங்களை ஆராய்ந்தாலும், ஆதி மத ஸ்தாபகர்கள் உலக வாழ்க்கையைத் துறந்த துறவிகளாக இருந்தாலும் அவர்களுடைய சீடர்கள் மடங்களையும், ஆலயங்களையும் ஸ்தாபித்து அவற்றுக்கு வேண்டிய ஆஸ்திகளையும் பெருக்கியே மதங்களைப் பரப்புவது சுலபமாயிற்று என்றும் சுட்டிக்காட்டுகின்றனர்.

விவசாய சகாப்தத்திலும், முதலாளித்துவ சமுதாயங்களிலும் சொத்துரிமை சமூக வாழ்க்கைக்கு அஸ்திவாரமாக இருந்திருக்கிறதென்பதை மறுக்க முடியாது. விவசாய சகாப்தத்தில் நிலமே முக்கிய சொத்து. அதை எப்படியோ அடைந்துவிட்டால் அதிலிருந்து வரும் வருமானத்தில் ஜீவித்துக் கொண்டு ஆத்ம விசாரணையிலும், கலைகளின் அப்பியாசத்திலும், க்ஷேத்திராடனத்திலும் காலம் கழிக்கலாம். ஆதலால், நில உரிமை மிகவும் சிக்கலான சட்டப் பிரச்னையாயிற்று. சமீபத்தில் ஜமீன்தாரி முறையை ஒழிப்பதற்காகச் சட்டமியற்றும் பொழுது, ஜமீன்தாருக்கும் நிலத்தைச் சாகுபடி செய்யும் குடியானவனுக்கும் மத்தியில் தோன்றியுள்ள பல பாத்தியக்காரர்களின் உரிமைகளைக் கட்டுப்படுத்துவதும், அவர்களுக்கு ஈடு கொடுப்பதும் மிகவும் கஷ்டமான பாகங்களாக இருந்தன.

விவசாய சகாப்தத்தில், நில உரிமைகள் பெற்றவர்களைத் தவிர, வியாபாரிகளே சொத்துக்காரர்களாக இருந்தனர். ஆனால் அவர்களுக்கு என்றும் ஆபத்துத்தான். அரசனுக்கும், அவனுடைய சேவகர்களுக்கும் ஓயாமல் லஞ்சம் கொடுத்துத் தம் சொத்தைப் பாதுகாக்க வேண்டியிருந்தது. அதனால் பொதுவாக விவசாய சகாப்தத்தில் வியாபாரிகளுக்கு அதிக மதிப்பு இருக்கவில்லை.

சொத்துரிமையின் முக்கிய அம்சம், அது பெற்றோரிடமிருந்து மக்களுக்குச் சேர வேண்



# ரீடா

## உங்கள் வீட்டிற்கு ஒரு தையல் மிஷின் அவசியமே

எப்பொழுதும் மிருதுவாக தொந்தரவின்றி வேலைசெய்வதும், நீடித்து உழைக்கக்கூடியதும், அதே சமயத்தில், சிக்கனமானதுமான தையல் மிஷினையே நீங்கள் எதிர்பார்த்து இருந்தீர்கள். ஆம் அத்தகையதோர் மிஷின்தான் ரீடா.



இதை வாங்கி நீங்களே தைத்துப்பாருங்கள். இரண்டு வருடத்திய பராமரிப்பு உத்திரவாதம் உங்களுக்கு பூரண பாதுகாப்பளிக்கிறது.

இதர விவரங்களுக்கு உங்களுடைய வியாபாரியிடம் கேளுங்கள். அல்லது ரீடா மெக்கானிகல் ஒர்க்ஸ் லூதியானா என்ற விலாசத்திற்கு எழுதவும்




RHY-4-TAM

# தம்பதிகளுக்கு ஓர் ஆலோசனை

1. குடும்பக் கட்டுப்பாடு புத்தகம் ஒன்றைத் தயவு செய்து வாங்கிப் படியுங்கள். புத்தகத்தின் விலை 25 காசுகள்தான் (தபால் செலவு தனி).

2. புத்தகம் மூன்று பாகங்கள் அடங்கியது. முதல் பாகத்தில் சென்னை அரசாங்கத்தினால் நியமிக்கப்பட்டுள்ள குடும்பக் கட்டுப்பாடு போர்டின் ஆலோசனைகள் தரப்படுகின்றன. குடும்பக் கட்டுப்பாடு பற்றிய இயற்கை வழிகள், கருவி வழிகள், ரண சிகிச்சை வழிகள் இவற்றை இரண்டாம் பாகம் எடுத்துரைக்கின்றது. குடும்பக் கட்டுப்பாடு போர்டின் ஆலோசனைகளைப் பின்பற்றி நடப்பது, உங்கள் குடும்பத்துக்கும் நாட்டுக்கும் நீங்கள் செய்ய வேண்டிய கடமை என்பதை மூன்றும் பாகம் தெளிவு படுத்துகிறது. ஆங்கிலத்திலும் தமிழிலும் புத்தகங்கள் கிடைக்கும்.

## புத்தகத்தை எப்படிப் பெறுவது?

(1) அரசாங்க அச்சக சூப்பிரண்டு, மவுண்ட் ரோடு, சென்னை-2 என்ற முகவரியிலும் மற்றும் அரசாங்க வெளியீடு ஏஜெண்டுகளிடமும் கிடைக்கும்.

(அல்லது)

(2) மதராஸ் - 18, வைத்தியத்துறை டைரக்டர் அலுவலகத்திலுள்ள சென்னை மாநிலக் குடும்பக் கட்டுப்பாடு அதிகாரிக்குக் கடிதம் எழுதி ஆங்கிலமோ தமிழோ ஒரு பிரதி கேட்கலாம். உங்களது முழு முகவரியுடன் 40 காசை மணியார்டர் செய்ய வேண்டும். மணியார்டர் மட்டுமே வாங்கப்படும். அஞ்சல் தலைகள் (ஸ்டாம்புகள்) ஒத்துக் கொள்ளப்படமாட்டா. சாதாரண நூல் அஞ்சலில் (புக்போஸ்டில்) ஒரு புத்தகம் உங்களுக்கு அனுப்பப்படும். 86 காசு அஞ்சல் பணம் (மணியார்டர்) அனுப்பினால் புத்தகம் பதிவுநூல் அஞ்சலில் (ரிஜிஸ்தர் புக்போஸ்டில்) அனுப்பி வைக்கப்படும்.

(3) ஒரு மொத்தமாக 25ம் அதற்கும் அதிகமான புத்தகங்கள் வாங்குபவர்களுக்கு மொத்த விலையில் 25 சதவிகிதம் தள்ளிக் கொடுக்கப்படும்.

**சென்னை மாநில குடும்பக்கட்டுப்பாடு அதிகாரி**

டும் என்னும் முறையே. சில நாடுகளில் பிரபுக்கள் தங்கள் நிலங்களை விற்கக் கூடா தென்றும், அது எப்பொழுதும் மூத்த பிள்ளை யைச் சேரும் என்றும் சட்டம் வழங்கி வந்தது. பிரிட்டனின் பிரபு வம்சங்கள் பல நூற்றாண்டு களுக்குப் பிரபலமாக இருந்ததற்கு இது ஓர் முக்கிய காரணமாகும். பாரதத்திலும் கேரளத்திலும் பல தலைமுறைகளுக்குப் பிரிவு படாமல் ஒரு வம்சத்தினர் ஏக குடும்பமாக வசித்துவருவது வழக்கமாக இருந்தது. தந்தை சொத்தை மக்கள் பிரித்துக் கொள்ளலாம் என்ற முறை வழங்கிய சமூகத்தில் தனவந்தர் கள் மறைந்து குறைந்த சொத்துக்காரர்களின் சங்கியை அதிகரித்தது. அவ்வித சமூகத்தில் நடுத்தர வகுப்பினர் மிகுந்த செல்வாக்குடன் இருந்தனர்.

ஆனால், எந்த நாட்டிலும் பெரும்பாலோ ருக்கு அதிக சொத்தில்லை. குடியிருக்கும் குடிசை, தேக உழைப்புக்கு வேண்டிய கருவிகள், ஒரு ஜோடி மாடு—இவைகளே குடியானவனுடைய சாதாரணச் சொத்து. தனது தொழிலின் கருவிகளே கைத் தொழி லாளியின் ஆஸ்தி. ஆதலால் சொத்துரிமைப் பிரச்னை சிறுபான்மையோரைப் பொறுத்த தாகவே இருந்தது. ஆனால் புஸ்தகம், பத்தி ரிகை எழுதுவோர், படிப்போர், அவற்றின் மூலம் வாத விவாதம் செய்வோர் அனைவரும் அவ் வகுப்பைச் சேர்ந்திருந்ததால் சொத் துரிமையின் மகத்துவத்தை மிகைப்படுத்தி வந்தனர்.

இயந்திரத் தொழில் தோன்றவே, சொத் தின் தன்மை முற்றிலும் மாறிவிட்டது. நிலத் தைக் காட்டிலும், இயந்திரங்களே அதிக வருமானத்தைக் கொடுக்கும் சொத்துக்க ளாயின. நாணயச் செலாவணி அதிகரித்துச் சொத்தைப் பணமாகச் சேர்த்து வைப்பதற் கும், அதைப் பலவிதங்களில் லாபகரமான முதலாகப் போடுவதற்கும் வசதிகள் ஏற்பட் டன. முதலாளி வகுப்பு வளர்ந்து சமூகத்தில் பிராதான்யம் பெறத் தொடங்கியது.

இயந்திர சகாப்தத்தில் நடுத்தர வகுப்பா ரின் எண்ணிக்கையும் பெருகி வந்திருக்கிறது. தொழிற்சாலைகளில் சூக்ஷ்ம வேலை செய் வோர், நிர்வாகிகள், சர்க்கார் சேவகர்கள், வைத்தியம், சட்டம் போன்ற தொழில் செய் வோர் முதலியவர்கள் நல்ல ஊதியம் பெற்றுச் சொத்து சேர்க்க வசதியுண்டாயிற்று. வருமா னத்தைப் பொறுத்த வரையில், வட அமெரிக் காவிலும், ஐரோப்பாவில் பிரிட்டன் போன்ற சில தேசங்களிலும் அநேகமாக எல்லாக் குடும் பங்களும் நடுத்தர வகுப்பினராகக் கருதப்பட வேண்டும். மாதம் 300 லிருந்து ரூபாய் 500 வரையில் வருமானமுள்ள குடும்பங்களாகி விட்டன. ஆயினும் இந்த நாடுகளில்கூட, வருமானத்திலிருந்து மிச்சம் பண்ணிக் கணிச மான சொத்து சேர்த்துள்ள குடும்பங்கள் நூற்றுக்குப் பத்துக்கு மேலில்லை.

தொழில் புரியக் கூடிய வயதில் நிச்சயமான ஊதியமும், முதிய வயதில் பென்ஷனும், ஆபத்துக் காலங்களில் சமூக உதவியும் அனை வருக்கும் கிடைத்துவிடக் கூடிய சமூகத்தில் சொத்தினால் அதிக பிரயோசனமில்லை. ஓர் புறம் வரிகள் மூலம் குடும்பச் சொத்துக்கள் பெருகுவதைக் குறைத்து, எல்லோருக்கும்கூலி யும், உதவியும் கொடுப்பதை லட்சியமாகப் பல நாடுகள் ஏற்றுக் கொண்டிருக்கின்றன.

சொத்தைக் குறைப்பதற்கு முக்கிய வழிக ளாவன: தொழில் வருமானத்தின்மீது விதிக் கப்படும் வருமான வரியைக் காட்டிலும் சொத்திலிருந்து கிடைக்கும் வருமானத்துக்கு அதிக வரி விதித்தல்; சொத்தின் வருமானத் தின்மீது வரி விதித்தல்; ஒருவர் இறக்கும் பொழுது அவர் சொத்தின்மீது வரி விதித்தல்; இறந்தவர்களிடமிருந்து சொத்தைப் பெறும் வாரிசுகளிடம் வரி வசூலித்தல்; நன்கொடை கள்மீது வரி விதித்தல்; சொத்தை விற்கும் பொழுதும், வாங்கும் பொழுதும் அதிக ஸ்டாம்பு கட்டணம் விதித்தல் முதலியன. இவை முதலாளித்துவ நாடுகளில் எடுத்துக் கொள்ளப்படும் முறைகள். பொதுவுடைமை அரசாங்கமுள்ள தேசங்களில் சொத்தை முதலாக உபயோகித்து, பிற மனிதர்களின் உழைப்பின் மூலம் சம்பாதிப்பது முற்றிலும் தடுக்கப்படுகிறது. வருமானத்தில் ஏரான மான தாரதம்மியம் இருந்தபோதிலும், அதிக ஊதியம் பெறுவோர் உல்லாசப் பொருள்கள் வாங்கலாம், உணவு, உடை, வீடுகளில் அதிக சௌகர்யம் தேடலாம், யாத்திரை செய்ய லாம். தொழிற்சாலைகள் அமைத்தோ, வியா பாரம் செய்தோ தமது மிச்சங்களைப் பெருக்க முடியாது. மக்களுக்குள்ள வார்சு பாத்திய மும் கட்டுப்படுத்தப் படுகிறது.

இரண்டு முறைகளும் ஒரே முடிவுக்கு மாற்று வழிகளாவன. பிரிட்டன் முதலிய தேசங் களில் கோடீசுவரர்களின் எண்ணிக்கை குறைந்து வருகிறது. சாதாரணமாக வரி



போக வருஷத்துக்கு 2000 பவுன், அதாவது மாதம் ரூ. 2250க்குமேல் வருமானமுள்ளவர்களின் சங்கியை நாற்றில் ஒருவர்கூட இல்லை. மேல் வருமானங்கள் ஓர் புறம் குறைய, கீழ் வருமானங்கள் மறுபுறம் உயரப் பொருளாதார சமத்துவம் இயந்திர சகாப்தத்தில் முன்னேறிய நாடுகளில் பெருகி வருகிறது.

விவசாயமே முக்கியமாக உள்ள நாடுகளில் இதற்கு எதிரான மாறுதலைக் காண்கிறோம். சிற்சில இடங்களில் இயந்திரத் தொழில்கள் தோன்றி முதலாளிகளின் கூட்டம் பெருகி வருகிறது. இயந்திரத் தொழிலாளிகளும், சர்க்கார் சேவகர்களும் விவசாயிகளை விட அதிக ஊதியம் பெற்றுத் தம்மை உயர்ந்த வகுப்பினராகக் கருதுகின்றனர். இதனால் அதிருப்தி யடையும் விவசாயிகளைத் திருப்தி செய்ய நிலச்சுவான்தார்களின் உரிமைகளை ஒழித்தும், குறைத்தும் சாகுபடி செய்வோரின் வருமானத்தைப் பெருக்க முயற்சி செய்கின்றனர். இது சிறிது காலம் மிதமான பலனை அளிக்கும். ஆயினும் விவசாயமும் விஞ்ஞான முறையில் செய்யப்பட்டாலொழிய விவசாயிக்கு இயந்திரத் தொழிலாளியின் வருமானம் கிடைக்காது. விவசாயிகள் நகரங்களுக்குக் குடியேறி வேலை கிடைக்காமல் திண்டாடுவார்கள். புரட்சிக்காரர்கள் அவர்களுடைய துன்பங்களைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்வார்கள்.



பிரயாணி: இந்த பஸ் ஸ்டாப் ஆக வந்த பிறகு நன்றாகத் தான் சுலபமாக இருக்கிறது...... இல்லையா?

முதலாளித்துவ முறையின் முக்கிய பலன் என்னவெனின், பலாத்காரமில்லாமல் முதல் திரட்டப்பட்டு, இயந்திரத் தொழில் விருத்தியாகிறது. இதற்கு நிலையான சொத்துரிமைகளும், வருமான வித்தியாசங்களும் தேவை. சொத்துரிமைகளைக் குறைத்து, வருமான சமத்துவத்தை வளர்க்க வேண்டுமாயின், போதிய முதல் திரட்டுவது கஷ்டமாகி விடுகிறது. இதுவே பாரதத்தின் தற்போதைய நிலைமை. பாரத சர்க்காரின் கொள்கைகளும் வரிவிதிதங்களும் முதலாளித்துவத்தை வளராமல் தடுக்கக் கூடியவையாக இருக்கின்றன. வருமானங்களின் ஏற்றத் தாழ்வுகளைக் குறைத்து வருகின்றன. ஆதலால், பொருளாதார முன்னேற்றத்துக்கு முதல் திரட்டுவது மிகவும் கடினமாகி வருகிறது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் வருஷத்துக்கு 400 கோடி முதல் வேண்டியிருந்தது. அதில் ஒரு பாகம் வெளிநாடுகளிலிருந்து உதவியாகக் கிடைத்தது. ஓர் பாகம் காகித நோட்டுக்களை அச்சடித்துச் சர்க்கார் வழங்கிச் சமாளித்தனர். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் அதிக வெளிநாட்டு உதவிக்கும், 1200 கோடி காகித நாணயப் பெருக்குக்கும் இடமளிக்கப் பட்டிருக்கின்றன. இம்மாதிரி வெளிநாடுகளை நம்பியும், காகித நாணயத்தைப் பெருக்கியும் நீண்ட நாள் சமாளிக்க முடியாது. நாட்டின் முன்னேற்றத்துக்கு வேண்டிய தொகைகளை ஏதாவது ஒரு விதத்தில் மத்திய, ராஜ்ய அரசாங்கங்கள் சட்டமூலமாக எடுத்துக் கொள்ள வேண்டி வரும். அப்பொழுதே, ஜனநாயகத்துக்குச் சோதனை காலமாகும். பொதுமக்களும், சட்ட சபைகளில் அவர்களுடைய பிரதிநிதிகளும் இந்தத் தியாகத்துக்குத் தயாராக இருந்தால், ஜனநாயகமும் அதனை அண்டியிருக்கும் இதர சுதந்திரங்களும் நிலைத்திருக்கும். இல்லையேல், அரசியல் குழப்பங்களும், பொருளாதாரத் தேக்கமும் வகுப்புவாதங்களும் தவிர்க்க முடியா.

இதற்கு ஆசாரியா விநோபா அவர்கள் மகாத்மா காந்தியடிகளின் உபதேசங்களை ஆதாரமாகக் கொண்டு ஓர் வழி பிரசாரம் செய்து வருகின்றார். சொத்துரிமைகளை அனைவரும் மனப்பூர்வமாகத் தியாகம்செய்துவிட்டு, இயந்திர சகாப்தத்தை வெறுத்து, விவசாய சகாப்தத்தின் பொருளாதாரத்தையும், சங்சார சகாப்தத்தின் பொது உடைமையையும் ஏற்று ஓர் சர்வோதய சகாப்தம் ஏற்படுத்த வேண்டும் என்பது அவருடைய லட்சியம். பொது மேடைகளில், அதைப் பல பிரமுகர்கள் ஏற்றுக் கொள்ளுகிறார்கள். ஆனால் தங்கள் வாழ்விலும், தொழில்களிலும் உலகின் தடுக்க முடியாத போக்கை அநுசரிக்கின்றனர்.

தொழிலும், வருமானமும், முதிய வயதில் பென்ஷனும், ஆபத்தில் உதவியும் நிச்சயமாகக் கிடைக்கக் கூடிய ஓர் பொருளாதார நிலையும், சமூக அமைப்பும் ஏற்படும் வரையில் சொத்துரிமைகளைத் தாமாகத் துறக்கப் பலர் முன் வரமாட்டார்கள். நமது நாட்டில் துறவறம் பரம்பரையாக இருந்து வருவதால், எவ்விதத் தியாகத்துக்கும் தயாராகச் சிலர் இருப்பதில் ஆச்சரியமில்லை. சொத்தில்லாதவர்கள் மற்றவர்கள் சொத்துரிமைகளைத் துறப்பதைப் பற்றிக் குதூகலமாக ஆதரிப்பதும் சகஜம்.

இவ்வுலகுக்கு ஓர் தனி விலக்காகி, 36 கோடி பாரத மக்கள் மனப்பூர்வமாக வறுமை வாழ்க்கையை ஏற்றுக் கொள்ளுவார்கள் என்று எண்ணுவதற்கு இடமில்லை. இயந்திர சகாப்தத்தில் அவர்கள் எளிதில் முன்னேற முடியாது என்பதும் உண்மையே. ஆயினும் விஞ்ஞான முறைகளை மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டு, அதன்மூலம் படிப்படியாக நாட்டின் செல்வத்தை வளர்த்து, நியாயமாகப் பங்கிட்டு வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கு வேண்டிய முறைகளைத் தைரியமாகக் கையாளத் தயங்கும் எந்த அரசாங்கமும் நிலைபெற்றிருக்க முடியாது என்பது நிச்சயம்.

# ஐஸ் டீ



\+



**தேநீரும்
எலுமிச்சையும்
கோடையில்
நல்ல பானமாகும்**



அதைத் தயாரிப்பதும் சுலபம்!

1. கெட்டிலை புதிய நீரால் நிரப்பி, கொதிக்க வையுங்கள்.
2. ஆவி வந்தவுடன் கெட்டிலை அடுப்பிலிருந்து அகற்றி தேநீர் பாத்திரத்தை வெந்நீரால் அலம்பிவையுங்கள்.
3. நம்பகமான வியாபாரியிடம் வாங்கிய தேயிலையில் மூன்று தேக்கரண்டிகள் தேநீர் பாத்திரத்தில் (12 அவுன்ஸ் பிடிக்கும்) போட்டு, ஐந்து நிமிஷங்கள் வரை ஊற வைக்கவும்.
4. இப்பொழுது, ஊறிய தேநீரை ஐஸ் துண்டுகள் நிறைந்த ஒரு கண்ணாடி டம்ளரில் வடிகட்டியின் மூலம் வடிகட்டிக் கொள்ளுங்கள். ருசிக்கு ஏற்ப சர்க்கரையையும், எலுமிச்சம் பழத்துண்டுகளையும் சேர்த்துக் கொள்ளுங்கள். ஆனால் பால் வேண்டாம்.
5. சில நிமிஷங்கள் குளிர வைத்து கலக்கி ஆனந்தமாக அருந்துங்கள்.




நீங்கள் அதிகப்படியான ஐஸ் டீ தயாரிக்க விரும்பினால் ஒவ்வொரு 6 அவுன்ஸ் பிடிக்கும், கோப்பைக்கு 1 தேக்கரண்டி வீதமும், உருகும் ஐஸுக்காக அரைக்கரண்டி வீதமும் கணக்கிட்டுப் போடவும்.



அத்தியாயம் 15

## பண்பும் பணமும்

சேகருக்கும் வீரப்பனுக்குமிடையே சண்டை நடப்பதாக அறிந்தாள் கமலம். ஓட்டமாக ஓடி வந்த அவள் மல்லிகா தரையில் விழுந்து கிடந்து விம்முவதைப் பார்த்தாள். தாயின் உள்ளம் துடிதுடித்தது. பாய்ந்து சென்று மகளை அன்புடன் அணைத்துத்தூக்கினாள்.

கணக்குப் பிள்ளையிடம் அடிவாங்கிய வீரப்பன் சற்றுத்தூரத்தில் தலைகுனிந்து, கைகட்டி நின்றான். அவனுடைய ஆவேசமெல்லாம் அடங்கி விட்டது. வாலிபன் சேகரிடம் வெளிப்பட்ட முரட்டுக்குணம் வயோதிகர் சச்சிதானந்தத்திடம் அடங்கிப் போய் விட்டது.

''என்ன காரியம் செய்து விட்டாய், வீரப்பா? நம்முடைய கிராமத்துக்கே துடைக்க முடியாத அவமானத்தையல்லவா தேடித் தந்து விட்டாய்?'' என்றார் கணக்குப் பிள்ளை சச்சிதானந்தம்.

வீரப்பனுக்குப் பின்னால் நின்று கொண்டிருந்த அவனுடைய மனைவி இப்போது முன்னால் ஒரு அடி எடுத்து வைத்தாள். ''கணக்கையா! இவராலே நம்பக் கிராமத்துக்கு அவமானம் ஒன்றும் வந்து விடவில்லை. இதோ நிற்கிறாளே, இந்த வெட்கங்கெட்ட பெண்ணாலேதான் நம்முடைய கிராமத்துக்கு அவமானம் நேர்ந்திருக்கிறது!'' என்றாள்.

''ஏ புள்ளே! நீ சும்மா இரு!'' என்று அவள் வாயைப் பொத்தினான் வீரப்பன்.

திடீரென்று மல்லிகாவுக்கு ரோசம் வந்து விட்டது. கம்பீரமாக நிமிர்ந்து நின்று, ''நாங்கள் ஒருவரையொருவர் மனமாரக் காதலிக்கிறோம். கல்யாணம் செய்து கொள்ளப் போகிறோம். அதிலே வெட்கப்படுவதற்கு என்ன இருக்கிறது? அவமானத்துக்கு என்ன இருக்கிறது?'' என்று கேட்டாள்.

பேச்சை வளரவிட விரும்பாமல் கணக்குப்பிள்ளை, ''ஆமாம்! சேகர் தன் பெற்றோர்களிடம் சம்மதம் பெற்று வரச் சென்றிருக்கிறான். விரைவிலேயே அவர்களுடைய ஆசியுடன், மல்லிகாவைக் கல்யாணம் செய்து கொள்வான்'' என்றார். கமலத்தைப் பார்த்து, ''குழந்தையை வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போ, அம்மா'' என்றார். பின்னர் கூடியிருந்த மக்களிடம் ''எல்லோரும் அவரவர் வேலையைக் கவனியுங்கள். உம்! சீக்கிரம்!'' என்று விரட்டினார்.



கிராம மக்கள் கலந்தார்கள். அநீதி ஏற்பட்டது என்று தோன்றினால் வீரத்துடன் பொங்கி எழும் தமிழ் மக்கள் சமாதானத்துக்கு மயிரிழை காரணம் கிடைத்தால் அதையும் விடுவதில்லை. திருமணம் என்ற வார்த்தையே இப்போது அவர்களையெல்லாம் சமாதானமடையச் செய்து விட்டது.

* * *

"அம்மா! அவர் கோபித்துக் கொண்டு போய் விட்டாரம்மா! அடிபட்ட அவரை ஆதரவாக அணைக்கச் சென்ற என்னைக் கீழே தள்ளிவிட்டுப் போய்விட்டார்! என்னால் அவருக்கு அவமானம் ஏற்பட்டு விட்டதம்மா! இனிமேல் என்னைத் திரும்பிக்கூடப் பார்க்க மாட்டார்!" என்று கமலத்தின் மார்பில் முகத்தைப் புதைத்துக் கொண்டு அழுதாள் மல்லிகா.

தன் மகளின் கூந்தலை மெள்ளத் தடவிக் கொடுத்தாள் கமலம். "அசடே! உன்மீது அவருக்கு என்ன கோபம் இருக்க முடியும்? நீ என்ன செய்து விட்டாய்? அவருடைய கோபமெல்லாம் வீரப்பன் மீதுதான். இன்னும் சில நாட்கள் பொறுத்திரு. நிச்சயமாக வந்துவிடுவார் பார்!" என்றாள் கமலம்.

அன்று சேகரைப் பற்றிச் சந்தேகத்துடன் பேசிய அதே கமலம் இன்று அவனுக்காகப் பரிந்து பேசி அழுது கொண்டிருந்த மகளைத் தேற்றினாள்! தாய்ப் பாசம்தான் என்ன விந்தையான காரியங்கள் செய்கிறது?

"அம்மா அவர் நேரில் வருவதற்கு நாளானாலும் ஒரு கடிதமாவது போடக் கூடாதா? அவர் போய் இன்றோடு இரண்டு வாரங்கள் ஆகிவிட்டதே? இல்லை அம்மா! அவர் என்னை மறந்து தான் போய் விட்டார்!"

"அதெல்லாம் ஒன்றுமில்லை. நீயாக அனாவசியமாக என்னென்னவோ நினைத்துக் கொண்டு துக்கப்படுகிறாய். கடிதம் போட்டிருப்பார். தபாலில் வரும்போது எங்கேயாவது கெட்டுப் போயிருக்கும். நீ வேண்டுமானால் அவருக்கு ஒரு கடிதம் எழுதிப் பாரேன்?"

மல்லிகாவின் முகம் மலர்ந்தது. இத்தனை நேரம் இது தோன்றாமல் போய் விட்டதே? என்ன இருந்தாலும் அம்மாவுக்கு இருக்கும் சாமர்த்தியம் வேறு யாருக்கு உண்டு? சந்தோஷ மிகுதியால் தாயை இறுகக் கட்டிக் கொண்டாள் மல்லிகா. திடீரென்று அவளுக்கு ஒரு சந்தேகம் வந்து விட்டது. சற்றுத் தயங்கினாள் மல்லிகா.

"ஏன் தயங்குகிறாய் மல்லிகா? சேகர் எழுதிக் கொடுத்த விலாசத்தைத் தொலைத்து விட்டாயா என்ன?"

"இல்லை அம்மா! அதைத் தொலைப்பேனா? ரொம்பப் பத்திரமாகவைத்திருக்கிறேன். ஆனால் நான் எழுதி ஏழு வருஷங்கள் ஆகிவிட்டதே அம்மா? இப்போது எழுதினால் நன்றாக இருக்குமா? அவருக்குப் பிடிக்குமா?"

"நல்ல கேள்வி கேட்டாய்? நாலு கோடுகள் கிறுக்கி அனுப்பினாலும் அது உன்னிடமிருந்து வந்தால் அவருக்கு ஆனந்தமாகத்தான் இருக்கும்."

சிரித்தாள் மல்லிகா! சிரித்துக் கொண்டே எழுதினாள். சதா அவருடைய நினைவாகவே இருப்பதாகவும் பிரிவுத்



துயரைத் தாள முடியவில்லை என்றும் கூடிய சீக்கிரம் திரும்பி வந்து தன்னைக் கல்யாணம் செய்து கொள்ளும்படியும் கடிதத்தில் மன்றாடிக் கேட்டுக் கொண்டாள். கணக்கையாவிடம் விலாசத்தை மட்டும் காட்டிச் சரியாக இருக்கிறதா என்று கேட்டாள். இரண்டொரு திருத்தங்கள் செய்து கடிதத்தைத் தபாலில் சேர்த்தார் சச்சிதானந்தம்.

அந்தக் கடிதத்துக்குப் பதில் இல்லை!

அதற்கப்புறம் மல்லிகா எழுதிய ஏராளமான கடிதங்களுக்கும் பதில் இல்லை! அவளுடைய உள்ளத் துடிப்பை அடக்குவாரில்லை. அவளுடைய பிரிவுத் துயரத்தைத் தணிப்பார் இல்லை. அவளுடைய சோகத்துக்கு ஆறுதலளிக்கப் பதில் இல்லை. அவளுடைய கண்ணீரைத் துடைக்கக் கடிதம் வரவில்லை. கிராம மக்களுடைய சந்தேகத்தைத் தீர்க்கச் சேகர் பதில் எழுதவில்லை!

அவர்களுடைய சந்தேகம் வளர்ந்து கொண்டே இருந்தது. முன்பு அவர்கள் அடைந்த சமாதானம் நீடிக்கவில்லை. சந்தேகக் கண்களோடு மல்லிகாவையும் அவள் தாயாரையும் பார்த்தார்கள். காதோடு காதாகப் பேசினார்கள். மறைமுகமாக ஏசினார்கள்.



எங்கு திரும்பினாலும் யாரோ தன்னைப் பார்த்து ஏளனமாகச் சிரிப்பது போலிருந்தது மல்லிகாவுக்கு.

மறைமுகமாக இருந்து வந்த ஏசல் விரைவில் வெளிப்படையாயிற்று. கமலமும், மல்லிகாவும், சிறுமி சரஸ்வதியும் கூடத் தீண்டப்படாதவரானார்கள்.

தான் தோற்று விட்டதை உணர்ந்தாள் மல்லிகா. தன்னம்பிக்கையுடன் சுற்றித் திரிந்த அவளுக்கு அவமானம். தாள முடியாத, தீராத அவமானம். கிராமமே சிரிக்கிறது! பேதைப் பெண் மல்லிகா மனம் பொருமினாள்.

* * *

படுத்திருந்த கமலத்தினிடமிருந்து முனகல் சத்தம் கேட்டது. அருகே சென்றாள் மல்லிகா. கமலத்தின் கண்கள் மூடியிருந்தன. தாங்க முடியாத வேதனையை அனுபவிப்பவளைப் போல் தன் தலையை ஆட்டிக் கொண்டிருந்தாள். நெற்றியில் கையை வைத்துப் பார்த்தாள் மல்லிகா. நெருப்பில் கையை வைத்து விட்டதுபோல் சடாரென்று பின்னுக்கு இழுத்துக் கொண்டாள்.

எழுந்திருந்து ஓட்டமாக ஓடினாள், வைத்தியரையா வீட்டுக்கு. "அம்மாவுக்குக் காய்ச்சல். அனலாட்டமா உடம்பு சுடுகிறது. கொஞ்சம் சீக்கிரமா வாங்க" என்றாள்.

'போ போ' என்று விரல்களை ஆட்டிச் சமிக்ஞை செய்தார் வைத்தியர். அவளிடம் பேசக்கூட அவருக்குக் கொஞ்சமும் பிடிக்க வில்லை.

"அப்படிச் சொல்லாதீங்க. தயவு செய்து வாங்க. கும்பிடறேனுங்க."

வைத்தியர் தயங்கினார். விரலைச் சுண்டிப் 'பணம்' என்று ஜாடை காட்டினார் அந்தத் தயாளன்!

மல்லிகா திகைத்துப் போனாள். இப்படிப்பட்ட கல்நெஞ்சமும் இருக்க முடியுமா? திரும்பி ஓடினாள், கணக்கையா வீட்டுக்கு. அவர் காலில் விழுந்து தன் தாயாரின் நிலையைச் சொல்லி உதவி கேட்டாள். "அம்மா, உலகத்தின் தன்மை அது தான். பணம் இருக்க வேண்டும்; அல்லது பண்பு இருக்க வேண்டும். பணம் உன்னிடம் இல்லை. பண்பும் இல்லை என்று கிராம மக்கள் தீர்மானித்து விட்டார்கள். இரண்டும் இல்லாதவரிடம் வைத்தியர் எப்படி வருவார்?"

"ஐயா! நான் உபதேசம் கேட்க வரவில்லை. அம்மா உயிருக்கு மன்றாடுகிறாள். தயவுசெய்து உடனே உதவி செய்யுங்கள்" என்று கெஞ்சினாள் மல்லிகா.

உளுத்துப்போன ஒரு மேஜையைத் திறந்து கிழிந்து போன ஒரு மணிபர்ஸை எடுத்தார் கணக்கையா. அதிலிருந்து அழுக்கடைந்த பழைய பத்து ரூபாய் நோட்டை எடுத்து நீட்டினார். நோட்டுடன் சிட்டாகப் பறந்தாள் மல்லிகா.

நோட்டைப் பார்த்ததும் வைத்தியரின் கண்கள் விரிந்தன. இடுப்பில் அதைச் செருகிக்கொண்டு கமலத்தின் வீட்டுக்குப் புறப்பட்டார்.

கண்ணை விழித்துக் கொண்டாள் கமலம். மல்லிகாவைப் பார்த்தாள்.

அவள் உதடுகள் அசைந்தன. அருகே சென்று காது கொடுத்துக் கவனமாகக் கேட்டாள் மல்லிகா.

"அந்தப் போட்டோ படம்......அவர் இருக்கிறரே அந்தப் படம்......அதைக் கொஞ்சம் காட்டேன்."

படத்தைத் தேடினுள் மல்லிகா. வைத்தியர் நாடி பிடித்துப் பார்த்தார். உதட்டைப்பிதுக்கினுர். மல்லிகாவுக்குப் படம் அகப்படவில்லை. சட்டென்று அவளுக்குச் சேகர் அந்தப் படத்தைப் பார்த்துச் சந்தேகப்பட்டதும், "நிச்சயமாகத் தெரியவில்லையே, நிச்சயப்படுத்திக் கொண்டு சொல்கிறேன். அதுவரைக்கும் இந்தப் புகைப்படம் என்னிடமே இருக்கட்டும்" என்று சொன்னதும் நினைவுக்கு வந்தன.

"அம்மா! படத்தைச் சேகர் எடுத்துக் கொண்டு போயிருக்கிறர் அம்மா!"

"மல்லிகா! எப்போதாவது உன் அப்பாவை நீ பார்க்க நேர்ந்தால் அவரை நினைத்துக் கொண்டே நான் உயிரை விட்டேன் என்று சொல்லு! மறந்து விடாதே!"

கமலத்தின் கண்கள் மூடிக் கொண்டன. வைத்தியருக்கு இனி அங்கே வேலையில்லை. இடுப்பில் இருந்த நோட்டைத் தடவிக்கொண்டே வெளியேறினர்.

சிதை எரிந்து கொண்டிருந்தது. அதன் அருகே கணக்கையாவும் மல்லிகாவும் சிறுமி சரஸ்வதியும் நின்றார்கள்.

"அம்மா எங்கே அக்கா?" என்று கேட்டாள் சரஸ்வதி.

"அம்மா கடவுளிடம் போய் விட்டாள், கண்ணு."

"இந்த நெருப்பு வழியா கடவுளிடம் போகிறளா அக்கா?"

"ஆமாம் கண்ணு."

கடவுளையே அடைந்து விடுவதுபோல் தான் நெருப்பு பாய்ந்தது. வான முகட்டைத் தொட்டு அதற்கும் அப்பால் இருக்கும் தெய்வத்தை அடைய முயற்சி செய்தது. பாய்ந்து சென்ற அந்தத்தீயின் ஜுவாலையுடன் போட்டி போட்டுக் கொண்டு மல்லிகாவின் கண்கள் அனலைக் கக்கின. அந்த அனலின் வெப்பத்தைத் தாங்க முடியாததால்தானேஎன்னவோ, சிறிது நேரத்தில் அந்தக் கண்களில் கண்ணீர் ததும்பியது.

"அம்மா, என்னை மன்னித்து விடு!" என்று அலறினுள் மல்லிகா.

## அத்தியாயம் 16
## "திரும்பிப் போ!"

அன்று இரவு வீட்டை விட்டு வெளியேறிய மணி நேராகப் பம்பாய்க்குப் போனன். தெருவில் உட்கார்ந்து சில நாட்கள் பூட்ஸுக்குப் பாலிஷ் போட்டான். கை வலித்தது. ஒரு ஸ்டுடியோவில் வேலை கிடைத்தது. அங்கு நட்சத்திரங்களுக்கு 'சாய்' கொண்டு வந்து கொடுத்தான். டைரக்டர்களுக்குச் சிகரெட் வாங்கி வந்தான். படாதிபதிகளுக்குக் 'கொக்கோ கோலா' உடைத்துக் கொடுத்தான். விட்டத்தில் கால் கடுக்க உட்கார்ந்து நடிகை மீது விளக்கொளி செலுத்தினன். சில மாதங்களுக்குள் அது அலுத்துப் போய் விட்டது. ஆமதாபாத்துக்குப் போனன் மணி. ஒரு துணி ஆலையில் வேலை கிடைத்தது. நாள் முழுவதும் கடபுடா ஒலி அவனுக்குத் தலைவலியைக் கொடுத்தது. பஞ்சுத் தூள்கள் மூக்கில் ஏறித் தும்மலை வரவழைத்தன! பரோடாவுக்குத் திரும்பினன். அங்கு ஒரு மருந்து உற்பத்திச் சாலையில் சில நாட்கள் இருந்தான். பாட்டில்கள் மீது லேபின் ஒட்டினன். அந்த வேலையைச் செய்ய ஒரு இயந்திரத்தை வாங்கிவிட்டு மணியை அனுப்பி விட்டார்கள்! காசியில் சிறிது நாட்கள் இருந்தான் மணி. இறந்தவர்களைச் சொர்க்கத்துக்கு அனுப்பப் பிரேதங்களைக் கங்கையில் மிதக்க விடும் காட்சியைப் பார்த்த பிறகு அவனல் அங்கு இருக்கவே முடியவில்லை. ஹரித்வாரத்துக்குப் போனன். சின்னஞ்சிறிய அகல் விளக்குகளை ஏற்றிவைத்து இரவில் கங்காதேவியின் மடியில் மிதக்க விட்டார்கள். நூற்றுக்கணக்கான விளக்குகள் நதி நீரத்தில்மிதந்து சென்ற காட்சி அற்புதமாக இருந்தது. மணிசேகரனுக்குத் தமிழ்நாட்டில் கொண்டாடும் கார்த்திகை ஞாபகம் வந்தது. சென்னைக்குத்திரும்ப வேண்டும் என்று தோன்றியது. உடனே அங்கிருந்து கிளம்பிவிட்டான். அலகாபாத்துக்குப் போனன். அங்கு கங்கையும் யமுனையும் நீண்டநாட்கள் பிரிந்திருந்த சகோதரிகளைப் போல் ஒன்றையொன்று ஆலிங்கனம் செய்து கொள்வதைக் கண்டான். தான் விட்டுப் பிரிந்து வந்த மாமாவும் மாமியும் ஞாபகம் வந்தது அவனுக்கு. கல்கத்தாவுக்குச் சென்றன். ஒரு மோட்டார் கம்பெனியில் வேலை செய்தான். புது தில்லிக்குப் போனன். இன்னும் எத்தனை எத்தனையோ இடங்களைச் சுற்றி விட்டு,

இனிமேல் தமிழ்நாட்டைப் பார்க்காமல் இருக்க முடியாது என்ற நிலை வந்ததும் சென்னைக்குத் திரும்பி வந்தான்.

இந்தப் பிரயாணங்களின் போதெல்லாம் மணிசேகரனுக்கு உற்ற துணையாக இருந்து வந்தது உமார்கய்யாம் என்ற பாரசீகக் கவி எழுதிய பாடல்கள்தான். கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவற்றைத் தமிழில் மொழி பெயர்த்திருக்கிறார் என்று அறிந்து அவன் ஒரு புத்தகத்தை வரவழைத்தான். மணியினுடைய இயற்கையான குணத்துக்கு ஏற்ப அந்தப் பாடல்கள் அமைந் திருந்தன. திரும்பத் திரும்ப அந்தப் பாடல்களைப் படித்துப் படித்து அவன் மனத்தில் அப்படியே பதிந்து விட்டன. அவனுக்கு மிகவும் பிடித்தமான ஒரு பாடலை அடிக்கடி பாடுவான்.

**இருக்கும் காலம் சிறிதேயாம்;**
**இதனுள் இன்ப வாழ்வினையாம்**
**பெருக்குமளவு பெருக்கிடுவோம்:**
**பிழையொன் றதனால் உண்டோ?சொல்**
**உருக்கும் பாடல் கேளாமல்**
**உண்ணும் மதுவும் உண்ணுமல்**
**பொருக்கு மண்ணில் மண்ணுகப்**
**புதைந்து போனல் என்செய்வோம்?**

பொருக்கு மண்ணில் புதைந்து போவது தவிர்க்க முடியாதது. வாழும் காலத்தை இன்பமாகக் கழிப்பதில் என்ன தவறு? தவறு ஒன்றுமே இல்லை. அதுதான் சரி. அப்படித்தான் இருக்க வேண்டும் என்று எண்ணினன் அவன். எண்ணியபடியே நடந்தும் வந்தான். கலகலப்பாகப் பேசுவதும் குதூகலமாகச் சிரிப்பதும் எப்போதும் மலர்ந்த முகத்துடன் இருப்பதும் அவனுடைய சுபாவமாகப் போய் விட்டன.

ஆனல் சீக்கிரத்திலேயே இந்த சுபாவம் வெளிப்படையானது தான் என்றும் அவனுக்குத் தெரிந்து போயிற்று. மனத்துக்குள்ளே ஒரு ஏக்கம். தாய் தந்தையர் இறந்து போய் அனுதையாக விடப்பட்ட அவன், தான் இழந்த பெற்றோர்களின் அன்புக்காக ஏங்கினன். பெற்றோர்களைப் போலவே வேறு இருவர் அவனுக்கு அமைந்தார்கள். அன்பு காட்டினர்கள். உணர்ச்சி வசப்பட்டு அவர்களையும் விட்டுப் பிரிந்து வந்து விட்டான். அதன் பின்னர் வைராக்கியம் பத்து வருஷங்கள் அவனைப் பிரித்து வைத்திருந்தது. இந்தப் பத்து வருஷங்களும் உள்ளத்தின் ஆழத்தில் அவன் பிரிவுத் துயரை அனுபவித்துக் கொண்டு தான் இருந்து வந்தான்.

அதற்கு முடிவு காலம் வந்துவிட்டது. வெளிப்படையாக இருந்து வந்த குதூகலம் மனத்திலும் இனி நிறைந்து விடும் என்று நினைத்தான் மணிசேகரன். மாமாவையும் மாமியையும் பார்த்ததும் உண்மையிலேயே அவன் உள்ளம் நிறைந்தது. ஆனல் விமலாவைப் பார்த்ததும் மறுபடியும் உள்ளத்தில் ஒரு



சூன்யம் ஏற்பட்டு விட்டது! மறுபடியும் ஒரு ஏக்கம் குடிகொண்டு விட்டது!

முன்பு மாமா மாமியைப் பிரிந்ததால் ஏற்பட்ட ஏக்கத்தைவிட, 'விமலாவைத் தான் அடைய முடியாதோ?' என்ற ஏக்கம் அதிகமாக இருப்பதை உணர்ந்தான் மணி. இந்த ஏக்கத்தை அவனல் சமாளிக்கவே முடியவில்லை. பல்லைக் கடித்துக் கொண்டு சில நாட்கள் பொறுத்திருந்தான். இனி பொறுக்க முடியாது. இனியும் இந்த எண்ணத்தை வெளியிடாவிட்டால் பைத்தியமே பிடித்து விடும் என்ற நிலை வந்ததும் கேட்டு விட்டான் மணிசேகரன்.

மணிசேகரனுடைய பேச்சைக்கேட்டு விமலா சிறிது நேரம் திகைத்து நின்றுள். அந்தச் சிறிது நேரத்திலே அவளுடைய உள்ளம் பல வகைப்பட்ட உணர்ச்சிகளை அனுபவித்தது. காதல் போட்டியில் வெற்றிபெற்ற தன் அருமை அத்தானை எண்ணி அவள் மகிழ்ந்தாள்; உவகை அடைந்தாள். 'நான் தூங்கிப் போன முயலாகி விட்டேன்' என்ற வார்த்தைகள் மணிசேகரனைப் பார்த்து அவளுடைய மனம் எள்ளி நகையாடும்படி செய்தது.

அந்த உவகையிலும் நகைப்பிலும் இரண்டு பேரைக் காதல் போட்டியில் ஈடுபடும்படி செய்த தன்னைப் பற்றியே சிறிது பெருமிதமும் கலந்திருந்தது. தன்னைப் பற்றி எண்ணினள் விமலா. தன் அழகு இரு ஆடவரைக் கவர்ந்திருப்பதை நினைத்துப் பார்த்தாள். அந்தப் பெருமிதம் அவளை மணியிடம் மேலும் பேசும்படி செய்தது!

"அத்தானுக்கும் எனக்கும் கல்யாணம் நிச்சயமாகிப் போன விஷயம் என்பது உங்களுக்குத் தெரியாதா?"



"தெரியும் விமலா. நன்றாகத் தெரியும். அதனால்தான் இத்தனை நாட்கள் தயங்கித் தயங்கி நின்றேன். இனிப் பொறுக்க முடியாது என்ற நிலை ஏற்பட்டதும்தான் உன்னிடம் தெரியப்படுத்தினேன். திருமணப் பேச்சு நடப்பது உண்மை. ஆனால் இன்னும் கல்யாணம் நடந்துவிடவில்லையே? நீ விரும்பினால் எந்த நேரமும் கருத்தை மாற்றிக்கொள்ள உனக்கு உரிமை உண்டு, விமலா!"

விமலாவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. 'கருத்தை மாற்றிக் கொள்வதாமே? நன்றாகத்தான் இருக்கிறது. இந்த மனிதர் கல்யாணத்தையே நிறுத்தி விடுவார்போல் இருக்கிறதே?' என்று எண்ணினாள். மணிசேகரனின் பேச்சு நகைப்புக்கு இடம் அளிப்பதாகவே அவளுக்குத்

தோன்றியது. ஒரு வேளை நிஜமாகவே அப்படித்தானோ? வேண்டுமென்றே தன்னைக் காதலிப்பது போல் பாவனை செய்கிறாரோ? இதுவும் வழக்கமான அவருடைய விளையாட்டுப் பேச்சில் சேர்ந்ததோ?

"இதெல்லாம் உங்களுடைய வேடிக்கைப் பேச்சைச் சேர்ந்ததா?" என்று கேட்டாள் அவள்.

"வேடிக்கையா? உடல் நெருப்பில் வதங்குவது உனக்கு வேடிக்கையானால் இதுவும் வேடிக்கைதான் விமலா! அனலில் உள்ளம் உருகுவது வேடிக்கையானால் நான் பேசுவதும் வேடிக்கைதான்! உன்னைக் காணும் போதெல்லாம் என் இதயம் பெரிதாகப் படபடவென்று அடித்துக் கொள்கிறதே அது ஏன்? உன்னை ஒரு கணம் பார்க்காமல் இருந்து விட்டால் ஏக்கம் என்னை ஆட்கொள்கிறதே. நீ சிரித்துச் சந்தோஷமாக இருந்தால் என் உடலில் இன்ப வெள்ளம் பெருக்கெடுக்கிறதே, நீ துக்கப்பட்டுக் கண்ணீர் விட்டால் என் நெஞ்சு வெடித்து உதிரம் கொட்டுவது போல் இருக்கிறதே, நீ கடைக் கண்ணால் என்னை ஒரு பார்வை பார்த்து விட்டால் என் மேனி சிலிர்க்கிறதே, உன் எழிலுருவத்தைப் பார்க்கும் போது என் உடலும் உள்ளமும் குளிர்ந்து போகிறதே, நெற்றியில் சுருக்கங்களுடன் என்னிடம் சிறிது கோபமாக நீ பேசி விட்டால் என் உயிரே பிரிவது போன்ற உணர்ச்சி ஏற்படுகிறதே, இவையெல்லாம் உனக்கு வேடிக்கை என்றால் வேடிக்கை என்ற வார்த்தையின் அர்த்தமே எனக்கு விளங்கவில்லை, விமலா!"



மூச்சு விடாமல் கூறிக் கொண்டே போனான் மணிசேகரன். தன் கண்களை அகல விரித்து ஒரே ஆச்சரியத்துடன் கேட்டுக் கொண்டிருந்தாள் விமலா. இந்த மாதிரி தன்னிடம் யாரும் பேசி அவள் கேட்டதேயில்லை. உணர்ச்சி மயமான இந்தப் பேச்சுக்கு எப்படிப் பதில் சொல்வது? என்ன பதில் சொல்வது? அவளுக்கு ஒன்றுமே புரியவில்லை.'

அவள் இப்படி வியப்புடன் தன்னைப் பார்த்துக் கொண்டே நிற்பதை மணிசேகரன் கவனித்தான். ஒரு நீண்ட பெருமூச்சுடன், "விமலா! நீ இப்போது எனக்குப் பதில் சொல்ல முயற்சி செய்யாதே! வேண்டாம். நன்றாக, நிதானமாக யோசித்துப் பார்த்து விட்டு அப்புறம் பதில் சொல்லு. நான் போய் வருகிறேன்" என்று சொல்லிக் கொண்டே திரும்பி நடந்தான். அவன் சென்ற திக்கையே பார்த்துக் கொண்டு நீண்ட நேரம் நின்று கொண்டிருந்தாள் விமலா.

* * *

விமலாவிடம் விடைபெற்றுக் கொண்டு சென்ற மணிசேகரன் மாமா ராமலிங்கம் கொடுத்த அறிமுகக் கடிதத்துடன் டைரக்டர் சுகுமாரனைப் பார்க்கச் சென்றான். அவரைப் பார்ப்பது என்பது அவ்வளவு எளிதான காரியமாக இல்லை. கேட்டில் இருந்த கூர்க்கா, தோட்டத்தில் இருந்த நாய், வாசல் கதவருகே இருந்த சேவகன், உள்ளே இருந்த காரியதரிசி ஆகிய இத்தனை தடங்கல்களையும் தாண்டிக் கொண்டு சுகுமாரனைக் காணச் செல்வதற்குள் மணிசேகரனுக்குப் போதும் போதும் என்றாகி விட்டது.

மூடியிருந்த பளபளப்பான கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்றான் மணி. அவன் நுழைந்ததும் கதவு மீண்டும் தானாகவே மூடிக் கொண்டது. குளிர்ச்சி சாதனம் பொருத்தப்பட்டுக் குளுகுளுவென்று இருந்த அந்த விசாலமான அறை செல்வத்தின் நிலைக்களனாக விளங்கியது. தரை முழுவதும் ரத்தச் சிவப்பான ரத்தினக் கம்பளம். அதன் நடுவே ஒரு அகன்ற மேஜை. அதற்குப் பின்னால் நிமிர்ந்து உட்காரவும் சாய்ந்து கொள்ளவும் வசதியான ஒரு நாற்காலி. கண்களுக்குக் குளிர்ச்சியாகப் பச்சை வர்ணம் அடிக்கப்பட்ட சுவர்கள். உயர்ந்த கலைஞர்கள் தீட்டிய ஓவியங்கள். இவற்றுக்கெல்லாம் திருஷ்டிப் பரிகாரம்போல் மேஜைக்குப் பின்னால் ஒரு பெரிய சினிமா விளம்பரம்!

டைரக்டர் சுகுமாரன் ஒரு நடிகையின் புகைப்படத்தை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். மேலேயும் கீழேயும் பக்கவாட்டிலேயும் பல கோணங்களில் அதைத் திருப்பித் திருப்பிப் பார்த்தார். தலையை அசைத்தார். மேஜையின் மீது இருந்த ஏராளமான புகைப்படங்களுடன் இதையும் சேர்த்துப் போட்டு விட்டுத் திரும்பினார். அப்போதுதான்

மணிசேகரனைக் கவனித்த அவர் சற்றுத் திடுக்கிட்டுப் போனார்.

''ஏனையா! பூனை மாதிரி சத்தம் போடாமல் வந்து நின்று பயமுறுத்துகிறீரே? யாரையா நீர்?''

''மணிசேகரன்.''

''மணிசேகரன்......மணிசேகரன்.மணிசேகரன் என்றால் யாரையா? நீர் என்ன ஜவாஹர்லால் நேருவோ? மணிசேகரன் என்றால் எனக்கு எப்படித் தெரியும்?''

''ஜவாஹர்லால் நேரு உங்களிடம் வேலை தேடிக் கொண்டு வருவார் என்ற எண்ணமோ? மணிசேகரன்தான் வருவான்'' என்று சொல்ல நினைத்தான் மணிசேகரன். ஆனால் வேலை கிடைக்க வேண்டுமே என்ற கவலையால் மௌனமாக அறிமுகக் கடிதத்தை நீட்டினான்.

சுகுமாரன் மணியை ஏற இறங்கப் பார்த்தார். கடிதத்தை வாங்கிப் படித்தார். தொண்டையைக் கனைத்து, ''என்ன படித்திருக்கிறாய்?'' என்றார்.

''படிப்பு அதிகம் இல்லை. ஆனால் அனுபவம் நிறைய இருக்கிறது'' என்றான் மணி. பின்னர் தன்னைப் பற்றி விவரமாக அவருக்குச் சொன்னான்.

அவன் சொன்னதையெல்லாம் கேட்டுவிட்டு, ''இன்று நான் ரொம்ப வேலையாக இருக்கிறேன். நாளைக்கு வா. பார்ப்போம்'' என்றார் சுகுமாரன். நம்பிக்கையுடன் திரும்பினான் மணிசேகரன்.

* * *

சுகுமாரனைத் தான் பார்த்து விட்டு வந்த விவரத்தைப் பொன்னம்மாளுக்குச் சொல்லிக் கொண்டிருந்தான் மணி.

''ஒரு நட்சத்திரத்தைப் பொறுக்கும் வேலையில் இன்று மும்முரமாக ஈடுபட்டிருந்தார். நாளைக்கு வரச் சொன்னார்.

''படாதிபதிகளிடமும் டைரக்டர்களிடமும் வேலை செய்வது ரொம்பக் கஷ்டம். அதிலும் சுகுமாரன் படாதிபதி டைரக்டர் இரண்டுமாவார்.''

''ஏனடா அப்படி?''

''எப்போதும் 'ஆமாம்' போட்டுக் கொண்டே இருக்க வேண்டும், மாமி! பிடித்தோ பிடிக்காமலோ 'ஆமாம்' போடணும். இல்லையானால் ஆபத்து.''

பொன்னம்மாள் சிரித்தாள். மணி தொடர்ந்தான்:''படாதிபதியைப் பற்றி ஒரு கதை உண்டு மாமி.''

''என்னடா அது? சொல்லேன்!''

''ஒரு படாதிபதியின் மனைவிக்கு ஒரு நாள் திடீரென்று தன் பாட்டை இசைத்தட்டில் பதிவு செய்ய வேண்டும் என்று தோன்றி விட்டது. இசைத்தட்டு கம்பெனியார் 'விற்காதே?' என்று யோசித்தார்கள். 'இருநூறு இசைத்தட்டுகள் போடச் சொல்லுங்கள். எல்லாவற்றையும் நாமே வாங்கிக் கொள்ளலாம்' என்று காரியதரிசி யோசனை கூறினான். 'சபாஷ்' என்று மெச்சி விட்டுப் படாதிபதி அப்படியே செய்தார். 'ரிகார்டிங்' ஆனதும் கணவனும் மனைவியுமாகக் கோடையைக் கழிக்க ஊட்டிக்குப் போய் விட்டார்கள். சில நாட்களில் காரியதரிசி இசைத்தட்டை எடுத்துக் கொண்டு அங்கு போனான். இசைத்தட்டைப் போட்டுக் கேட்டார்கள். 'எப்படி இருக்கிறது?' என்று கேட்டார் படாதிபதி.

'அம்மா பாட்டுக்குக் கேட்க வேண்டுமா? ஜிஞ்ஜாமிருதமாக இருக்கிறது!' என்றான் காரியதரிசி.

'குரலில் கொஞ்சம் நடுக்கம் இருக்கிறது போல் தோன்றுகிறதே' என்று படாதிபதி சந்தேகப்பட்டார்.

'நல்லாச் சொன்னீர்கள். இந்த ஊட்டி குளிரில் என் உடம்பே விரைத்துப் போகிறது. பாவம், அந்த இசைத்தட்டு என்ன செய்யும்? அதுவும் குளிரில் நடுங்குகிறது! அதனால்தான் குரலில்



நடுக்கம் இருப்பதாகத் தோன்றுகிறது! அம்மா குரலில் குற்றம் இருக்கமுடியுமா, என்ன? ஆஹா! ஆஹா!' என்று மெய் மறந்து ரசித்தானாம் காரியதரிசி.''

இந்தக் கதையைக் கேட்டு விட்டு விழுந்து விழுந்து சிரித்தாள் பொன்னம்மாள். அவள் சிரிப்பு அடங்குவதற்குள், விமலா வேகமாக அறைக்குள் நுழைந்தாள். மணிசேகரன் எதிரே நின்று கொண்டு, ''பத்து வருஷங்களுக்கு முன்னால் வீட்டை விட்டு வெளியேறிய நீங்கள் இப்போது ஏன் இங்கே திரும்பி வந்தீர்கள்? உங்களை யார் வரச் சொன்னது? தயவுசெய்து போய்விடுங்கள்! எங்கிருந்து வந்தீர்களோ, அங்கேயே போய் விடுங்கள்!'' என்று கண்களில் தீப்பொறி பறக்க இரைந்தாள்! (தொடரும்)

## மதுபாலாவின் அழகின் இரகசியம்

Godrej கோத்ரெஜ்

# வத்னி*

சாவி மார்க்






100% ஸ்வதேசி

★ "தாய்நாடு" என்று அர்த்தங்கொண்ட 'வதன்' என்ற வார்த்தையிலிருந்து திரிபு பெற்றது.

---

# தேனா  பாங்க்

தேவகரன் நான்ஜி பாங்கிங் கம்பெனி லிட்.

ஸ்தாபிதம் : 1938

**21**-வது ஆண்டு சேவை : 1938 — மே — 1958

| | | | |
|---|---|---|---|
| ரிஸர்வ் நிதி | ... | ரூ. 40 | லக்ஷம் |
| டெபாஸிட்டுகள் | ... | ரூ. 23 | கோடிக்கு மேல் |
| அமுலில் உள்ள நிதி | ... | ரூ. $27\frac{1}{2}$ | கோடிக்கு மேல் |

வருங்கால நலனை உத்தேசித்து எமது பாங்க் மூலம் சேமியுங்கள்

| | |
|---|---|
| **புதிய ஸேவிங்ஸ் திட்டம்** | **5-வருட கேஷ் சர்டிபிகேட்டுகள்** |
| வட்டி **3%** | வட்டி **$4\frac{1}{4}$%** |

பொது பாங்கிங் அலுவல்களும், அயல்நாட்டு பரிவர்த்தனை விஷயங்களும் ஏற்று நடத்தப்படுகின்றன

பிரிவின்சந்திர வி. காந்தி : மானேஜிங் டைரக்டர்

## 8. ராட்சத நண்டு

சீரங்கப் பாதைக்குள் நுழைந்த வீராங்கன்முழுமூச்சோடு நீச்சல் போட்டான். வெகு நேரத்துக்குப் பிறகு அவன் கைகள் சோர்வடையத் தலைப்பட்டன. சிறிது நேரத்தில் இனி நீந்தவே முடியாது என்கின்ற நிலை ஏற்பட்டு விட்டது. அவன் இவ்வளவு நேரமும் சுவாசித்ததுபோல் இப்பொழுது சுவாசிக்க முடியவில்லை. மூச்சு திணறியது. தண்ணீரில் இருந்த தெளிவு குறைந்து ஏதோ குழகுழ வென்று காணப்பட்டது. அதைத் தவிர, தண்ணீரில் ஏதோ முட்டு முட்டாக மிதந்து கொண்டிருப்பது அவன் கைகளில் தட்டுப்பட்டது. குழகுழப்பும் அதிகமாகியது. அவன்கைகள் சோர்ந்து போய் விட்டன. மூச்சு விடுவதும் வெகு சிரமமாகி விட்டது. 'இன்னொரு தடவை நம் ஆயுள் முடிந்தது' என்று அவன் எண்ணினான். அதே சமயத்தில் பெரிய குறடு போன்ற ஒன்று அவனை அழுத்தமாகப் பிடிப்பதைப்போல் இருந்தது. அவ்வளவுதான்; அடுத்த நொடி வீராங்கன் தன் நினைவை இழந்தான்.

வீராங்கன் மெள்ளக் கண்களைத் திறந்து பார்த்தான். அவனுக்குக் கொஞ்சம் கொஞ்சமாகச் சுரங்க நீரில் வழவழவென்று ஏதோ தட்டுப் பட்டதும், சுவாசிக்க முடியாது போனதும் பிறகு ஏதோ குறடு போன்ற ஒன்று தன்னைக் கவ்விப் பிடித்ததும் நினைவுக்கு வந்தன.

இப்பொழுது தான் எங்கே இருக்கிறோம் என்பதைக் கவனிக்க ஒரு நோட்டம் விட்டான். என்ன ஆச்சரியம்! அவன் மெத்தென்று இருந்த ஒரு படுக்கையில் படுத்திருந்தான். அந்தப் படுக்கை ஒரு வகை கடல் பாசியால் தயாரிக்கப்பட்டிருந்தது. அங்கே தண்ணீரே இல்லை. சுற்றிலும் சுவர் எழுப்பப்பட்டு ஒரு மண்டபம் போல் காணப்பட்டது அந்த இடம்.

அதன் மேற்கூரை வெறும் சங்கிலேயே கட்டப்பட்டிருந்தது. தூண்களும் சுவர்களும் முத்தாலும் பவளத்தாலும் இழைக்கப்பட்டிருந்தன. இதைத் தவிர அங்கங்கே முட்டுமுட்டாக முத்துக்களும் பவளங்களும் கொட்டப் பட்டிருந்தன. அவற்றிலிருந்து எழுந்த பிரகாசம் அந்த மண்டபத்தை ஒரே ஒளிமயமாகச் செய்து கொண்டிருந்தது.

வீராங்கனுக்கு அளவு கடந்த ஆச்சரியம் ஏற்பட்டது. அவன் முத்தையும் பவளத்தையும் உயர்ந்த வகை சங்கையும் அவனுடைய சொந்த ஊரில் எவ்வளவோ பார்த்திருக்கிறான். ஆனால் இப்படி முட்டு முட்டாக அவன் பார்த்ததே இல்லை. தான் இந்த இடத்துக்கு எப்படி வந்து சேர்ந்தோம் என்பதைப் பற்றிக் கூட யோசிக்காது அவற்றைப் பார்த்தபடியே மெய்மறந்த நிலையில் இருந்தான். அப்பொழுது—



'கல் கல்' என்ற ஒருவித ஒலி தூரத்தில் கேட்டது. வரவர அந்த ஒலி மிக அருகில் கேட்டது. கடைசியில் மண்டபத்துக் குள்ளேயே கேட்டது.

வீராங்கன் சடக்கென்று எழுந்தான். கொஞ்சம் கூடத் தாமதிக்காது தன் இடையி லிருந்த உடைவாளை உருவினான்.

அதே சமயத்தில், ''பயப்படாதே. உடை வாளை உறையிலேயே போடு. உனக்கு ஒரு ஆபத்தும் வராது!'' என்ற அன்பான குரல் அவனைத் திகைக்க வைத்தது.

சுற்று முற்றும் பார்த்தான். மனிதர்கள் ஒருவரையும் காணவில்லை. ஆனால் மிகப் பெரிய இரண்டு நண்டுகள் அவன் நின்று கொண்டிருந்த இடத்தை நோக்கி வந்து கொண்டிருந்தன. அவை ஏறக்குறைய வீராங்கனின் அளவில் பாதி இருந்தன. இத்தனை பெரிய நண்டுகளை அவன் இது வரையில் பார்த்ததே இல்லை. கேள்விப் பட்டதும் கூட இல்லை.

வீராங்கன் குழம்பினான். அவன் கபாட புரத்தை விட்டுப் புறப்பட்டதிலிருந்து எல்லாம் அதிசயமாகவே நிகழ்கின்றன. இவை யாவும் மாயமா மந்திரமா அல்லது உண்மைதானா என்று அவனுக்குப் புரிய வில்லை. இந்த ராட்சத நண்டுகள் பற்றிக் கயல் கன்னி குறிப்பிடவே இல்லை என்பது நினைவுக்கு வந்ததும் அவனுக்குப் பற்பல சந்தேகங்கள் எழுந்தன.

''நீங்கள் யார்? நான் இங்கு எப்படி வந்தேன்?'' என்றான் அந்த இரு நண்டு களையும் பார்த்து.

''அதே கேள்வியைத்தான் நான் உன் னைக் கேட்பதாக இருக்கிறேன். நீ யார்? எங்கிருந்து வருகிறாய்? இங்கு எப்படி வந்தாய்?'' அந்த இரு நண்டுகளில் ஒன்று இப்படிக் கேட்டது.

அதற்குள் அதன் பக்கத்திலிருந்த மற்றொரு நண்டு ''அந்தப் பிள்ளையை ஏன் வீணாகப் பயமுறுத்துகிறீர்கள்? இரை தேடச் சென்ற நான் சுரங்கப் பாதையி லிருந்து இழுத்து வந்தேன் என்று கூறினேனே. மறந்து விட்டீர்களா?'' என்றது. அது பெண் நண்டு என்பதை வீராங்கன் தெரிந்து கொண்டான்.

''நீ சொன்னதை மறக்கவில்லை. ஆனால் இந்தப் பையன் எவ்வளவு திமிராகப் பேசுகிறான், பார்த்தாயா?''

''அப்படியெல்லாம் சொல்லாதீர்கள். கபாட புரத்து வாசிகளே வீரம் மிகுந்த வர்கள். யாருக்கும் தலை வணங்காத வர்கள். எதற்கும் அஞ்சாதவர்கள். இந்தச் சிறுவன் ஆழ்கடலின் அடியில் தன்னந் தனியாக இருந்தும் இவ்வளவு துணிவோடு பேச வேண்டுமென்றால்......''

''ஆமாம்! ஆமாம்! உன்நாட்டுக்காரன் அல்லவா? அதனால் நீ விட்டுக் கொடுக்கா மல் தான் பேசுவாய்!''

ஆண் பெண்ணான அவ்விரண்டு நண்டு களின் பேச்சில் இருந்த பொருள் செறி வைக் கண்டு அதிசயித்தான் வீராங்கன். 'நான் கபாடபுர வாசி என்பது இவர்களுக்கு எப்படித் தெரிந்தது? இது தெரிந்தவர் களுக்கு நான் எதற்காக வந்திருக்கிறேன் என்பதும் தெரியாமலா போய் விடும்? பொறுத்திருந்து பார்க்கலாம்.'

இப்படி வீராங்கன் எண்ணிக் கொண் டிருக்கும் பொழுதே இடி முழக்கம் போன்ற ஒரு பயங்கர ஓசை அந்த மண்டபம் முழு வதும் எதிரொலித்தது.

உடனே அந்தப் பெரிய நண்டுகள் இரண் டும் ''ஐயோ! ஒரு காத தூரத்திலிருக்கும் 'காதுகன்' மனித வாசனையை அறிந்து இங்கு வருகிறது. உன் உயிருக்கு மட்டும் ஆபத்தில்லை. எங்கள் உயிருக்கும் ஆபத்து வந்து விட்டது. உன்னைக் காப்பாற்றிக் கொண்டு எங்களையும்காப்பாற்று, வீராங்கா! எப்படியாவது காப்பாற்று'' என்று அவலக் குரலை எழுப்பின.

வீராங்கன் சரக்கென்று வாளை உருவி னான். கொஞ்ச நேரத்தில் எதிரே இருந்த சங்குச் சுவர் படபடவென்று பெயர்ந்து கீழே விழுந்தது. அங்கே உண்டான இடை வெளியின் வழியாகக் கற்பனையில் கூட நினைக்க முடியாத அவ்வளவு பயங்கரத் தோற்றமுடைய ஒரு மாபெரும் விலங்கு உள்ளே நுழைந்தது.

நூற்றுக் கணக்கான கூரிய கொம்பு களும், வளைந்த நகம் கொண்ட பல கால் களும், வெட்டு வெட்டான தடித்த தோலும், ஈட்டி போன்ற நீண்ட பற்களும், 'காதுகன்' என்ற பெயரும் உடைய அந்தக் கொடூர மான கடல் விலங்கு வீராவேசத்தோடு வீராங்கனின் மேல் பாய்ந்தது.

மல் யுத்தத்தில் வீராங்கன் தேர்ச்சி பெற்றவனாதலின் எதிரி பாய்ந்து தாக்கும் பொழுது, தான் என்ன செய்ய வேண்டும் என்பதை அவன் நன்கு தெரிந்திருந்தான். அதன்படியே மின்னல் மின்னும் நேரத் துக்குள் சிறிது குனிந்து பக்கத்தில் நகர்ந்து போய் விட்டான்.

அவ்வளவுதான்! வெறி கொண்டு பாய்ந்த காதுகன் 'பொதிர்' என்று தூரப் போய் விழுந்தது. அது விழுந்த வேகத்தில் பவளங்களும் முத்துக் குவியல்களும் சிதறி நாலா புறங்களிலும் தெறித்தன. காதுகனுக்குப் பலத்த அடி. சரியான தோல்வி. அதன் உடலிலிருந்த பலத்தில் பாதி குறைந்தது போல் ஆயிற்று. இதனால் அதன் ஆத்திரம் பன் மடங்கு அதிக மாயிற்று. உடனே தன்னைச் சமாளித்துக் கொண்டு மறுபடியும் வீராங்கன் மேல் வேகமாகப் பாய்ந்தது.

இந்தத் தடவை வீராங்கன் கொஞ்சம் அலட்சியமாக இருந்து விட்டான். அதன்

பலன் வீராங்கன் அதன் பிடியில் சிக்க வேண்டியதாகப் போய் விட்டது. காதுகனின் கூரிய கொம்புகள் அவன் உடலைக் கிழிப்ப தற்கு முயற்சி செய்தன. ஆனால் வீராங்கன் முழு மூச்சோடு அதன் கழுத்தைப் பிடித்துக் கொண்டு நெரிக்க முற்பட்டான்.

வீராங்கனின் இந்த எதிர்ப்பைச் சமாளிப் பதற்கு அந்தப் பயங்கர மிருகம் வேறு வழியைக் கையாண்டது. தன் அகலமான பெரிய வாயைத் திறந்து வீராங்கனை விழுங்க ஆரம்பித்தது. அதன் வாயினுள் இருந்த இரண்டு நீண்ட நாக்குகள் வீராங் கனைப் பிடித்து விழுங்குவதற்கு வசதியாக இருந்தன. வீராங்கன் தன் பலத்தை எல்லாம் பிரயோகித்துத் திமிறினான். காதுகனின் பிடியிலிருந்து விலகிக்கொண்டு மண்டபத்தின் ஒரு மூலையில் இருந்த பெரிய ஈட்டியை இரு கைகளாலும் எடுத்துப் பலம் கொண்ட மட்டும் வீசினான்.

'வீல்' என்ற ஒரு விகாரமான ஓசை அந்த மண்டபமே அதிரும்படி யாகக் கேட்டது. மண்டபத்திலுள்ள அத்தனை பொருள்களும் கிடுகிடுத் தன. அந்தக் கோரச் சத்தத்துக் குப் பிறகு, காதுகனின் வாய் தானாகவே திறந்து கொண்டது. வீராங்கன் வெற்றிப் பெருமிதத்தில் தோள்கள் பூரிக்கக் கம்பீரமாக நின்று கொண்டிருந்தான்.

காதுகனின் மலைபோன்ற சரீரம் கீழே சாய்ந்து கிடந்தது. அதன் உடலிலிருந்து இரத்தம் ஆறாகப் பெருகி ஓடிக் கொண்டிருந்தது.

வீராங்கன் அந்த மிரு கத்தின் அடிவயிற்றில் ஆழமாகப் பாய்ந் திருந்த நீண்ட ஈட்டி யைப் பிடுங்கினான். காது கன் ஆடவில்லை; அசைய வில்லை. உயிர் இருந்தால் அல்லவா அது அசையப் போகிறது? அந்த மிருகத் தின் அடி வயிற்றில் ஒரு சிறு காயம் பட்டால்கூட அது இறந்து போய் விடும். வீராங்கனுக்கு இந்த உண்மை தெரியாது. ஏதோ குருட்டாம் போக்கில் தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காக மண்டபத்தின் மூலையில் இருந்த ஈட்டியை எடுத்துப் பலங் கொண்ட மட்டும் குத்தினான். அது குறி வைத்தாற் போல் காதுகனின் அடி வயிற்றில் பாய்ந்து கொன்று விட்டது.

இத்தனை நேரமும் ஒரு மறைவில் பதுங்கி யிருந்த இரண்டு நண்டுகளும் வெளி வந்து அவனைப் பாராட்டின.

வீராங்கன் அதைக் கேட்டு ஆனந்த மடைந்தான். பிறகு அவைகளைப் பற்றி விசாரித்தான். அவன் சந்தேகத்தைப் பெண் நண்டு நிவர்த்தி செய்தது.

நண்டுகள் இரண்டும் உண்மையில் நண்டுகள் அல்ல. தேவலோகத்தில்



வாழும் தேவர்கள். கணவன் மனைவியான அவர்கள் ஒரு முனிவரின் சாபத்தால் இந் தக்கதியை அடைந்தார்கள். இதிலிருந்து விமோசனம் பெற வேண்டுமானால் ஆண் நண்டு குமரி முத்தையும் பெண் நண்டு குமரிப் பவளத்தையும் ஒரு முறை கண் களால் பார்க்க வேண்டும். ஆனால் அவற் றைப் பார்ப்பதென்பது அவைகளால் ஆகாத காரியம். எனவே பல ஆண்டுக ளாகச் சாபம் நீங்காது நண்டு உருவிலேயே வசித்து வருகின்றன.

'குமரிப் பவளம்' என்றதும் வீராங்கன் அதைப்பற்றி விவரம் கேட்டான். (தொடரும்)

புதிதாக அமுலுக்கு வரும்

# மெட்ரிக் முறை



இந்தியாவில் புழக்கத்திலிருக்கும் அளவுகளிலும் எடைகளிலும் பொதுவான முறை பின்பற்றப்படவில்லை. சற்றேறக் குறைய 143 முறைகள் நடைமுறையிலிருக்கின்றன. பல வேறு முறைகள் இருப்பது எத்துக்களுக்கும் ஏமாற்றுகளுக்கும் இடமளிக்கிறது. ஏற்கனவே தசாம்ச நாணய முறை அமுலுக்கு வந்திருக்கிறது. ஆகையால் எடைகளையும் அளவுகளையும் மெட்ரிக் முறைப்படி ஒரேவகையாகக் கணக்கிடும் வழக்கம் ஏற்பட்டால் எல்லா வகைக்கும் அது சௌகரியமாக இருக்கும். 1956-ஆம் ஆண்டின் எடைகள் அளவுகள் தர நிர்ணயச்சட்டம், மெட்ரிக் முறையை அடிப்படையாகக் கொண்டே அடிப்படை அளவுகளை நிர்ணயித்திருக்கிறது. எடை-அளவு முறைகளில் ஏற்படும் இச் சீர்திருத்தம் பொது மக்களுக்குத் தொல்லை ஏற்படாத வகையில் மெதுவாகவே அமுல் நடத்தப்படும்.

நாட்டின் ஒரு குறிப்பிட்ட பகுதியிலோ, வியாபாரத்திலோ மெட்ரிக் முறை அமுலுக்கு வந்த பிறகும் கூட, இப்போதுள்ள எடைகளும் அளவுகளும் முதல் மூன்று ஆண்டுகள் வரை கூடவே புழக்கத்திலிருக்கும்.

**மெட்ரிக் முறை 1958 அக்டோபரிலிருந்து அமுலுக்கு வருகிறது.**

## புதிய மெட்ரிக் எடைகள்



எடைக் கணக்கீட்டின் அடிப்படை அளவு
கிலோகிராம் = 1 சேர் 6 தோலா
(அல்லது 86 தோலா)
அல்லது 2 பவுண்டு 3 அவுன்ஸ்

### மற்ற அளவுகள்

| | |
|---|---|
| 10 மில்லி கிராம் | = 1 செண்டி கிராம் |
| 10 செண்டி கிராம் | = 1 டெசி கிராம் |
| 10 டெசி கிராம் | = 1 கிராம் |
| 10 கிராம் | = 1 டெகா கிராம் |
| 10 டெகா கிராம் | = 1 ஹெக்டோ கிராம் |
| 10 ஹெக்டோ கிராம் | = 1 கிலோ கிராம் |

### பெருக்கங்கள்

| | |
|---|---|
| 100 கிலோ கிராம் | = 1 குவிண்டால் |
| 10 குவிண்டால் அல்லது 1000 கிலோ கிராம் | = 1 மெட்ரிக் டன் |

இந்திய அரசாங்கத்தால் வெளியிடப்பட்டது

# குறிஞ்சி மலர்

எல். கிருஷ்ணசாமி பாரதி

குறத்தி ஒருத்தி: மலை மீது வாழ்பவள். தன் குறக் குடியின் இயல்பை யெல்லாம் எடுத்து உரைக்கிறாள். தமிழுக்கே தனி உரிமையான சிறப்பு ழகரத்தை, எழில் ஒழுகும் தமிழ் மொழியில் இழைத்துக் குழைத்து அழகாகப் பாடுகிறாள். அவள் எடுப்பதும், உடுப்பதும், பறிப்பதும், கொடுப்பதும், எல்லாம் கேட்க, கேட்போர் உள்ளம் நெகிழ்ந்து மகிழும். அப்பாட்டின் முதல் இரண்டு அடிகள் மட்டும் இதுபோழ்து பார்ப்போம் :

**„செழுங் கொடியின் விழுந்த வள்ளிக்**
**கிழங்கு கல்லி எடுப்போம்**
**குறிஞ்சி மலர் தெரிந்து முல்லைக்**
**கொடியில் வைத்துத் தொடுப்போம்.''**

என்று பாடுகிறாள்.

நிலப் பரப்பை ஐந்து பிரிவுகளாக வகுத்துள்ளனர் நம் பழைய தமிழர். அவை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பன. குறிஞ்சி என்பது மலையும் மலையைச் சார்ந்த இடத்தையும் குறிக்கும். மலை மீது கோவில் கொண்டு எழுந்தருளியுள்ள முருகப் பெருமானுக்குக் **'குறிஞ்சி ஆண்டவர்'** என்றொரு திருநாமமும் உண்டு. கண்ணைக்கவரும் வண்ணப் பூக்கள் எண்ணற்று மலர்ந்தாலும் மலைவள உலகில் குறிஞ்சி மலருக்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு. அத்தனிச் சிறப்பு யாது? அதிசயம் வாய்ந்த அச் சிறப்பு விவரத்தைக் கீழே கண்டு களித்திடுக! இதை அறிந்தே நம் குறத்தியும் குறிஞ்சி மலரைத் தெரிந்து எடுத்து, முல்லைக் கொடியில் வைத்துத் தொடுக்கிறாள்! யாருக்காகத் தொடுக்கிறாளோ? தன் தலை முடியில் சூடிக் கொள்வதற்காகவா? குறிஞ்சி ஆண்டவர் திருமார்பில் சூட்டிப் பார்ப்பதற்காகவா? அல்லது இரண்டுக்கும்தானோ?—யானறியுமாறில்லை!

கபிலர் என்று ஒரு பெரும் புலவர்; பழங் காலத்தவர். மதுரை கூடலூருக்கு அண்மையில் உள்ள திருவாதவூரில் பிறந்தவர். அவர் குறிஞ்சிப் பாட்டு என்று ஒரு சிறு பனுவல் எழுதி உள்ளார்; அது 261 அடிகளை உடையது. 'ஆரிய அரசன் பிரகத்தனைத் தமிழ் அறிவித்தற்கே இவர் குறிஞ்சிப் பாட்டைப் பாடினார்' என்று தமிழ்த் தாத்தா டாக்டர் உ.வே. சாமிநாதய்யர் குறிப்பிடுகிறார். இவர் செல்வக் கடுங்கோ வாழியாதன் என்னும் சேரன் மீது பாடி நூறாயிரம் பொற்காசும் அவன் ஒரு மலை மீதேறிக் கண்டு கொடுத்த நாடும் பரிசிலாகப் பெற்றனர். அந்த நாளில் தமிழ் வேந்தர் தம்மையும், தமிழறிஞரையும் போற்றிப் பேணிப் பாராட்டிச் சீராட்டிப் பெருமைப்படுத்தி வந்த அருமையை நினைக்கும்தோறும் உள்ளம் உவகை மீக்கூர்கிறது.

'அந்த நாளும் இனி வாராதோ?' என்று நினைக்கத் தோன்றுகிறது. வேந்தர்கள் வேண்டாம்: குடியாட்சி உலகில் வேந்தர்கள் இருக்க முடியாது. ஆனால் அன்னவர் நிலையிலுள்ள ஆட்சியாளர் கவனிக்கலாகாதோ? 'மலை மீது ஏறிக் கண்டு கொடுத்த நாடு' பெற்ற பெருமான் கபிலர், தம் குறிஞ்சிப் பாட்டில் மலை வளத்தை நலமுற விளக்கியது இயல்புதானே! மலையில் மலரும் மலர்களை யெல்லாம், மணங் கமழ, படிப்போர் மனங் குளிர, தனது பாமாலையில் அழகுற அடுக்கித் தொடுத்துக் கொடுத்துள்ளார் கபிலர்; காந்தள்பூ முதலாக, பரேரம்புழகுப் பூ ஈறாக, தொண்ணூற்று நான்கு பூக்களின் பெயர்கள் குறித்துள்ளார். அவற்றில் ஒன்று நம்முடைய குறிஞ்சி மலர். பின்வரும் அடியைப் பார்க்கவும் :

**' தண்கயக் குவளை, குறிஞ்சி, வெட்சி '**

அப்பாட்டில் வரும் ஏனைய மலர்களின் பெயரையே நம்மில் பலர் கேட்டிருக்க மாட்டோம். அப்பாட்டியல் முழுதும் ஈண்டு குறிப்பிடுமாறில்லை. அறிய விழைவோர், கபிலர் இயற்றிய குறிஞ்சிப் பாட்டில் கண்டு கொள்ளுக.

இலக்கியத்தில் இடம் பெற்ற இக்குறிஞ்சி மலரை நம்மில் எத்தனைபேர் கண்டதுண்டோ? இம்மலர் ஒரு அதிசய நியதிக்குட்பட்டு மலர்ந்து வருகிறது. பன்னிரண்டு வருடங்களுக்கு ஒரு முறைதான் கும்பகோணத்தில் மகாமகம். பன்னிரண்டு வருடங்களுக்கு ஒரு கனி தரும் நெல்லி மரத்தைத் தமிழ் இலக்கியத்தில் கண்டிருக்கிறோம்; அதிகமான், ஔவைப் பிராட்டிக்கு அளித்த அந்த நெல்லிக் கனி. சூரியனில் அதிகமாகப் புள்ளிகள் (Sunspots) தோன்றுவதும் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறையே. அதுவும் இவ் வருடமே நிகழ்வதாகும். குறிஞ்சிச் செடியில் குறிஞ்சி மலரும் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் மலர்கிறது. என்னே அதிசயம்! இயற்கையின் அமைப்பு அப்படியெல்லாம் இருக்கிறது. ஆனால், அந்த நெல்லிக் கனி போல, குறிஞ்சி ஒரு செடியில் ஒரு பூ என்பதல்ல. செடிகள் பல; பூக்களும் பல. பூப்பது மட்டும் பன்னிரண்டு வருடங்களுக்கு ஒரு முறை என்பதுதான்.

கோடைவேனலுக்கு அஞ்சி இவ்வருடம் கொடைக்கானல் சென்றவர்களுக்குக் குறிஞ்சி



1. நேருஜியின் 'உலக சரித்திரம்' தமிழ் மலிவுப் பதிப்பு வெளியீட்டு விழா சென்ற ஐந்தாம் தேதி சென்னை ராஜாஜி மண்டபத்தில் நடைபெற்றது. அன்றையதினம் மலிவுப் பதிப்பை வெளியிட்ட திரு சி. சுப்பிரமணியம், உலக சரித்திரத்தை நல்ல முறையில் தமிழாக்கம் செய்த திரு ஓ. வி. அளகேசனைப் பாராட்டினார். விழாவுக்குத் திரு க. சந்தானம் தலைமை வகித்தார். 2. பம்பாய் மாதுங்கா டிரமாடிக் ஸொஸைட்டியார் திரு என். வி. நடராஜன் எழுதிய 'களத்துமேடு' என்னும் நாடகத்தை மிகவும் நன்றாக நடித்தார்கள். நாடகத்தில் வரும் ஒரு முக்கியமான காட்சியைப் படத்தில் காணலாம்.

---

மலரைப் பற்றிக் கேட்கவும், பார்க்கவும் வாய்ப்புக்கள் கிட்டி இருக்கும். கொடைக் கானலில் 1946ம் ஆண்டு பூத்த பின்னர், பன்னிரண்டாவது ஆண்டான இவ்வாண்டு தான் குறிஞ்சி பூத்துள்ளது. கணக்கிலடங்காச் செடிகள் மலைச்சாரல் எங்கணும் நீல மணிகள் போல் குறிஞ்சி மலரைத் தாங்கி நிற்கின்றன. மலர், கனகாம்பரத்தைப் போல் சிறிய வடிவே உடையது. நிறம், மங்கிய நீல நிறம். மணமில்லை; ஆனால் அழகுண்டு. ஆம், அழகு என்பது காண்போர் கண்ணைப் பொறுத்த விஷயம்தான்; கண் மட்டுமென்ன? உள்ளத்தையும் ஓரளவு பொறுத்ததே! அழகுணர்ச்சி உடையவர்களே, இவற்றை யெல்லாம் ரசிக்க முடியும்; மகிழ முடியும்! குறிஞ்சி மலரை ஆங்கிலத்தில், (Strobilanthus Kunthianes) என்று குறிப்பிடுகிறார்கள்.

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை பூக்கும் இந்தச் செய்தி உண்மைதானா என்ற கேள்வி எழுவது இயல்பு. இது உண்மை என்பதற்கு அரசாங்கமே சாட்சி! கொடைக் கானலில், 'தோணிகள் ஓட்டி விளையாடி வரும்' அழகிய ஏரி ஒன்று உளது; அதனைச் சுற்றி மனோரம்மியமான ஒரு பாதை; அப்பாதையைச் சுற்றி உள்ள கம்பங்களில் அரசினர், பலன் உள்ள தகவல் பலவற்றை, இரும்புப் பலகைகளில் அழியாவண்ணம் எழுதித் தொங்க விட்டுள்ளார்கள். அவற்றில் ஒன்று குறிஞ்சியைப் பற்றியது. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை பூக்கும் இச்செய்தியை அவ்வெழுத்து சந்தேகத்துக்கு இடமின்றிப் பறைசாற்றி வருகிறது!

இவ்வாண்டு கொடைக்கானல் போக வாய்ப்பும் வசதியுமில்லாத தமிழ் மக்களும் இதனைப் படித்து அறிந்து மகிழ வேண்டும் என்ற ஆசை பற்றி இதனை அறையலுற்றேன்.

குறிஞ்சி மலரைப் பற்றிக் குறிப்பிடும்போது கொடைக்கானலில் கோவில் கொண்டிருக்கும் குறிஞ்சி ஆண்டவரைப் பற்றி நான் குறியாது விட்டால், என் பக்திக் கடமையில் தவறியவனுவேன். வெள்ளை மாதொருத்தி இந்து மதத்தைத் தழுவி, ஒரு தமிழனை மணந்து, பக்தி மேலீட்டால், இம்மலை உச்சியில் கட்டிய கோவில் இது. இக்கோவிலில் உள்ள மூர்த்திக்குக் குறிஞ்சி ஆண்டவர் என்று பெயர். எனவே கோவிலுக்கும் பெயர் அதுவே. கோவில் எழுப்பிய வெள்ளை மாதின் இந்துப் பெயர், லேடி லீலாவதி ராமநாதன். அவர் காலமாகி ஐந்து ஆண்டுகள் ஆகின்றன. பூசையெல்லாம் ஒழுங்காக நடைபெறுகின்றன. அழகிய கோவில்; துப்புரவாக வைக்கப்பட்டிருக்கிறது. கோவில் நிற்கும் பீடபூமியிலிருந்து பார்த்தால், கீழே பழனியும், பழனியப்பன் கொலு வீற்றிருக்கும் மலையும் கண்ணெதிரே காட்சி தந்து, பக்தர்கள் உள்ளத்தில் பரவசம் ஊட்டுவதாக அமைந்துள்ளது! 7400 அடிக்கு மேல் மலை உச்சியில் எழுந்தருளிய தமிழ்க் கடவுளின் மகாத்மியத்தையும், அதற்குக் காரணமாக இருந்த ஆங்கில மாதின் அரிய பக்தியையும் பற்றிச் சிந்தனையில் மூழ்கிக் கொண்டிருந்தபோழ்து, கோவில் முன் முகப்பில் இருந்த இரண்டு அலமாரிகளிலும், அரிய நூல்கள் இருப்பது கண்டு வியந்தேன். என் வியப்பை உணர்ந்த ஆங்கு பூசை செய்யும் இளைஞர் என்னை நோக்கி, ''ஐய! நான் தமிழ் வித்துவான் தேர்வுக்குப் படிக்கிறேன். எனவே இத்தமிழ் நூல்கள் உண்டுள!'' என்றார்.

''நீர் நாள்தோறும் [வழுத்தி] வரும் குறிஞ்சி ஆண்டவர் உமக்கு உறுதுணை புரிவாராக'' என்று அவரை வாழ்த்தினேன்.

'தமிழே! நீ எந்த மலை உச்சி எல்லாம் ஏறி விட்டாய்' என்ற மகிழ்ச்சி உள்ளத்தில் பொங்க, 'வாழ்க தமிழ் மொழி! வாழ்க, தமிழ் மொழி! வாழ்க தமிழ் மொழியே!' என்று வாயாரப் பாடிக் கொண்டே வழி நடந்தேன்.

சில்லெனக் காற்று மெல்லென வீசியது!
உள்ளமும் உடலும் ஒருங்கே மகிழ்ந்தன!

பல்  முளைக்கும்போது உண்டாகும் உபாதைகள்
குடல்வலி, வாயு, வயிற்றுக்கோளாறுகள்



## க்ரைமிக்ஸ்

க்ரைப் மிக்சர்

கொடுங்கள்

க்ரைமிக்ஸ் உங்கள் குழந்தையின் குடல்வலி, வாயு, இதர வயிற்றுக் கோளாறுகள் முதலியவைகளுக்கு துரித நிவாரணம் அளிக்கிறது. உங்கள் குழந்தையை ஆரோக்கியமாகவும், புன்சிரிப்புடனும் இருக்கச் செய்கிறது. குழந்தைக்கு க்ரைமிக்ஸ் கொடுங்கள்




## க்ரைமிக்ஸ்

க்ரைப் மிக்சர்

உங்கள் குழந்தையை
ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

NC I

க்ரைமிக்ஸ் க்ரைப் மிக்சர் ஒவ்வொரு பாட்டிலுடனும் ஒரு அழகிய ஸ்பூன் இனாமாக அளிக்கப்படும்



# பாலம்

ருக்மிணி

பூங்காவனத்துக்கு இரவு முழுவதும் தூக்கம் பிடிக்கவில்லை. பொழுது விடிந்ததும் இந்த இடத்தை விட்டுப் புறப்பட வேண்டுமே என்ற எண்ணம் அவளைத் தூங்கவிடவில்லை. தூங்குவதற்கென்று அவள் செய்த முயற்சிகள் அத்தனையும் வியர்த்தமாகி விட்டன. விடிந்து விட்டதோ என்ற பயத்தோடு வெளியே பார்த்தாள். குடிசையின் குறுகிய வாசலுக்கு வெளியே பரந்த உலகம் தெரிந்தது.

அப்போது விடியவுமில்லை; விடியாமலுமில்லை. இருளுக்கும் ஒளிக்கும் இடையே உள்ள இரண்டும் கெட்டான் நிலை. வெளி உலகக் காட்சிகளை விளக்கமில்லாமல் காட்டிக் கொண்டிருந்தது. பூங்காவனம் கூர்ந்து பார்த்தாள்—தன் வீட்டுக்கு எதிரே விரிந்து கிடந்த ஆற்றின் குறுக்கே, அந்தப் புதுப்பாலம் நீண்டு கிடந்தது. சிறிது முடங்கிப் படுத்துப் பார்வையை நீட்டினாள்; கரையும் பாலமும் மோதிக் கொண்டிருந்த இடத்தில் ஏழெட்டு மின்சார விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. நிழலோட்டம் போல் அதன் அடியில் வேலை செய்யும் ஆட்கள் நடமாடுவதும் தெரிந்தது.

அந்தப் பாலம் ஐந்தாண்டுத் திட்டத்தின் ஆக்க வேலைகளில் ஒன்று. சுமார் அறுநூறு தொழிலாளர்களின் நாலரை வருட உழைப்பையும், அதற்கேற்ற செலவையும் தனக்குள் அடக்கிக் கொண்டிருந்தது. இந்தப் புள்ளி விவரங்கள் எல்லாம் பூங்காவனத்துக்குத் தெரியாது. திருவண்ணாமலைச் சீமையில் மழையில்லை என்று பிழைப்பைத் தேடிப் புறப்பட்ட பிறகு அவள் குடும்பத்துக்கு அது நாலரை வருடம் சோறு போட்டிருக்கிறது! அதாவது அவள் கணக்குப்படியே சொல்ல வேண்டுமானால், ஆறு மாதக் குழந்தையாக அங்கு வந்த ஆறுமுகம் பத்து நாட்கள் விஷக் காய்ச்சலில் செத்துப்போனபோது அவனுக்கு வயசு இரண்டு. அதன் பிறகு இரண்டு பொங்கல் போய், பிறந்த மண்ணாங்கட்டிக்கு இப்போது ஒரு வயசு.

நேற்றோடு பாலம் கட்டும் வேலை முடிந்து விட்டது. கண்டிராக்டர் சின்னையாபிள்ளை பாக்கி சாக்கியில்லாமல் கணக்கையும் தீர்த்து விட்டார். பாலம் திறப்பதற்கென்று பட்டணத்திலிருந்து மந்திரி வருகிறார். அவர் வந்து பாலம் திறந்தபிறகு இங்கு யாருக்குமே வேலையில்லை. திறப்பு விழாவுக்கான ஏற்பாடுகள் தான் வெகு மும்முரமாக நடந்து கொண்டிருக்கின்றன. அவள் கணவன் அண்ணாமலை கூட அங்குதான் வேலை செய்து கொண்டிருக்கிறான். இரவெல்லாம் வேலை. அதுதான் அவன் செய்யும் கடைசி வேலை. ஆகவே வழக்கமான கூலியையே பிள்ளை இப்போதும் தரமாட்டார். இனாமாக ஏதேனும் இரண்டு மூன்று ரூபாய்களாவது தராமலிருக்க மாட்டார் என்று பூங்காவனம் தனக்குள் நினைத்துக் கொண்டாள்.

முடங்கிக் கிடந்த பூங்காவனத்துக்கு முதுகு வலித்தது. சிறிது நிமிர்ந்து உடலைத் தளர்த்திக் கொண்டாள்; இப்போது பார்வையிலிருந்து அந்த விளக்குகளும் அக்கரையும் மறைந்து விட்டன. தலையணையாகி யிருந்த முழங்கை இனவெடுத்தது. வெறுந் தரையிலேயே ஒரு தேய்ப்பு தேய்த்துக் கொண்டாள். மழமழ வென்று மெழுகி விட்ட தரையின் சொர சொரப்பு இதமாக இருந்தது. இண்டும் குழியுமான படுகை வெளியை இப்படிப் படுப்பதற்கேற்றபடி மெழுகிப் பதமாக்குவதற்குப் பூங்காவனத்துக்கு இரண்டு மாதங்கள் பிடித்தன. அவள் இங்கு வந்தபோது இந்த இடம் ஒரே நாணற்காடு. "கீற்றும் மூங்கிலும் தருகிறேன், குடிசை போட்டுக் கொள்ளுங்கள்" என்று சின்னையாபிள்ளை பெரிய மனசு வைத்தார். அண்ணாமலையும் அவன் சகபாடிகளும் ஒன்று சேர்ந்து முப்பது முப்பத்தைந்து கோழிக் குடிசைகளைக் கட்டித் தங்களுக்கு வீடாக்கிக் கொண்டார்கள். வெளியூர் கூலியாட்களுக்கு மட்டுந்தான் இந்தக் குடியிருப்பு கிடைத்தது!

வேலையாட்களின் கணக்கை ஒழித்து வீட்டுக்கு அனுப்பும் வேலையில் கடந்த பதினைந்து நாட்களாகச் சின்னையாபிள்ளை வெகு தீவிரமாக இருந்தார். ஆகவே வெளியூர் வாசிகளில் அண்ணாமலையைத் தவிர மற்றெல்லோரும் போய் விட்டார்கள். அவர்கள் வாழ்ந்த, அதாவது வேலையற்ற நேரங்களில் முடங்கிக் கிடந்த வீட்டின் மேற்கூரைகளும் பிரிக்கப் பட்டு விட்டன. கூரையைப் பிரிக்கும்போது மூங்கில் மட்டுந்தான் கிடைத்தது. பிரிக்கும் போதே கீற்று மக்கி மடித்துப்போன கூளமாக உதிர்ந்து விட்டது. பாலம் கட்டத் துவங்கிய ஆரம்ப நாட்களிலிருந்தே அண்ணாமலை வேலை செய்து கொண்டிருக்கிறான். அதனால்தானோ என்னவோ, பிள்ளை அவனைத் திறப்புவிழாவரையிலும் வேலைசெய்ய அனுமதித்திருந்தார்.

பூங்காவனம் பார்வையைக் கூர்மையாக்கினாள். திட்டுத் திட்டான மணல் மேடுகளுக்கு அப்பால் தெரிந்த பாலத்தின் நாலைந்து வளைவுகள் மட்டும் குடிசையின் வாசலை அடைத்

ஆக் கொண்டு நின்றன. வடக்கும் தெற்குமாக ஓடிக் கொண்டிருந்த பாலத்தை அதற்கு மேல் அவளால் பார்க்க முடியவில்லை. அவள் கண்கள் மட்டும் அந்த அசையாத பாலத்தின் மீது பதிந்து கிடந்தன. மனம் மறைந்து போன காலத்தின்மீது பறந்து சென்று கொண்டிருந்தது.

சுமார் ஐந்துவருஷங்களுக்கு முன்பு-'அங்கே கடல் பெரிய ஆற்றுக்குப் பாலம் போடுகிறாங்களாம். ஒரு அஞ்சு வருசத்துக்கு நமக்குச் சோற்றுக் கவலை இல்லை' என்று சொல்லித்தான் அண்ணாமலை அவளை இங்கு அழைத்து வந்தான். பரந்த மணல் வெளியையும், ஒரு ஓரத்திலே மட்டும் ஒடுங்கி ஓடிய நீரோட்டத்தையும் படுகைக் கரையில் நின்றபடி பார்த்த பூங்காவனம் பிரமித்துப் போனாள்.

'அம்மாடியோவ்! கடல் பெரிசுதான் இருக்குது' என்ற வார்த்தைகள் அவளை அறியாமலே வெளிவந்தன. பூங்காவனம் அது வரையிலும் கடல் பார்த்ததில்லை. இலங்கைக் காட்டுக்குத் தோட்டக் கூலியாகப் போயிருந்த அண்ணாமலைக்கு மட்டுந்தான் அந்தப் பாக்கியம் கிடைத்திருந்தது. என்றாலும் அவன் கடல் தாண்டிய பெருமையை அவன் வாயாலேயே கேட்டுச் சலித்துப் போயிருந்த பூங்காவனம், அந்தக் கடலின் அளவையும் ஒரு விதமாக யூகித்து வைத்திருந்தாள்!

வாழ்க்கையில் ஐந்து வருடம் இவ்வளவு வேகமாய் ஓடி மறைந்து விடும் என்று அவள் நினைக்கவேயில்லை. இன்று அவள் கண்ணுக் கெட்டாத தூரம் வரை வளர்ந்திருக்கும் அந்தப் பாலம், கண்ணுக்குக் கண், தூணுக்குத் தூண் வளர்ந்த விதம் அவளுக்குத் தெரியும். முதன் முதலில் பாலத்துக்குத் தூண் நிறுத்துவதற்காகக் கிணறு இறக்கினார்கள். அப்போது காற்றடைத்த முகமூடி யணிந்து கொண்டு அறுபது அடி, எண்பது அடி ஆழம் வரையிலும் சென்று அண்ணாமலை மண்ணெடுத்து அனுப்புவான். தண்ணீருக்குள் இருந்தபடியே ஒரு கயிற்றைப் பிடித்து இழுத்துச் சமிக்ஞை செய்ததும் அந்த மணற் கூடையை மேலே இழுப்பது பூங்காவனத்தின் வேலை. காலை எட்டு மணிக்குத் தண்ணீரில் மூழ்கும் அண்ணாமலை ஒரு மணிக்குத்தான் வெளியில் வருவான். அதுவரை பூங்காவனத்தின் உயிர் உடலில் இருக்காது. அண்ணாமலையான்மீது பாரத்தைப் போட்டு விட்டு, தான் அந்த ஆடும் கயிற்றிலேயே கண்ணாயிருப்பாள். அந்தக் கிணறு இறக்கும் வேலை அவள் கண்ணெதிரிலேயே இரண்டு பேரைப் பலி வாங்கி விட்டது! பாளம் பாளமாகச் சிமெண்டு கட்டைகள் தயார் செய்தபோது அவள் ஜல்லியும் மணலும் சுமந்து தந்தாள். அப்போது அண்ணாமலை ஜல்லிக் கலவை இயந்திரத்தைச் சுற்றிக் கொண்டிருந்தான். தயாரிக்கப்பட்ட சிமெண்டு பாளங்களுக்குத் தண்ணீர் ஊற்றிப் பதப்படுத்துவது, மணல் சலிப்பது, இன்னும் அதுபோன்ற எத்தனையோ வேலைகள். கடைசியாகப் பாலத்துக்குக் கைப்பிடிச்சுவர் எழுப்பியபோது சித்தாள் வேலை பார்த்தாள். இப்படி யெல்லாம் அவளும் அவளைச் சேர்ந்தவர்களும் சுமார் ஐந்து வருடங்கள் கஷ்டப்பட்ட பிறகுதான் அது இன்று பிரமிக்கத்தக்க பெரிய பாலமாகி விட்டது.

அஞ்சாம் தூணு நிறுத்தும் போது ஆறுமுகம் பத்து நாள் காய்ச்சலிலே செத்துப் புட்டான். ஏழாம் தூணு இறக்கும் போது தம்பி பாவாடைக்கு ஆரணியிலே கண்ணாலம் நடந்திச்சு. ஒன்பதாம் தூணுக்கு மண்ணு வாரும்போதுதான் உண்ணாமலைப் புருசன் சின்னப்பையன் செத்துப்பூட்டாரு. பன்னிரண்டாம் தூணு நிறுத்தும் போதுதான் நான் நிறை மாசம். மண்ணாங்கட்டி வயித்திலே. பதினாறும் தூணு இறக்கும் போது தான் சிங்காரமும் வள்ளியம்மையும் இந்தப் படுகை மாரியம்மன் கோயிலிலே கண்ணாலம் பண்ணிக் கிட்டாங்க......''

இன்னும் இதுபோன்ற எத்தனையோ உணர்ச்சி மிகுந்த நினைவுகளை அந்த உணர்ச்சியற்ற பாலம் அவள் உள்ளத்திலே தூவி விட்டிருந்தது. அவளும் அந்தப் பாலத்தின் பகுதிகளைப் பார்க்கும்போதெல்லாம் அந்த நினைவுகளைப் பசுமையாக்கி அனுபவித்துக் கொண்டிருப்பாள். இப்போதும் அவள் மனம் அதைத்தான் செய்து கொண்டிருந்தது.

வெளியே விடிந்து கொண்டிருந்தது. ஒளி இருளை வென்று விட்டது. என்றாலும் பாலமும் பரந்த மணற்காடும் பூங்காவனத்தின் பார்வையிலிருந்தே மறைந்து விட்டன. புடவைத் தலைப்பால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டே எழுந்து உட்கார்ந்தாள்.

அப்போதுதான் உள்ளே வந்த அண்ணாமலை அவள் அழுது ஓய்ந்திருப்பதை அறிந்து கொண்டான். சில நிமிஷங்கள் பேசாமல் இருந்து விட்டு, ''கெடக்கு. வேறே பொளைப்பைப் பார்த்துக்கிடலாம். மந்திரியைப் பார்த்துட்டு அப்படியே ரயிலடிக்குப் போய்விடலாம்'' என்றான்.

''கண்டிராக்டர் ஐயாகிட்டே ஊருக்குப் போறேன்னு சொல்லிட்டியா?''

''அவரே என்னைக் கூப்பிட்டு வடக்கே போறதுக்கு ஒன்பது மணிக்கு வண்டி இருக்கு. மூட்டை முடிச்சைக் கட்டிக்கிட்டுப் போகிறதுக்குச் சரியாயிருக்கும், போய்விட்டு வா என்று சொல்லிவிட்டாரு.''

''கடைசிக் கடைசின்னு எவ்வளவு கூலி கொடுத்தாரு?''

''கடைசிக் கூலின்னு ஒரு கூலி கொடுத்தாரு! வழக்கம்போலத்தான் ஒண்ணேகால் ரூபாய் இரவு வேலைக்கு என்றுகொடுத்தாரு.''

''விடிஞ்சி இந்நேரம் வேலை செய்துவிட்டு வெறுங்கையோடத்தான் வந்தியா?''

''இன்னிக்கு எங்கே புள்ளே வேலை செஞ்சேன்? இன்னுந்தான் சூரியன் எழும்பலியே?''

''சூரியன் எழும்பலியா, மானந்தான் மப்பாயிருக்குது.''

''சீ, சனுதே! என்னமோ கவலையா யிருக்கே என்று கேட்கிறதுக்கெல்லாம் படுக்க பதில் சொன்னால், மேலே மேலே போறியே. இத்தனை வருசம் சோறு போட்ட மனுசங்கிட்டே இப்படியெல்லாமா கஞ்சத்தனமாகக் கணக்கு போடறது?''

பூங்காவனம் அடங்கி விட்டாள். மூட்டை கட்டும் வேலையில் இருவரும் ஈடுபட்டனர்.

தலையில் மூட்டையுடன் முன்னே புறப்பட்டுப்போன அண்ணாமலை திரும்பிப் பார்த்தான். பூங்காவனம் மூங்கில் படலை இழுத்து வைத்துக் குடிசையின் முன் வாசலை மூடிக்



கொண்டிருந்தான். "அட, அதை ஏன் மூடுகிறே? இன்னும் சிறிது நேரத்திலே கூரையைப் பிரிச்சி வண்டியிலே ஏற்றப்போறாங்க" என்று சொல்லிக் கொண்டே நடந்தான். அது பூங்காவனத்துக்கும் தெரியும். இருந்தாலும் மூடிவிட்டு வந்தாள். அது அவள் வீடு.

அந்தப் படுகைக் கரையில் அவ்வளவு பெரிய கூட்டத்தை அவள் பார்த்ததே கிடையாது. இதற்குமுன் திறப்பு விழாவை வேடிக்கை பார்க்க வந்த ஜனக்கூட்டம் பந்தல் நிறைந்திருந்தது. போலீசார் ஜனக் கூட்டத்தை ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்தார்கள். ஜனக் கூட்டத்தில் அலைக்கழிந்து கொண்டிருந்த அண்ணாமலையும் பூங்காவனமும் அலங்கரிக்கப்பட்டிருந்த மேடைக்கருகிலேயே தள்ளிக் கொண்டு போகப்பட்டார்கள். அதற்குள் விதம்விதமான கார்கள் வந்து நின்றன. அதற்குள்ளிருந்து விதம் விதமான மனிதர்கள் இறங்கினார்கள். அதன் பிறகு இருந்த இடத்தை விட்டு யாரும் நகர முடியவில்லை. அங்கிருந்தபடியே நடப்பதை யெல்லாம் கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

பூங்காவனத்துக்குத் தெரியாத யார் யாரோ பேசினார்கள். ஆனால் அவர்கள் பேசினவை யெல்லாம் பூங்காவனத்துக்குத் தெரிந்த விஷயந்தான். இந்தப் பாலம் கட்டுவதில் தாங்கள் பட்ட கஷ்டங்களைப்பற்றிச் சொன்னார்கள்! அதைக் கேட்டவுடன் பூங்காவனத்துக்கு வாய்விட்டுச் சிரிக்க வேண்டும் போலிருந்தது. அங்கு நிலவிய அமைதியைக் கண்டு பயந்து, சிரிப்பை அடக்கிக் கொண்டாள். ஏனென்றால் அவர்கள் பாலம் கட்டியதிலுள்ள கஷ்டத்தைச் சொல்லாமல் அதற்கு வேண்டிய தளவாடங்களையும், இயந்திர சாதனங்களையும் அங்கு கொண்டு வந்து சேர்த்ததிலிருந்த கஷ்டத்தைத்தான் சொன்னார்கள். யாருக்குமே பாலம் கட்டுவதிலுள்ள கஷ்டம் தெரியவில்லையே என்ற அங்கலாய்ப்போடு அண்ணாமலையை ஏறெடுத்துப் பார்த்தாள். அவன் அந்த மேடையின்மீது பதித்த கண்களை நகர்த்தாமல் இருந்தான்!

அடுத்தபடியாக, பாலம் கட்டுவதை மேல் பார்த்துக் கொண்டிருந்த மூன்று வெள்ளைக் காரர்களுக்கு மாலை போட்டு, 'அவர்கள்தான் இந்தப் பாலம் கட்டிக்கொடுத்தார்கள்' என்று புகழ்ந்து பேசினார்கள். பூங்காவனம் கீழே குனிந்து மண்ணைக் கிளறினாள். 'இந்தத் தொரெங்கே வெள்ளைக்காரன் சீமையிலிருந்து கடல் தாண்டி வந்திருக்காங்க' என்று முதல் முதலிலே கேள்விப்பட்டபோது 'வெள்ளைக் காரன் சீமையிலேயும் மழையில்லை போலும், பாவம்! ரொம்பத் தொலை வந்திருக்காங்க' என்று பூங்காவனம் பரிதாபப்பட்டாள். ஒரு சட்டி மண்ணோ கலவையோ சுமக்காத அவர்களைக் கண்டிராக்டர் ஐயா எப்படி வேலைக்கு அமர்த்திக் கொண்டார் என்பதுதான் வெகு நாட்கள் அவளுக்குப் புரியாமல் இருந்தது. ஆனால் இன்று அவர்கள் இந்தப் பாலத்தையே கட்டினார்கள் என்று எல்லோரும் பேசுவதைக் கேட்டுப் பூங்காவனத்துக்கு ஆத்திரம் பொங்கியது. கடைசியில் அது அழுகையாக மாறிய போது யாரும் பார்த்து விடக் கூடாதே என்பதற்காக அவசரம் அவசரமாகக் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

மாலைக்கு மாலை மக்களின் கரகோஷம் வானைப் பிளந்தது. கடைசியாக, கண்டிராக்டர் ஐயாவுக்கு மாலை போட்டபோது அண்ணாமலை ஆவேசமாகக் கைதட்டினான். "ஏன் இப்படிப் பேயாட்டமா அடிச்சிக்கிடறே? சும்மாயிரு" என்றாள் பூங்காவனம். "நாலு வருஷம் சோறு போட்ட மவராசன்" என்று முணுமுணுத்தான் அண்ணாமலை. அவளும் அதிலிருந்த நியாயத்தை ஒப்புக் கொண்டவள் போல அதன் பிறகு பேசாமலிருந்து விட்டாள். கரகோஷம் ஓய்வதற்குள் மந்திரி காரில் ஏறிக் கொண்டார். அது பாலத்தின் மீது ஊர்ந்து சென்றது. அதையே பின்பற்றி அங்கிருந்த அத்தனை கார்களும் நகர்ந்தன.

வேடிக்கை பார்க்க வந்தவர்களும் முதன் முறையாகப் பாலத்தின்மீது நடந்து சென்றார்கள்! அண்ணாமலையும் பூங்காவனமும் மட்டும் உட்கார்ந்திருந்த இடத்திலேயே எழுந்து நின்று கொண்டிருந்தார்கள். மற்றவர்களெல்லாம் பகைமையான அக்கரையை நோக்கி நடந்து கொண்டிருந்தார்கள். "நாடு முன்னேறுகிறது" என்ற வார்த்தைகள் சற்று முன்புதான் பூங்காவனத்தின் காதில் நாலைந்து முறை விழுந்திருந்தன. அதனால், தன்னை மட்டும் நகரவிடாமல் செய்துவிட்டு மற்றவர்களெல்லாம் முன்னேறுகிறார்கள் என்று கற்பனை செய்து கொண்டோ என்னமோ, பிரமை பிடித்தவள் போல் பூங்காவனம் இருந்த இடத்தில் நின்று கொண்டிருந்தாள்.

"இந்தா, பாரு. ஏன் இப்படி மலைத்துப் போயிருக்கே? ரயிலுக்கு நேரமாவுது. மரம் வைச்சவன் தண்ணீர் ஊத்துவான். வா, போகலாம்" என்றான் அண்ணாமலை. பூங்காவனம் நின்ற இடத்திலிருந்து அசையவில்லை. அழுது சிவந்து போன கண்களால் அவனை வெறிக்கப் பார்த்துவிட்டு, "அது கிடக்கட்டும், நீயாவது உள்ளதைச் சொல்லு. இந்தப் பாலத்தைக் கட்டினது யாரு?" என்று கேட்டாள்.

"என்ன புள்ளே, பித்துப் பிடிச்சாப்போலப் பேசறே? நம்ம கண்டிராக்டர் ஐயாதான் கட்டினாரு" என்று அண்ணாமலையின் தீர்க்கமான பதிலைக் கேட்டதும், பூங்காவனத்தின் கண்களுக்கு முன்னால் இந்தப் புவனமே வேகமாகச் சுழன்றது!


டைரக்டர்: ஸ்ரீ யோகிராஜ் உபேந்த்ரசர்த்ரஜி

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 59. பருவமானிகள்

அண்ணா! அண்ணீ! இன்றைக்குத் தானே. 'அ...சுக்'?

அ: என்னடா இன்றைக்கு?

த: இன்றைக்குத் தானே 'அ சு க்' அவுங்க வரப்போறாங்க 'அசுக்'?

அ: எவுங்கடா, தம்பீ?

த: நம்ம குழந்தையை... 'அசச்சுக்' பெண் பார்த்துப் பரிசம் போடப் பட்டணத்தாருங்க......'அசுக்' வரப் போறாங்க?

அ: ஆமாம். இன்றைக்குத்தான் வரப் போகிறாங்க.

த: அப்படியானால் நான்... அசுக் ... இன்றையப் பொழுதுக்குப் பக்கத்து ஊருக்குப் போய்விட்டு 'அசுக்' நாளைக் குக் காலையில் திரும்பி வருகிறேன்.

அண்ணி: என்னுங்க தம்பி! நாலு பேரு பெண் பார்க்க வருகிறபொழுது, பரிசம் போடுகிற நாளு நீங்க ஊரை விட்டுப் போகிறேன் என்கிறீங்களே! உங்கள் அண்ணாச்சி தனியா இருந்துக் கிட்டு என்ன செய்வாரு?

தம்பி: நானு என்னத்தே செய்யட் டும் 'அச்சுக்' அண்ணீ! உங்கள் வவுத் திலே பொறந்த பிள்ளைதான்; ஆனால் என் மடிமேலே வளந்த பிள்ளை. என்ன செய்கிறது? 'அச்சுக்'...நான் இன்றையப்பொழுது... 'அச்சுக்' இங்கே நிற்க முடியாது ....... 'அசுக்'....... புதுப் பாக்கத்துக்குப் போய்த்தான் ஆகணும் அண்ணீ! 'அச்ச்சுக்'.

அண்ணி: அப்படி என்னுங்க தம்பீ! புதுப்பாக்கத்திலே சோலி? நாளைக்கு வெச்சுக்குங்க......

தம்பி: இல் 'அச்ச்சுக்'லிங்க, அண்ணீ! நான்தான் 'அச்சுக்' ஒரு பருவமானி யாச்சே? 'அச்சுக்' ... நல்ல விசயம் 'அச்ச்சுக்' நடக்கிற நேரத்திலே....நானு இருக்கப்படாதுங்க...'அச்சுக்'...

அண்ணி அண்ணன் முகத்தைப் பார்த் தாள். அண்ணன் அண்ணி முகத்தைப் பார்த்தான். இருவரும் தம்பி முகத் தைப் பார்த்தார்கள்!

ஆமாம், தம்பி ஒரு பருவமானிதான். வானத்தில் எங்கேயாவது ஒரு மூலையில் சந்தேகத்துக்குச் சிறிது மேகம் ஏற்பட் டால் போதும், உடனே தம்பியின் மூக்கு ஒரு குற்றாலம் நீர்வீழ்ச்சியாக மாறும். அத்துடன் 'அசுக், அசுக்' என்று தும்மல்கள். இந்தத் தும்மல் அடுக்கு அடுக்காய் வரும். துரிதத்தில் இரண்டு மூன்று சில சமயங்களில் 'டெலிஸ்கோப்' ஆகி விடுவதும் உண்டு.

வெய்யில் காலமா? சரி. வியர்வை அதிகம். அதையொட்டி மார்ச்சளி— அதையொட்டி மூக்கு ஒழுக்கு — அதை யொட்டித் தொடர்த் தும்மல்.

மழைக்காலம் பனிக் காலங்களில் கேட்க வேணுமா? தம்பியை அடுத்தவர் யாவருக்கும் அவன் தொடர்த் தும்ம லைப்பற்றியும் தெரியும். அதிகம் சொல் வானேன்? தம்பிக்குப் 'பருவமானி' என்ற ஒரு பெயரிடப்பட்டது, அவனை யறிந்த வட்டாரங்களில்.

அட! இப்படியும் ஒரு அதிசயமா? பருவ மாற்றத்தின் காரணமாக ஜல தோஷம்-[தடுமன்] சளி,இருமல்,தும்மல் இவை ஏற்படுவது சகஜம்தான். ஆனால் வருஷம் 360 நாட்களும் ஓயாத — மாளாத — தீராத தடுமனும், சளியும், தும்மலும் ஒருவருக்கு இருக்குமானால் அதற்குக் காரணம் என்னவாகலாம்? பருவங்கள்தான் என்று சொல்வது முற் றும் பொருந்தாது. இவருடைய சரீரத் திலேயே ஏதோ குறையும் குற்றமும் இருக்க வேணுமென்பது தெளிவாகிறது.

அப்படி, இந்தத் தொடர்த் தும்மலுக் குக் காரணமாகப் பருவமானிகளின் சரீரத்தில் இருக்கும் குறையும் குற்ற மும் என்ன? அதுதான் அவரிடமுள்ள சகிப்புத்தன்மையின் குறைவு.

இதைச் சகிப்புத்தன்மையின் குறைவு என்பதா? அல்லது சகிப்புத்தன்மையின் விளைவு என்பதா? இதில் எனக்கே ஒரு கலவரம் ஏற்படுகிறது. இவ்விஷயமாக ஒரு சிறிய விளக்கத்தையும் தெரிவிக் கிறேன். பிறகு இது சகிப்புத்தன்மையின் குறைவினால் ஏற்படுகிறதா? அல்லது நிறைவினால் ஏற்படுகிறதா என்பதை நேயர்களே நிச்சயிக்கட்டும்.

சரீரத்தில் ஏதாவது வியாதி ஏற்பட நேரிடும்போது, அந்த வியாதியை ஏற் படாமல் தடுத்து நிறுத்த முயற்சிக்கும் ஒரு சக்தி நம்முள் இருக்கிறது. இதைத் தான் (the power of resistence) சகன சக்தி என்பர்.

வியாதிக்குக் காரணமான தோஷாம் சங்கள் - விஷப் பொருள்கள் - விஷக்கிரு மிகள் முதலியவை எதுவானாலும் சரி, அவற்றை எதிர்த்து இச்சகன சக்தி தீவிரமான போர் தொடுக்கும். வியா தியை அடியோடு தடுக்கச் சாத்திய மில்லாவிடினும் வியாதியைச் சரீரத்தில் பரவ விடாமல் தடுக்கவும், வியாதியின் தீவிரத்தைக் குறைக்கவுமாவது போது மான அளவுக்கு போரைத் தொடர்ந்து

நடத்தும். இதன் குறிகளாக — அல்லது விளைவாகச் சரீரத்தில் சில தடையங்கள் ஏற்படும்.

இவ்வகைப் போராட்டத்தின் விளைவாகச் சுரம் ஏற்படலாம். சளி, தும்மல் இவற்றுடன் மூக்கடைப்பு, பீனசம் ஆகியவை ஏற்படலாம். தொண்டையில் சதை வளர்தல், கழுத்தைச் சுற்றித் தாளின் அடிப்புறத்தில் உள்ள கிரந்திகள் அழற்சியுற்றுப்புடைத்தல் ஆகியவையும் உண்டாகலாம். சில சமயம் காதில் சீழ்கூட வரலாம்.

சுவாசாசய சம்பந்தமான வியாதி ஏற்பட விருக்கும் நேரத்தில் அதைத் தடுத்து நிறுத்த முயற்சிசெய்யும் சகன சக்தியின் போராட்டத்தின் விளைவாக இவை யாவும் ஏற்படுகின்றன. இதனால் சுவாச நாளங்கள், சுவாச கோசம் முதலிய முக்கியமான உட்புற அவயவங்களில் வியாதி பரவாமல் — மேற்புறத்தோடாவது தடுத்து நிறுத்தப்படுவது பெரிய காரியமல்லவா? இவ்வகையில் ஏற்படும் சில குறிகள் — அல்லது விளைவுகளைத்தான் 'தம்பி'யைப் போன்ற 'பருவமானி'களிடம் காண நேரிடுகிறது.

சரீரத்தின் பல்வேறு பாகங்களுக்கும், ஆசயங்[ உறுப்பு ] களுக்கும் வேண்டிய சத்துப்பொருள் உணவு வகைகளைக் கொண்டு சென்று உதவி புரிவது இரத்தம். வியாதியைத் தடுக்கப் போர் புரிவதும் ரத்தந்தான். ரத்தத்திலுள்ள செந்நிற ஜீவாணுக்களும்—ரத்தத்துடன் இரண்டறக் கலந்து நிற்கும் ரஸ தாதுவும் ஊட்டத்துக்கும் உயிர் உய்வதற்கும் அவசியமான சாதனங்களை உடல் முழுவதும் கொண்டு சென்று உதவுகின்றன. ரத்தத்திலிருக்கும் வெண்ணிற ஜீவாணுக்கள்தான் சரீரத்தில் ஏற்படக் கூடிய பல்வேறு வியாதிகளைத் தடுத்து நிறுத்தவும், போக்கவும் கடும் போர் புரிபவையாகும். இவ்வித வெண்ணிற ஜீவாணுக்களில் பலவகை உண்டு. ஒவ்வொரு வகை ரோகத்தைத் தடுக்க ஒவ்வொரு வகை வெண்ணிற ஜீவாணுக்கள் போர் தொடுக்கும். குறிப்பிட்ட ஒரு வியாதியைத் தடுக்கவோ—அவ்வியாதியுடன் போர் தொடுத்து வென்று ஆரோக்கியத்தை நிலைநிறுத்தவோ குறிப்பிட்ட இனத்தைச் சேர்ந்த வெண்ணிற ஜீவாணுக்களுக்குத்தான் சாத்தியமாகும். வியாதியுடன் போர் புரிய வேண்டிய சந்தர்ப்பம் ஏற்படும் காலத்தில் அவ்விதப் போர் புரிவதற்குத் தேவையான மட்டும் குறிப்பிட்ட இனத்தைச் சேர்ந்த வெண்ணிற ஜீவாணுக்களை உற்பத்தி செய்து—தன் படைப்பலத்தை அதிகரித்துக் கொள்ளும் அபூர்வ சக்தியும் நமது சரீரத்துக்கு இருக்கிறது.

முன் சொன்ன தொடர்த் தும்மல், மூக்கடைப்பு, பீனசம், சளி, இருமல், தொண்டையில் சதை வளர்தல், தாளடியில் கிரந்திகள் பருத்தல், காதில் சீழ், சுவாசகாசம் என்னும் ஆஸ்த்மா முதலிய சுவாசாசய சம்பந்தமான வியாதிகளில் இவ்விதம் படைபல விஸ்தரிப்புத் திட்டத்தின்படி 'ஈஸினோபைல்' என்னும் இனத்தைச் சேர்ந்த வெண்ணிற ஜீவாணுக்கள் அதிகரிக்கின்றன.

சாதாரணமான ஆரோக்கிய நிலையில் மற்றுள்ள வெண்ணிற ஜீவாணுக்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, இந்த 'ஈஸினோபைல்' இனத்தைச் சேர்ந்த ஜீவாணுக்கள் 1 முதல் 4 சதவிகிதமாக இருக்கும். வியாதியைத் தடுக்கப் போர் தொடுக்கும் நேரத்தில் இதே ஜீவாணுக்கள் 10-20-30-40 சதவிகிதமென்று அதிகரித்துக் கொண்டே போகும், 60-70 சதவிகிதம் அதிகரித்த நோயாளிகளையும் கண்டிருக்கிறேன்.

இவ்வகையில் அதிகரிக்கும் ஈஸினோபைல் என்னும் ஜீவாணுக்கள் உண்மையில் சரீரமாகிய கோட்டையைப் பாதுகாக்கும் படைகளல்லவா? இதை மறந்து ஒரு சிலர் இந்த ஜீவாணுக்கள்தான் தொடர்த் தும்மல் முதலான ரோகங்களுக்குக் காரணமென்று சொல்லிக்கொண்டு, அவற்றை மாய்த்துக் குறைப்பதற்காகச்சில பாஷாணங்களைச் சரீரத்தில் செலுத்துகின்றனர்.

கார்யகாரண விபாகம் தெரிந்தவர் இவ்விதம் செய்யமாட்டார். கோட்டையைக் காவல் புரியும் படையை நாசமுறச் செய்தால் என்ன ஆகும்? எதிரிகள் சண்டை-பூசல், எதிர்ப்பு-போராட்டம் என்பதில்லாமல் கோட்டையைக் கைப்பற்றுவர். அதேபோல இந்த ஈஸினோபைல் என்னும் இனத்தைச் சேர்ந்த ஜீவாணுக்களை நாசம் செய்யும் மருந்துகளை உபயோகிப்பதால் வியாதி சரீரத்தின் உட்புறமுள்ள ஆசயங்கள் கேந்திரஸ்தானங்கள் ஆகிய இடங்களில் பரவி ஆழ்ந்த வேரூன்றி அல்லலை விளைவிக்கும்.

அவ்வாறின்றி வியாதியுடன் போர் புரியும் சகஜ சக்திக்கு உறுதுணையாக மருந்துகளைக் கொடுப்பதுதான் விவேகம். சகஜ சக்தி என்ன செய்ய முயலுகிறதென்று தெளிந்து அதைச் சாதிக்கும் வண்ணமே நாம் மருந்துகளைக் கொடுத்து ஈஸினோபைல்களின் வேலையைக் குறைக்க வேண்டும். எளிதில் வியாதியுடன் புரியும் போரில் வெற்றியின் குறிகள் ஏற்படுமானால் இந்த ஈஸினோபைல்களின் எண்ணிக்கையும் தாமாகவே குறையும்.

# நீகோ

## கிருமி நாசினி சோப்

## பரிபூரண சரும ஆரோக்கியத்திற்கு

**நீகோ இதர சோப்புகளிலிருந்து முற்றிலும் மாறுபட்டது**

அது உங்கள் சருமத்தைச் சுத்தமாக்குவதுடன், அழகுடன் திகழச் செய்கிறது. சுத்தமான கார்பாலிக் அமிலத்தைவிட முப்பது மடங்கு கிருமிகளைக் கொல்லும் சக்திவாய்ந்ததாக இருப்பதோடு நீகோ சருமத்தைச் சுத்தமாக்கி, முகப்பரு, கரும்புள்ளிகள் போன்ற சரும வியாதிகள் வராமல் தடுக்கின்றது.

பதினான்கு நாட்களுக்கு ஒரு முறை தலைக்கு நீகோ சோப்பு தேய்த்து ஸ்னானம் செய்தால் பொடுகுகள் வராது தடுக்கிறது. நீகோ சோப்பை வழக்கமாகத் தொடர்ந்து உபயோகித்து வந்தால் சருமம் சுத்தமாகவும், பளபளப்பாகவும், ஆரோக்கியமாகவும் இருக்கும்.




நீகோ உபயோகிக்கத் துவக்குங்கள்
சிறந்த சருமப் போஷாக்களிக்கும் சோப்பு
உங்களுக்கும் உங்கள் குடும்பத்தினருக்கும்




பார்க் டேவிஸ் தயாரிப்பு




தபால்காரத் தங்கசாமி வழக்கம்போல் ஒரு கட்டுக் கடிதங்களைக் கொண்டு வந்து கொட்டிவிட்டுப் போனார். சோபாவில் உட்கார்ந்திருந்த சினிமா நட்சத்திரம் மிஸ். கோகிலா தபால்காரரையோ அவர் கொட்டி விட்டுப் போன கடிதக் குவியலையோ ஏறிட்டுக் கூடப் பார்க்கவில்லை. தபால்காரர் அன்போடு தெரிவித்த 'வணக்க'த்துக்கும் அவள் பதிலளிக்கவில்லை.

கடிதங்களையும் தபால்காரரையும் பற்றி நினைத்தவுடனேயே அவளுக்கு அளவு கடந்த வெறுப்பு ஏற்பட்டது. மிஸ். கோகிலாவுக்கு வரும் கடிதங்கள் அத்தனையும் பாராட்டுக் கடிதங்கள்தான். நாள் தவறாமல் விசிறிகள் அவளுக்கு எழுதும் கடிதங்கள் அவை.

எல்லாச் சினிமா நட்சத்திரங்களுக்கும் ஏற்படுகிற தபால் தொல்லைதான் மிஸ். கோகிலாவுக்கும் ஏற்பட்டிருந்தது. ஆனால் ஒரு வித்தியாசம், மற்ற நட்சத்திரங்களைவிட மூன்று மடங்கு தொல்லை ஏற்பட்டிருந்தது அவளுக்கு. மிஸ். கோகிலா, நட்சத்திரமாக ஆவதற்கு முன் ஒரு சிறு தவறு செய்துவிட்டாள். அதன் விளைவுதான் இந்த மும்மடங்கு தொல்லை.

அவள் செய்த சிறு தவறு இதுதான். அவள் நட்சத்திரம் ஆகும் பருவத்தில் - அதாவது திரைப்படங்களில் உபபாத்திரமாக அங்கங்கே தலையைக் காட்டிக் கொண்டிருந்த காலத்தில் சில 'விசிறிகள்' அவள்மீது கடித பாணம் தொடுக்க ஆரம்பித்தனர். அப்பொழுது அவள் அந்தக் கடிதங்களைக் கண்டு மனம் பூரித்து அந்த 'விசிறி'களுக்குப் பதில் கடிதம் எழுதித் தனது நன்றியைத் தெரிவித்திருந்தாள். அதிலிருந்து அவளுக்கு ஏராளமாக 'விசிறி'கள் பெருக ஆரம்பித்து விட்டனர்.

சில விசிறிகள் அந்த நன்றிக் கடிதங்களை 'பிரேம்' போட்டுக்கூட ரகசியமாக வைத்திருந்தார்கள். இன்னும் சில விசிறிகள் அவளுடைய பதில் கடிதங்களை இதயத்திலேயே பதித்துக் கொண்டு செல்லுமிடங்களிலெல்லாம் சொல்லி மகிழ்ந்தார்கள்.

பதில் எழுதியதன் காரணமாகவும், அவள் 'ஸ்புட்னிக்' வேகத்தில் நட்சத்திரமாகி வெள்ளித் திரைகளில் ஒளிவீசத் தொடங்கிய காரணத்தாலும், 'ராக்கெட்' வேகத்தில் 'விசிறி'களின் கடிதங்கள் அவளைத் தொடர்ந்து வந்தன. கடிதங்களின் எண்ணிக்கையும் பத்து மடங்கு, நூறு மடங்கு என்று பெருகிக்கொண்டே போயிற்று. விசிறிகளுக்குப் பதில் எழுதிய தனது தவற்றை உணர்ந்து பதில் எழுதுவதை அடியோடு நிறுத்தி விட்டாள் மிஸ். கோகிலா. ஆனாலும் விசிறிகளின் கடிதங்கள் குவிவது நிற்கவில்லை.

* * *

"அம்மா! அக் கடிதங்களைக் கிழித்துக் கொண்டு போய்க் குப்பைத் தொட்டியில் போட்டு விடட்டுமா?" என்று வழக்கம் போலக் கேட்டாள் கோகிலாவின் வேலைக்காரி. "இதைத் தினமும் கேட்க வேண்டுமா, சுப்புத்தாயி! கொண்டுபோய்க் கிழித்து எறி" என்று எரிந்து விழுந்தாள் மிஸ். கோகிலா. சுப்புத்தாயி கடிதங்களைக் கிழிப்பதற்காக அடுக்கும் போது தன்னையுமறியாமல் மிஸ். கோகிலாவின் பார்வை கடிதங்களின் பக்கம் சென்றது. தினமும் தவறாமல் வரும் அந்த நீல நிறக் கவர் அன்றும் வந்திருந்தது. அது அவள் கண்களில் பட்டதும் தலை சுற்றுவது போலிருந்தது. ஓரங்களில் பொன் முலாம் பூசிய அழகிய நீலநிறக் கவர் அது. இதழ் விரிக்கும் பருவத்திலுள்ள ரோஜா மலரின் படம் ஒன்று கவரின் இடது மூலையில் அற்புதமாகத் தீட்டப்பட்டிருக்கும். இது அவள் பார்த்துப் பார்த்துப் புளித்துப் போன அழகு. புஷ்பக் கடைக்காரனுக்கு ரோஜா மலரின் அழகு தெரியவா செய்கிறது? மலர்களை யாரிடமாவது தள்ளிவிடத்தானே பார்க்கிறான்! அதுபோலத்தான் அந்த அழகிய நீலக் கவரையும் மற்றக் கடிதங்களோடு குப்பைத் தொட்டிக்கு அனுப்பி வந்தாள் மிஸ். கோகிலா.

அந்த நீல நிறக் கவருக்குள் ரோஜா நிறக் கடிதம் ஒன்று இருக்கும். அது இன்னும் பல வர்ணப் பூக்களுடன் விளங்கும். அதன் இடது பக்கத் தலைப்பில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட்டுள்ள மதுரநாயகம் என்ற பெயர் படிப்பவர் கண்களைப் பறித்து விடும். அந்தப் பெயரோடு சேர்ந்த பிரதாபங்கள் ஆறு வரிகளுக்குப் போய் நிற்கும். கொப்பனம்பட்டி மாஜி ஜமீன்தாரின் ஏகபுத்திரனாகவும், பக்கத்து நகரில் இயங்கிவந்த 'சினிமா பார்ப்போர் சங்கம்', 'கலைவளர் கழகம்' முதலானவற்றுக்கும் அவரே தலைவராகவும் இருக்கிறார் என்பதை அந்த ஆறு வரிகள் சுருக்கமாகத் தெரிவித்தன.

ஸ்ரீமான் மதுரநாயகம் மிஸ். கோகிலாவின் புகழைப் பாடுவதற்குப் புதிதாகச் சேர்ந்த இளம் விசிறி. சுமார் ஒரு வருஷ காலத்துக்கு முன்பெல்லாம் அவர் பல சினிமா நட்சத்திரங்களுக்கு அவ்வப்போது பாராட்டுக் கடிதங்கள்

எழுதிக் கொண்டிருந்தார். அவை ஒன்றுக் காவது பதில் வரவில்லை. இவ்வாறு இருக்கை யில் 'கலைவளர் கழக'த்து அங்கத்தினர் ஒருவர் சென்ற வருஷம் மிஸ். கோகிலா தமக்கு எழுதிய பதில் கடிதத்தை ஸ்ரீமான் மதுர நாயகத்தினிடம் காண்பித்தார். அதிலிருந்து தான் ஸ்ரீமான் மதுரநாயகம் ஒரே லட்சியத் துடன் மிஸ். கோகிலாவின்மீது கடித பாணம் தொடுக்க ஆரம்பித்தார். தாமும் மிஸ். கோகிலாவிடமிருந்து ஒரு பதில் கடிதம் பெற்று மகிழ வேண்டுமென்ற ஆவல் அவ ரிடம் கரைபுரண்டோடியது. அதற்கென்றே அவர் தமது தகப்பனுருக்குத் தெரியாமல் ஏராளமான பணச் செல வில் கவர்களும், கடிதத் தாள்களும் அச்சடித்து வைத்துக் கொண்டு தின மும் மிஸ். கோகிலாவுக்குப் பாராட்டுக் கடிதம் எழுதி வந்தார்.

முதன் முதலில் ஸ்ரீமான் மதுரநாயகம் அனுப்பிய கடிதங்களை மிஸ். கோகிலா படித்துப் பார்த்துப் பூரித் ததுண்டு. ஆனால் தினமும் ஒரே மாதிரியாகத் தன் னைப் புகழ்ந்து எழுதிய அந்தக் கடிதத்தின் மீது அசிரத்தை ஏற்பட்டது. நாளாவட்டத்தில் நீல நிறத்தின் மீதே அவளுக்கு ஒருவித வெறுப்பு உண் டாகி விட்டது.



ஸ்ரீமான் மதுரநாயகம் பாராட்டு உரைகளுடன் ஒரு வேண்டுகோளையும் மிஸ். கோகிலா வுக்குக் கடிதத்தின் மூலம் முக்கியமாகத் தெரிவித்துக் கொண்டிருந்தார். தங்க ளுடைய கலைவளர் கழகத்துக்கு மிஸ்.கோகிலா விஜயம் செய்து சங்கத்துக்குக் கௌரவமளிக்க வேண்டும் என்பதுதான் அவர் தினமும் விடுத்து வந்த வேண்டுகோள்.

மிஸ். கோகிலாவுக்குத் துணையாக இருந்த அவளுடைய அண்ணன் சுந்தரமூர்த்திகூட இளைய ஜமீன்தாரின் ஆவலைப் பூர்த்தி செய்ய வேண்டுமென்று தன் தங்கையிடம் பல தடவைகள் சொல்லிப் பார்த்தான்.

''அண்ணு! இன்று ஒரு கழகத்துக்கு நான் விஜயம் செய்தால் நாளை நானூறு கழகங் களுக்கு விஜயம் செய்யும்படி நிர்ப்பந்தம் ஏற்படும். அன்று ஐந்தாறு 'விசிறி'களின் கடிதங்களுக்குப் பதில் எழுதியதன் பலன்களை இப்பொழுது அனுபவித்து வருகிறேன். ஆகையால் 'விசிறி'த் தொல்லையை விரிவடை யச்செய்யாதே'' என்று அவள் கண்டிப்பாகச் சொன்னதன் பேரில் சுந்தரமூர்த்தி சும்மா இருந்தான்.

மிஸ். கோகிலா கடிதங்களைப் பிரித்துப் படிக்காமலே கிழித்துக் குப்பைத் தொட்டியில் போடும் வழக்கத்தை மேற்கொண்டு இப்பொ ழுது ஆறு மாதங்களாயிற்று. ஆனால் தினம் வரும் கடிதங்களின் நடுவே அந்த நீலவண்ணக் கவரும் வந்து கொண்டிருப்பதை அவள் அறிவாள். ஸ்ரீமான் மதுரநாயகம் எப்பொழு தும் போல் தன்னை அங்கு விஜயம் செய்யும்படி கேட்டுக் கொண்டுதான் இன்னும் கடிதம் எழுதிக் கொண்டிருப்பார் என்று மிஸ். கோகிலா நினைத்திருந்தாள்.

ஆனால் கடந்த மூன்று மாதகாலமாக ஸ்ரீமான் மதுரநாயகம் தமது கடிதத்தின் வாசகங்களைச் சிறிது மாற்றிக் கொண் டிருக்கிறார் என்பது அவளுக்குத் தெரியாது. கடிதங்கள்தான் பிரிக்கப்படாமலே கிழித் தெறியப்படுகின்றனவே! இரண்டு மாதங் களுக்குமுன் ஒரே ஒரு நாள் மட்டிலும், அவர் தனக்குக் கடிதம் எழுதவில்லை என்பதும் அவளுக்குத் தெரியாது. அன்று மாஜி பெரிய ஜமீன் தார் மரணமடைந்த தினம். ஆகையால் இளைய ஜமீன்தாருக்குக் கடிதம் எழுத நேரமில்லாமல் போய்விட்டது. மறுநாள் எழுதிய கடிதத்தில் அதற் காக அவர் மன்னிப்புக் கேட்டு எழுதியிருந்தார். அதோடு தமது தந்தை இறந்து விட்டதால், மாஜி ஜமீன்தார் என்ற பதவி தமக்கே வந்து விட்டதாக வும், இனிமேல் தமக்கே சொந்தமாகிவிட்ட விலை உயர்ந்த காரை எடுத்துக் கொண்டு அவர் எங்கே வேண்டுமானாலும் இஷ்டம் போலச் சுற்றலாம் என்பதையும் தெரிவித் திருந்தார்.

அதற்கு மறு நாளிலிருந்து தினமும் அவர் எழுதிய கடிதங்களில் ஒரு புது வேண்டுகோள் இருந்தது. மிஸ். கோகிலாவைத் தாம் நேரில் வந்து காண விரும்புவதாகவும், என் றையதினம், கலைவளர் கழகத்தின் சார்பில் தாம் அவளை வந்து பேட்டி காணலாம் என் பதைத் தெரிவிக்க வேண்டுவதாகவும் தின மும் கடிதம் எழுதிக் கொண்டிருந்தார் ஸ்ரீமான் மதுரநாயகம். இரண்டு மாதங்கள் இடைவிடாமல் எழுதியும் பதில் கிடைக்காத தால், தாமே ஒரு நாளைக் குறிப்பிட்டுத் தமது காரில் அவளுடைய பங்களாவுக்கு வந்து சேருவதாக எழுதி விட்டார்.

* * *

மிஸ். கோகிலா அன்று தற்செயலாகக் கடிதக் குவியலின் சிகரத்திலிருந்த நீல நிறக் கவரைப் பார்த்தாள். அதைப் பிரித்துப் படிக்க வேண்டும் போலிருந்தது. ஸ்ரீமான் மதுரநாயகம் ஆறு மாதங்களுக்கு முன்பு எழுதிக் கொண்டிருந்த அதே வேண்டு கோளைத்தான் இன்னும் எழுதிக் கொண் டிருக்கிறாரா என்று தெரிந்து கொள்ள விரும்பி னாள் அவள். ''சப்புத்தாயி! அந்த நீல நிறக் கவரை மட்டும் இப்படிக் கொண்டு வா'' என்று கட்டளையிட்டாள்.

வேலைக்காரி கடிதத்தைக் கொண்டு வந்து கொடுத்தாள். நெடுநாள் வெறுத்திருந்த

நீலக் கவரின் அழகை ஒரு நிமிஷம் ரசித்து விட்டு அதைக் கிழித்து உள்ளிருந்த கடிதத்தை எடுத்து வாசித்தாள் மிஸ். கோகிலா. அதே சமயம் சுந்தரமூர்த்தி மாடியிலிருந்து இறங்கிக் கொண்டிருந்தான். ''அண்ணா!'' என்று திடுக்கிட்டு அலறினாள் மிஸ். கோகிலா. கடிதத்தைப் படித்துக் கொண்டிருந்தவள் அவ்வாறு அலறியதும் ''லக்ஷ்மணா!'' என்று அலறிய மாயமானின் ஞாபகம்தான் வந்தது சுந்தரமூர்த்திக்கு. கடித பாணம் பட்டு மான் போல் மயங்கிச் சோபாவின் மீது விழுந்து கொண்டிருந்தாள் தங்கை. யாருக்கு என்ன ஆபத்து நேர்ந்து விட்டதோ என்று கவலைப் பட்டுக் கொண்டே தங்கையின் அருகில் வந்தான் அண்ணன்.

''நல்ல வேளை, அண்ணா! கொஞ்சம் தப்பிப் பிழைத்தேன். இந்தக் கடிதத்தை இப்பொழுது நான் தற்செயலாகப் பார்க்கவில்லையென்றால் எனக்கு நாளை ஒரு பெரிய ஆபத்து வந்திருக்கும்!'' என்றாள் மிஸ். கோகிலா.

சுந்தரமூர்த்தி ஒன்றும் புரிந்து கொள்ளாமல், ''திருடர்கள் வருவதைப்பற்றி யாராவது முன்னெச்சரிக்கை செய்திருக்கிறார்களா, கோகிலா?'' என்று கேட்டான்.

''திருடர்களுக்கு இங்கு என்ன இருக்கிறது? நம்முடைய பணமெல்லாம் 'பேங்'கில் கிடக்கிறது; நகைகள் 'ஸ்டூடியோ'வில் பத்திரமாக இருக்கின்றன. அதைப் பற்றியெல்லாம் கவலையில்லை, அண்ணா! இதோ பார். இந்த இளம் ஜமீன்தார் நாளை இங்கே தமது காரில் வந்து என்னைப் பேட்டி காணப் போகிறாராம். அவரிடமிருந்து எப்படியாவது தப்ப வேண்டும்.''

''இதற்கு ஏன், கோகிலா இப்படிப் பயப்படுகிறாய்? வந்து பார்த்து விட்டுப் போகட்டுமே?'' என்று அலட்சியமாகக் கூறி விட்டுக் கடிதத்தை வாங்கிப் படித்தான். ''அடடே! விலை உயர்ந்த புதிய காரில் வரப் போகிறாராம் மாஜி ஜமீன்தாரின் மகன். இதில் என்ன கஷ்டம் உனக்கு?''

''உலகம் தெரியாமல் பேசுகிறாயே, அண்ணா! 'விசிறி'களுக்கு நான் பேட்டியளிக்க ஆரம்பித்து விட்டால் இருபத்து நான்கு மணி நேரமும் பேட்டியளிப்பதுதான் என் வேலையாக இருக்கும். ஆகையினாலே, நாளை அவர் வருவதற்கு முன்னால் நாம் இந்தப் பங்களாவை விட்டு எங்கேயாவது ஓடிப் போய்விட வேண்டும். அதற்கு ஏற்பாடு செய், அண்ணா!'' என்று கூறி முடித்தாள் மிஸ். கோகிலா.

தனது தங்கை பிடிவாதமாக இருக்கும் விஷயங்களில் சுந்தரமூர்த்தி அப்படியே விட்டுக் கொடுத்து விடுவது வழக்கம். ஆகவே மறுநாள் அதிகாலையில் கதவைப் பூட்டிவிட்டு, இருவரும் இன்னொரு 'சினிமா ஸ்டா'ரின் பங்களாவுக்குப் பிறர் அறியாமல் போய் விடுவது என்று தீர்மானமாயிற்று.



கொப்பனம்பட்டியிலிருந்து முதல் நாளே சென்னை நகரத்துக்கு வந்து பெரியதொரு 'லாட்ஜிங்'கில் தங்கியிருந்த ஸ்ரீமான் மதுரநாயகத்துக்கு இரவு முழுவதும் தூக்கமே வரவில்லை. மிஸ். கோகிலாவிடம் இன்னின்ன மாதிரி யெல்லாம் பேச வேண்டும் என்று பாடம் பண்ணிக் கொண்டிருந்தார் அவர். தமது கேள்விகளுக்கு மிஸ். கோகிலா எப்படியெப்படிப் பதில் சொல்வாள் என்பதுவும் அவருடைய கற்பனைக் காதுகளில் அசரீரியாக ஒலித்தது.

கற்பனைவெள்ளத்தில் மூழ்கியிருந்த ஸ்ரீமான் மதுரநாயகம் ''காப்பி, சார்!'' என்ற சத்தத்தைக் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்து வெளியே வந்தார். அவருடைய வேலையாள் காப்பியும் கையுமாக அறையின் வாசலில் நின்று கொண்டிருந்தான். நேரம் நன்றாக விடிந்து விட்டதை எண்ணி ஸ்ரீமான் மதுரநாயகம் வருந்தினார். அவசரம் அவசரமாகக் காப்பியைக் குடித்து விட்டுத் தம்மை அலங்கரித்துக் கொள்ளும் பணியில் ஈடுபட்டார்.

விடாமல் தினமும் கடிதம் எழுதிவரும் தம்மைப் போன்ற ரசிகரைக் காண மிஸ்.கோகிலா ஆவலாகக் காத்திருப்பாளென்றும், மிகவும் அன்போடு வரவேற்று உபசரிப்பாளென்றும் நம்பிக் கொண்டிருந்தது அவருடைய ரசிக உள்ளம். மிஸ். கோகிலாவின் கலையுள்ளம் எப்படிப்பட்ட ஆடையலங்காரங்களைக் கண்டு ரசிக்கும் என்பதை அவரால் தெரிந்துகொள்ள முடியவில்லை. ஆகவே பழமைக்கும் புதுமைக்கும் ஒரு நாகரிகப் பாலத்தைப் போலத் தம்மை அழகுபடுத்திக் கொண்டார். காதுகளில் வைரக்கடுக்கன்கள் மின்ன, விரல்கள் தோறும் மோதிரம் ஜொலிக்க, கழுத்தில் மெல்லிய மைனர் சங்கிலி ஊசலாட, 'ஸில்க் சூட்' அணிந்து கொண்டு காரில் ஏறி உட்கார்ந்தார். கார் மணிக்கு ஐம்பது மைல் வேகத்தில் பறந்தது. காருக்கு முன்னே நூறு மைல் வேகத்தில் பாய்ந்து கொண்டிருந்தது, அவருடைய மனம். நாற்பத்தொன்பது மைல் வேகத்தில் வீதியில் பரிமளித்துக் கொண்டு காரின் பின்னால் சென்றது ரோஜா அத்தரின் மணம்.

மிஸ். கோகிலாவின் பங்களாவுக்கு எதிரில் கார் போய் நின்றதும் அங்கிருந்த காவலாளி ஓடி வந்து அநுதாபத்துடன், ''அம்மா இப்போதான் காரிலே வெளியிலே போனாங்க'' என்று தெரிவித்தான்.

''எங்கே போயிருக்கிறாங்க?'' என்று ஏக்கத்தோடு கேட்டார் ஸ்ரீமான் மதுரநாயகம்.

''எங்கே போனாங்க, எப்பத் திரும்பு வாங்க என்கிற விஷயமெல்லாம் அடியேனுக்குத் தெரியாதுங்க. கார் வந்தால் கேட்டைத் திறக்கணும். கால்நடைகள் வந்தால் விரட்டியடிக்கணும். இதுதானுங்க நம்பளுக்கு வேலை' என்றான் பங்களாக் காவலாளி.

# அறிவிப்பு!

# முற்றிலும் புது மாதிரி

# டெக் டூத் பிரஷ்

## இந்த 3 விசேஷ அம்சங்களைக் கவனியுங்கள்

1 மிருதுவான 'கீட்டன்' முடிகள்
ஈறுகளை புண்ணாக்காமல் பற்களை
சுத்தம் செய்யும்!



2 தேர்ந்தெடுக்க 2 வித தலைப்பாகம்
'ஒவல்' மற்றும் ஷார்ட் 'ஒவல்'
வடிவங்களில் கிடைக்கும்.



3 கைக்கடக்கமான பிடி
விஞ்ஞான முறைப்படி பிரத்தியேக
வடிவம் கொண்டது.








ஸ்ரீமான் மதுரநாயகம் தாம் ஏன் ஜமீன்தாரின் மகனாகப் பிறந்தோம் என்று வருந்தினார். அப்பொழுது அந்தக் காவலாளியாகப் பிறந்திருந்தால் பெயர்பெற்ற சினிமா ஸ்டார் மிஸ். கோகிலாவைத் தினமும் தரிசித்துக் கொண்டிருக்கலாமே என்று எண்ணியது அவருடைய பஞ்சை உள்ளம். அந்த ஏக்கத்தினால் அவர் சோர்ந்து விடவில்லை. மனத்தை உறுதிப்படுத்திக் கொண்டார். மிஸ் கோகிலாவைக் காணாமல் ஊருக்குத் திரும்புவதில்லை என்று தமக்குள்ளேயே தீர்மானம் செய்து கொண்டார். தமது காரை வாசலின் பக்கம் நிறுத்தி விட்டு வேலையாளைச் சாப்பாடு கொண்டு வரும்படி ஏவினார். இரவு எட்டு மணி வரையில் தமது காரிலேயே தங்கியிருந்தார் ஸ்ரீமான் மதுரநாயகம்.

மாலையில் மிஸ். கோகிலாவின் கார் தூரத்தில் வருவதைக்கண்ட காவலாளி 'கேட்'டைத் திறந்தான். ஆனால் தன் பங்களா வாசலில் வேறொரு கார் நிற்பதைக் கண்ட மிஸ். கோகிலாவின் கார் உடனே வேறு பக்கமாகத் திரும்பிப் போய் விட்டது. இதெல்லாம் மதுரநாயகத்துக்குத் தெரியாது. பன்னிரண்டு மணி நேரம் ஓரே இடத்தில் காத்திருந்ததால் சோர்வடைந்து, 'இன்று போய் நாளை வருவோம்' என்று தமது ஜாகைக்குத் திரும்பினார். இரவு முழுவதும் தமது முதல் நாள் தோல்வியைப் பற்றியே எண்ணி யெண்ணி வருத்தப்பட்டார். மறுநாளும் அதிகாலையில் அதே போல் அலங்கரித்துக் கொண்டு மிஸ். கோகிலாவின் பங்களாவுக்குக் காரில் சென்றார். காவலாளி வெளி கேட்டைத் திறந்து விட்டு, "நேற்று ராத்திரி பத்து மணிக்கு மேல் தான்" அம்மா திரும்பி வந்தாங்க. இப்போ உள்ளேதான் இருக்கிறாங்க" என்று புன்முறுவல் பூத்தான். உள்ளத்தில் உவகை பொங்க, ஸ்ரீமான் மதுரநாயகம் தமது காரைப் பங்களாவின் வாசற்படியின் பக்கம் கொண்டு நிறுத்தினார். கதவு சாத்தப்பட்டிருந்தது. உள்ளே தடபுடலாக இரண்டொருவர் நடமாடும் சத்தம் கேட்டது. அவர்கள் ஏதோ மெதுவாகப் பேசிக் கொள்வதும் அவர் காதில் விழுந்தது. தம்மை வரவேற்பதற்கென்று தடபுடலாக உள்ளே ஏற்பாடுகள் நடப்பதாக எண்ணி மகிழ்ந்தார் ஸ்ரீமான் மதுரநாயகம். முதல் நாள் தம்மைச் சந்திக்க முடியாமல் போனதற்கு வருந்தி மிஸ். கோகிலா மன்னிப்பு கேட்கப் போகிறாள் என்றெல்லாம் அவர் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.



பத்து நிமிஷ நேரம் கழிந்தது. இத்தகைய இன்பக் கற்பனைகளில், மிஸ். கோகிலாவின் கார் வெளியே கிளம்பியது. பதினைந்து நிமிஷமாயிற்று. பங்களாவின் கதவு திறக்கப்படும் ஓசை கேட்டது. ஸ்ரீமான் மதுரநாயகம் தடபுடலாகக் காரிலிருந்து இறங்கி வராந்தாவின் பக்கம் போனார். வேலைக்காரக் கிழவி கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தாள். "கோகிலா அம்மா என்னை உள்ளே வரச் சொன்னாங்களா?" என்று கனிவோடு கேட்டார் ஸ்ரீமான் மதுரநாயகம்.

"இல்லீங்களே. அம்மா இப்பத்தான் வெளியே போகுது" என்று கூறினாள் வேலைக்காரக் கிழவி.

"இப்பப் போன காரிலே 'டிரைவர்' மட்டும் தானே இருந்தார்!"

"அம்மா பின்பக்கத்து வாசலில் நின்னுக்கிட்டிருந்தாங்க. வீடுதான் அரை பர்லாங் நீளத்துக்கு இருக்குதே. அதனாலே காரை அங்கிட்டுக் கொண்டு வரச் சொல்லி அப்படியே ஏறிப் போயிட்டாங்க!" என்றாள் கிழவி. இதைக் கேட்டதும் ஸ்ரீமான் மதுரநாயகத்தின் முகம் வாடிக் கருகிய மலர் போலச் சுருங்கிப் போய் விட்டது. இன்றும் போய் நாளை வரலாம் என்று காரில் புறப்பட்டார். 'முயற்சியுடையார் இகழ்ச்சி யடையார்' என்று அவர் சிறு வயதில் படித்த வாசகம் அவருக்கு அப்பொழுது ஞாபகத்துக்கு வந்தது.

அடுத்த நாள் அவருடைய மன உறுதி இன்னும் வலுப்பெற்றது. அன்றும் ஸ்ரீமான் மதுரநாயகம் தமது காரில் சென்று மிஸ். கோகிலாவின் பங்களா வாசற்படியில் காத்துக் கொண்டிருந்தார். முந்தின நாளைப் போலவே பங்களாவின் உள்ளே பேச்சுக் குரலும் அவசரமாக நடமாடும்பாத ஒலிகளும் கேட்டன. காரில் அமர்ந்திருந்த மதுரநாயகத்துக்கு மிஸ். கோகிலாவின் மோட்டார்ஓட்டி' இன்றும் தனியாகக் காரை எடுத்துக் கொண்டு கிளம்பினான். முன்னெச்சரிக்கையோடு காத்திருந்த ஸ்ரீமான் மதுரநாயகம் அந்தக் காரின் பின்னாலேயே தமது காரையும் செலுத்தினார். இரண்டு கார்களும் மிஸ். கோகிலாவின் பங்களாவுக்குப் பின்புறம் வந்து நின்றன.

மிஸ். கோகிலாவின் கார் டிரைவர் பின் வாசல் வழியாக உள்ளே சென்றான். சுமார் அரை மணி நேரமாகியும் அவன் அங்கிருந்து வெளியே வரவில்லை. மிஸ். கோகிலா எப்படியும் தனது காரில் ஏறுவதற்குப் பின் வாசலுக்கு வந்துதானே ஆகவேண்டும் என்று எண்ணிக்கொண்டு தமது காரிலேயே காத்திருந்தார் ஸ்ரீமான் மதுரநாயகம். சற்று நேரத்தில் வேலைக்காரக் கிழவி தலையை நீட்டினாள். ஸ்ரீமான் மதுரநாயகம் அன்போடு அவளைக் கூப்பிட்டு, "அம்மா எப்போ புறப்படுவாங்க?" என்று கேட்டார்.

"அவங்க போயிக் கால் மணி நேரத்துக்கு மேல் ஆவுதே!" என்றாள் கிழவி.




ஸ்ரீமான் மதுரநாயகத்துக்கு ஒன்றும் விளங்கவில்லை. "மோட்டார் இங்கே நிற்கிறதே! மிஸ் கோகிலா எப்படிப் போனாங்க?" என்று கேட்டார்.

"என்ன காரணமோ தெரியலே. வாசல் பக்கம் போய்க்கிட்டிருந்த ஒரு வாடகை மோட்டாரை அமர்த்திக்கிட்டு அண்ணனும் தங்கையும் அவசரமாக எங்கேயோ புறப் பட்டுப் போனாங்க" என்றான். உடனே ஸ்ரீமான் மதுரநாயகம் இன்னும் அதிக மன உறுதியோடு அங்கிருந்து தமது ஜாகைக்குக் கிளம்பினார்.

நான்காவது நாளும் ஸ்ரீமான் மதுரநாயகம் தமது காரில் ஏறிக்கொண்டு மிஸ். கோகிலாவின் பங்களா வாசலில் வந்து நின்றார். வழக்கம் போலவே பரபரப்பான பேச்சுக்களும், தடபுடலான நடை ஒலிகளும் பங்களாவுக்குள் கேட்டன. மிஸ். கோகிலாவின் கார் டிரைவர் காரை எடுத்துக் கொண்டு பின் வாசலுக்குப் போகவில்லை. இது ஸ்ரீமான் மதுரநாயகம் எதிர்பார்த்ததுதான். அரைமணி நேரம் கழித்து, முன் இரண்டு நாட்களும் நடந்தது போலவே வாசல் கதவு திறக்கப்பட்டுக் கிழவியும் தோன்றினாள். ஸ்ரீமான் மதுரநாயகம் கேட்பதற்கு முன்னதாகவே கிழவி "வாடகை மோட்டார் அமர்த்திக்கிட்டுப் பின் வாசல் வழியாக அம்மா வெளியே போயிட்டாங்களே!" என்று கூறினாள்.

இதைக் கேட்டதும் மதுரநாயகம் உற்சாகத்தோடு காரை வேகமாகச் செலுத்திக் கொண்டு, தாம் தங்கியிருந்த ஹோட்டலுக்குச் சென்றார். அவசரம் அவசரமாகப் படியேறித் தமது அறைக்குள் புகுந்தார். அங்கே கண்ட காட்சியினால் அவருடைய உள்ளம் துள்ளிக் குதித்தது. மிஸ். கோகிலாவும் அவளுடைய அண்ணனும் அறையினுள் நாற்காலிகளில் அமர்ந்திருந்தார்கள். அவர்களின் எதிரேயிருந்த மூன்று மேஜைகளில் விருந்து உணவு பரிமாறிக் கொண்டிருந்தார்கள் ஹோட்டல் சிப்பந்திகள். ஸ்ரீமான் மதுரநாயகம் மூன்றாவது நாற்காலியில் போய் அமர்ந்து கொண்டு, "வணக்கம்" என்றார்.

மிஸ். கோகிலாவுக்கு ஒன்றும் புரியவில்லை. ஹோட்டலுக்குச் சென்றதும், அவர்களை மாடி அறைக்கு அழைத்துச் சென்றான் ஒரு வேலையாள். ஒன்றும் உத்தரவிடாமலே விருந்து உணவு பரிமாறுகிறார்கள். புதிதாக வந்தவர் அந்த ஹோட்டலின் சொந்தக்காரராக இருக்கலாம் என்று யூகித்தாள் மிஸ். கோகிலா. தான் இங்கு வந்து விஜயம் செய்திருப்பதை உத்தேசித்து அவர் விசேஷ விருந்தளிக்கிறார் என்று எண்ணிக் கொண்டு, "ரொம்ப நன்றி, சார். ஒரு பழிகார 'விசிறி' நாலு நாட்களாக எங்கள் பங்களாவுக்குப் படையெடுத்து வருகிறார். இப்பொழுதும் எங்கள் பங்களா வாசலில்தான் மோட்டாரோடு காத்துக்கிடக்கிறார். பின் வாசல் வழியாக வந்து தெருவிலே போய்க் கொண்டிருந்த ஒரு வாடகை மோட்டாரிலே ஏறிக் கொண்டு எங்கேயாவது விடச் சொன்னோம். நல்ல வேளையாக அந்த ஆளிடத்திலே இருந்து தப்பி இங்கே வந்து சேர்ந்தோம். இன்றைக்கு முழுவதும் நாங்கள் இங்கேயேதான் தங்கணும். நீங்கள் ரொம்பத் தடபுடலாக எங்களுக்கு விருந்து உபசாரம் பண்ணுறீங்க. உங்களுக்கு மிக மிக நன்றி" என்று கூறினாள்.

ஸ்ரீமான் மதுரநாயகத்துக்குச் சிரிப்பை அடக்க முடியவில்லை. "மிஸ். கோகிலா அவர்களே! நீங்கள் இன்று முழுவதும் இங்கேயே தங்கப் போவது பற்றி நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன் நீங்கள் கூறிய அந்தப் பழிகார 'விசிறி' ஏமாந்து போய் உங்கள் பங்களா வாசலில் காத்துக் கொண்டிருக்கவில்லை. இப்போது உங்களோடு பேசிக் கொண்டிருப்பது அந்தப் பழிகார 'விசிறி'யே தான்!" என்றார் வெற்றிச் சிரிப்போடு.

"ஆ! என்ன? நீங்களா அந்த மதுரநாயகம்?" என்று திரைப்பட நடிப்புக்குரிய ஆச்சரியத்தோடு கேட்டாள் மிஸ். கோகிலா.

"நானேதான் அந்தக் கொப்பளும்பட்டி விசிறி. 'விசிறி'களைப் பக்கத்தில் வரவிடாமல் ஒதுக்குகின்ற உங்களுடைய மனப் போக்கை நான்முதல் நாளே தெரிந்து கொண்டேன். ஆனாலும் உங்களைப் பேட்டி காண வேண்டுமென்ற லட்சியத்தைக் கைவிடவும் மனம் வரவில்லை. அதனால் தான் மூன்று நாட்கள் தோல்விக்குப்பின், இன்று முழு நேரத்துக்கும் ஒரு வாடகை மோட்டாரை அமர்த்தினேன். உங்கள் பங்களாவின் பின்புறத் தெருவில் அதை அங்கு மிங்கும் ஓட்டிக் கொண்டிருக்கும்படி ஏற்பாடுசெய்து விட்டு நான் முன் வாசலில் என் காரோடு வந்து காத்துக் கொண்டிருந்தேன்."

"பலே வேலையாயிருக்குதே! அதனாலே தான் அந்த டிரைவர் வாடகைப் பணம் கூட வேண்டாம்னு சொன்னானோ!"

"நீங்கள் இங்கு வந்தால் உடனே என் அறையில் மூன்று பேருக்கு விருந்து பரிமாறும்படி இந்த ஹோட்டல்காரரிடம் ஏற்பாடு செய்திருந்தேன். அதன்படியே நடந்திருப்பதைப் பற்றி நான் மகிழ்ச்சியடைகிறேன்!" என்றார் ஸ்ரீமான் விசிறி.

ஒரு விசிறி தன்னை இப்படி ஏமாற்றி விட்டதை எண்ணி வருந்திக் கொண்டிருந்த மிஸ் கோகிலா, "ஐயா! விசிறியின் வெற்றியை விருந்துண்டு பாராட்டுகிறேன். ஆனால் எனது தோல்வியைப் பத்திரிகைகளில் விளம்பரப் படுத்த வேண்டாமென்று உங்களை வேண்டிக் கொள்கிறேன்" என்றாள்.

# கல்யாண ரகளை!



ஹோமகுண்டப் புகையில் கண்
எரியாமல் அடிக்க இன்னொரு
பொண்ணுக்கும் சேர்த்து தாலி
கட்ட வெச்சுட்டீரே. உம்ம
பெண்ணுக்கு ஜாதகம் இருந்தா
இந்த மாதிரி அக்ரமம் பண்றீரா?
அநியாயம்! அநியாயம்!




ஓய் பத்தரே! இந்தக் கல்யாணப்பரிசு
மோதிரத்தை உரசிப் பார்த்துச்
சொல்லும்!
இது சவரன் மோதிரம் அல்ல!
இமிடேஷன் கல்
செட் மோதிரம்




மாங்கல்யம் தந்துனானேந
மம ஜீவன ஹேதுனா
கண்டே பத்னாமி
சிரஞ்சீவ சரதஸ்ஸதம்




திருமணப் பதிவு ஆபீஸ்
ஸாரி! மன்னிச்சுக்குங்கோ!
நான் இந்தக் கல்யாணப்-
பதிவு ஆபீஸரையே
ரிஜிஸ்டர் மாரேஜ் பண்ணிக்
கொள்றதா முடிவு செய்து-
-விட்டேன்!




என்.ஜி.ஓ கல்யாணம்!
ஓய்வு ஒழிவு இல்லாத என்.ஜி.ஓ
ஆபீஸுக்குச் சென்று கொண்டே
தாலி கட்டலாம்!




கல்யாண போட்டோ!

# அஜாத சத்ரு



புதுவை எஸ். வரதராஜன்



"சாரதி! ரதத்தைச் சற்று வேகமாகச் செலுத்து" என்று மன்னன் பிம்பிசாரன் உத்தரவிட்டான்.

வெண் குதிரைகள் பூட்டிய அந்த ரதம், ராஜக்கிருகத்திலிருந்து பிரிந்து செல்லும் நீண்ட சாலையில் புயலைப் போல் பறந்து கொண்டிருந்தது. சக்கரங்கள் கடகட வென்று பேரிடியைப் போல் ஒலித்தன. மன்னன் பிம்பிசாரனின் மனத்திலும் ஆயிரமாயிரம் இடிகள் இடித்துக் கொண்டு தான் இருந்தன. அவன் மனம் அமைதியற்றுத் தவித்துக் கொண்டிருந்தது.

வழி நெடுகிலும் இருந்த தேவதாரு மரங்கள் மன்னனின் மனச் சஞ்சலத்தைப் பிரதிபலிப்பதேபோல் அடிக்கடி சலசலத்துக் கொண்டிருந்தன.

"ஹூம்......சீக்கிரம் செலுத்து, சாரதி! மகான் மகாவீரரை நான் தரிசித்தாக வேண்டும்!" என்று துரிதப்படுத்தியவன், சட்டென்று "நிறுத்து! நிறுத்து!" என்று பலமாகக் கத்தினான்.

சற்றுச் சிரமத்துடன் குதிரைகளின் வாரை வேகமாக இழுத்துப் பிடித்து ரதத்தை நிறுத்தினான் சாரதி.

சக்கரங்களின் அச்சு ஒன்று முறிந்துவிட்டது!

செய்வதறியாது பிம்பிசாரன் திகைத்துப் போய் விட்டான். அப்போது 'டொக்...... டொக்...டொக்' என்ற பல ஓசைகள் துரித கதியில் கேட்டன.

"சாரதி! அது என்ன ஓசை?" என்றான் பிம்பிசாரன்.

"யாரோ குதிரைகள்மேல் வருகிறார்கள், பிரபு!" என்றான் சாரதி.

ரதத்திலிருந்தபடியே, தன் பின்னால் பாம்பு போல் வளைந்து செல்லும் நெடுஞ்சாலையைக் கூர்ந்து நோக்கினான் பிம்பிசாரன். மூன்

இரவின் மங்கிய அந்த நிலவொளியிலும், சுமார் ஐம்பது குதிரை வீரர்கள் தன்னை நோக்கி வருவது பிம்பிசாரனுக்குத் தெளிவாகத் தெரிந்தது.

அவனையும் அறியாமலேயே கைவிரல்கள் வாள் உறையின்மீது விளையாடின. அதற்குள் வீரர்கள் அவனைச் சக்கரமாகச் சூழ்ந்து கொண்டார்கள். கறுப்பும் வெள்ளையும் கலந்த உயர்ந்தரகப் புரவியின்மீது மிடுக்குடன் அமர்ந்திருந்தான் ஒரு வாலிபன். அவன் மட்டுமே மன்னனை அலட்சியமாக நெருங்கி வந்தான்.

அந்த வாலிபனை ஒருமுறை கூர்ந்து கவனித்ததுமே, பிம்பிசாரனின் கைவாள் உறையினின்றும் நழுவியது. "ஹா! நீயா?" என்றான் தடுமாறும் குரலில்.

கண்களில் தீப்பொறி பறக்க, "ஏன், எதிர்பார்க்கவில்லையோ?" என்று எக்களிப்புடன் கேட்டுக் கொண்டே, தன் குதிரையைப் பிம்பிசாரனுக்கு அருகில் செலுத்தி, "இந்த வஞ்சகனை இப்போதே கைது செய்யுங்கள்!" என்று உத்தரவிட்டான்.

தளபதிகளும் மற்றவர்களும் கொஞ்சம் தயங்கினார்கள். "ஹூம்! ஆகட்டும். அஜாத சத்ரு உத்தரவிடுகிறேன்!" என்று கர்ஜித்தான். உடனே வீரன் ஒருவன் தன் குதிரையின் சேணத்திலிருந்தும் இரு சங்கிலிகளை எடுத்தான்.

பிம்பிசாரன் உண்மையிலேயே கலங்கி விட்டான். "அஜாத சத்ரு! நீயா இப்படிப் பேசுகிறாய்?" என்றான் கிலி பிடித்த குரலில்.

"ஆமாம். அஜாத சத்ருவேதான் பேசுகிறேன். அவன் இனிமேல் உங்கள் புதல்வனல்ல. விரோதி!"

"அஜாதசத்ரு!" இடியாக முழங்கினான் பிம்பிசாரன்.

"பேசாதீர்கள்!" என்று கர்ஜித்தான் அஜாதசத்ரு. பின்னர் தொடர்ந்து, "கள்ளங் கபடமறியாத என் அன்னையை உயிருடன் கொளுத்த உத்தரவிட்டீர்களே, அதற்குப் பழி வாங்குவதற்குத்தான் அஜாதசத்ரு இப்போது ஓடோடியும் வந்திருக்கிறேன். எந்தக் கரங்கள் அப்படி ஆணையிட்டனவோ, அந்தக் கரங்களை இப்போது விலங்குகள் அலங்கரிக்கப்போகின்றன. தயாராக இருங்கள்!" என்று முழங்கினான்.

"வேண்டாம் அஜாதசத்ரு! பகவான் புத்தரின் காலத்திலா இந்த அநீதியை இழைக்கிறாய்?" என்றான் அரசன் பிம்பிசாரன் பதறிப்போய்.

கடகடவென்று பேய்ச் சிரிப்பு சிரித்தான் அஜாதசத்ரு. "நீதியையும், அநீதியையும் பற்றி நீங்களா பேசுகிறீர்கள்! கேட்பதற்கே வேடிக்கையாகத்தான் இருக்கிறது! எத்தனையோ நாட்கள் தாங்கள் அஹிம்சையையும், தர்மத்தையும் பற்றிச் சித்தார்த்தரின்

காலடியில் இருந்து பாடம் கேட்டீர்கள். ஆனால் வைசாலியின் இளவரசியை உயிருடன் கொளுத்தக் கட்டளையிட்ட போது மட்டும், உங்கள் தர்மோபதேசத்தை ஏன் காற்றில் பறக்க விட்டீர்கள்? மைத்துனர் காகவர்மர் அரசியல் ரீதியில் கொலையுண்டார். ஆனால் அதற்காக எத்தனை மதத் தலைவர்களை வாட்டி வதைத்தீர்கள்? அப்போதெல்லாம் உங்கள் தியாக உணர்ச்சி எங்கே போயிற்று? மன்னரே! உங்கள் அநீதிக்கெல்லாம் ஒரு எல்லை வகுத்து விட்டான் அஜாத சத்ரு!'' என்று கூறிவிட்டுப் பற்களை நறநறவென்று கடித்தான்.

பிம்பிசாரன் ஒன்றும் சொல்லத் தோன்றாமல் தலையைக் கவிழ்த்துக் கொண்டிருந்தான்.

ஒரு விநாடி அங்கே விசித்திரமான அமைதி நிலவியது. பின்னர் தன்னைச் சுற்றிலும் இருந்த வீரர்களைப் பார்த்து, ''ஏன் நின்று கொண்டிருக்கிறீர்கள்? இந்தக் கயவரைச் சங்கிலியால் பிணையுங்கள்!'' என்று மீண்டும் கட்டளை பிறப்பித்தான்.

ராஜக்கிருகத்தை விட்டுச் சுதந்திரமாக வெளி வந்த பறவை, இப்பொழுது கூண்டுக் கிளியாகி விட்டது!

* * *

**ம**கத நாட்டை ஆட்சி புரிந்து வந்தான் மன்னன் பிம்பிசாரன். அவன் தலைநகரம் ராஜக்கிருகம். அவன் ஆட்சியில் மகதம் செழிப்புடன் விளங்கியது. தோள் வலிவு கொண்ட பிம்பிசாரன், கலைப்பித்தனாகவும் இருந்தான். எனவே சிற்பம், சித்திரம், சங்கீதம் போன்ற லலித கலைகள் அவன் ஆட்சியில் செழிப்புடன் வளர்ந்தன.

மகான் மகாவீரரும், கௌதமரும் அடிக்கடி அவன் சபைக்கு விஜயம் செய்து வந்தார்கள். அதனால் பிம்பிசாரனின் மனம் கொஞ்சம் பண்பட்டும் இருந்தது எனலாம். என்றாலும், பெண்கள் விஷயத்தில் மட்டும் பிம்பிசாரன் சபலபுத்தியுடையவனாகவே விளங்கினான். அந்தப்புரத்தில் ஏராளமான பெண்களை அவன் வைத்திருந்தான்.

ஆனால் அவர்கள் எல்லோரையும் விட, பிம்பிசாரனின் இதயத்தை அதிகமாகக் கவர்ந்தவள் செல்லனா தேவிதான். அவள் வைசாலி நாட்டின் இளவரசி. ஒப்பற்ற அழகி. அதோடு சிறந்த குணவதியும் கூட. பட்டத்து மகிஷியான அவளுடன் பிம்பிசாரன் இன்ப வாழ்க்கை நடத்தி வந்தான்.

ஒருநாள் அவர்கள் இன்ப வாழ்க்கையிலே பேரிடி விழத்தான் செய்தது. அந்தப்புரத்தில் உள்ளவர்களில் யாரோ, வேண்டுமென்றே செல்லனா மீது மாசு கற்பித்தார்கள். எதையுமே எளிதில் நம்பி விடும் சுபாவம் கொண்டவன் பிம்பிசாரன். வேண்டுமென்றே கற்பித்த இந்தச் சூழ்ச்சியை யறியாமல் மன்னன் பிம்பிசாரன் மோசம் போய் விட்டான்.

உடனே செல்லனாவின் மாளிகையைக் கொளுத்த உத்தரவிட்டான். செல்லனாவும் மாளிகைக்குள்ளேயே மாண்டு விடுவாள் என்பது அவனுடைய எண்ணம். அந்தக் கோரக் காட்சியைக் காணச் சகியாமல், ரதத்தின் மீதேறி உடனே காட்டுக்குக் கிளம்பி விட்டான். மகதநாட்டின் எல்லைக்குள்ளாகவே மகான் மகாவீரர் தங்கியிருப்பதாகக் கேள்விப் பட்டான். அவரிடம் மன அமைதி பெற வேண்டி, வேகமாகப் போய்க் கொண்டிருந்தான்.

ஆனால் அஜாத சத்ருவுக்கு, பிம்பிசாரனின் சூழ்ச்சி எப்படியோ தெரிந்து விட்டது. அன்னை செல்லனாவை, அவன் ஆபத்திலும் தாமதியாமல் காப்பாற்றினான். இந்தக் கொடிய செயலைச் செய்யத் துணிந்த பிம்பிசாரன்மீது அவனுக்கு அளவிலாத கோபம் ஏற்பட்டது. அரண்மனையில் ஒப்பற்ற அதிகாரம் செலுத்திவந்த அஜாத சத்ரு, படை வீரர்கள் பலருடன் தந்தையைக் கைது செய்ய உடனே கிளம்பி விட்டான்.

* * *

**பி**ம்பிசாரனைச் சிறையில் தள்ளிவிட்டு அஜாதசத்ரு அரியணை ஏறினான். அவனுடைய ஆட்சியில் மகதம் செல்வத்தில் புரண்டது. பக்கத்து நாடுகளான கோசலம், மத்ரம், வைசாலி, அங்கம், காசி போன்ற ராஜ்யங்கள் ஒன்றன்பின் ஒன்றாக மகத நாட்டுக்குள் ஐக்கியமாயின; அதன் எல்லைகள் மேலும் மேலும் விரிவடைந்து கொண்டேயிருந்தன.

விசாலமான தன்னுடைய ராஜ்யத்துக்கு ஒரு புதிய தலைநகரை நிர்மாணிக்க ஆவல் கொண்டான் அஜாத சத்ரு. ஒன்பது மைல் நீளமும், ஒன்றரை மைல் அகலமும் கொண்ட அந்த ஒப்புயர்வற்ற நகரத்தைச் சுற்றி, பலமான கோட்டை எழுப்பினான். எஃகுபோல் வலிமைவாய்ந்த சுவர்கள் பாடலிபுரத்தை வேலி கட்டிக் காத்து நின்றன. வானளாவிய அறுநூற்று நாற்பத்து நான்கு கோபுரங்களுடனும், அநேக வாயில்களுடனும் கூடிய அது இந்திரனின் தலைநகரத்தைப் போல் ஜொலித்துக் கொண்டிருந்தது. ஒவ்வொரு கோபுரத்தின் உச்சியிலும் சிசுநாக வம்சத்தின் வீரக்கொடி கம்பீரமாகப் பறந்துகொண்டிருந்தது.

பாடலிபுரத்தில் எங்கே திரும்பினாலும் கண்ணுக்கினிய காட்சிகளே தென்பட்டன. நீராம்பலும், தாமரையும் கூடிய நீர்த் தடாகங்கள் பலப்பல இருந்தன. நகரின்



அழகுக்கு அணி செய்யும் அவைகளில் ராஜ அன்னங்கள் நீந்தி விளையாடிக் கொண்டிருந்தன : மச்சங்கள் பல ஆங்காங்கே துள்ளிக் கொண்டிருந்தன.

பாடலிபுரத்தின் நடு மையத்தில் கண்டோர் மயங்கும்படியாகத் திகழ்ந்தது அஜாத சத்ருவின் மாளிகை. முற்றிலும் சந்தன மரத்தினாலேயே இழைக்கப்பட்டிருந்த அது, சிற்ப சாஸ்திரத்துக்கே ஒரு கலைக்கூடமாக விளங்கியது எனலாம். அரண்மனையின் தூண்களிலும், கதவுகளிலும் அபூர்வமான வேலைப்பாடுகள் காணப்பட்டன. ஒவ்வொரு வாயில்தோறும் நவரத்தினக் கற்கள் படைத்த சொர்ணக் குருவிகள் ஊசலாடிக் கொண்டிருந்தன. அரசன் நடமாடுமிடங்களிலெல்லாம் யானைத் தந்தமும், தங்கமும், விலை மதிக்க முடியாத கற்களும் மிதிபட்டன.

அஜாத சத்ரு ஆடம்பரத்தில் மிதந்து கொண்டிருந்தான். ஆனால் பிம்பிசாரனோ சிறையில் உண்ண உணவும், குடிக்க நீரும் இன்றித் தவித்துக் கொண்டிருந்தான். கணவனின் உயிருக்காகச் செல்லனா மகனின் முன்பு கண்ணீர்விட்டுக் கதறினாள்; கெஞ்சினாள். ஆனால் அஜாத சத்ரு பிடிவாதமாகவே இருந்துவிட்டான்.



என்றாலும் தாயின் வேண்டுகோளுக்கு இணங்கி, வாரத்தில் ஒரே ஒருநாள் மட்டும் பிம்பிசாரனைச் செல்லனா பார்ப்பதற்கு அனுமதி அளித்திருந்தான். அந்தச் சமயங்களில் மட்டுமே செல்லனா கணவனைச் சிறையில் சந்திப்பாள். அப்போதெல்லாம் ரகசியமாகத் தன்னுடன் கொண்டு வந்துள்ள உணவுப் பொருள்களைக் கணவனுக்கு அவள் அளித்து வந்தாள். அதனால்தானோ என்னவோ, பிம்பிசாரன் சிறையில் உயிரை விடாமலேயே இருந்தான்!

காலம் நகர்ந்துகொண்டே இருந்தது.

* * *

அன்று வைசாக பௌர்ணமி. வானத்தில் முழுமதி பவனி வந்து கொண்டிருந்தான். அவனுடைய குளிர்ந்த கிரணங்களால் வசந்த மண்டபமே சொர்ணாபிஷேகம் செய்துகொண்டதைப்போல் பிரகாசித்தது.

சொல்லிலே வர்ணிக்க முடியாத ஒரு துடிப்பு, அந்த உத்தியானவனத்திலுள்ள ஒவ்வொரு சேதன அசேதனப் பொருள்களிடமும் காணப்பட்டது. புள்ளிமான்கள் பல இங்குமங்குமாகத் துள்ளித் துள்ளி விளையாடிக் கொண்டிருந்தன. வானத்திலே வெண் பஞ்சுக் குவியலைப் போல் காணப்பட்ட சின்னஞ் சிறு மேகக் கூட்டங்களைப் பார்த்து, இரண்டு மயில்கள் கலாபம் விரித்து ஆடின. ராஜ ஹம்சங்கள் ஒன்றன்பின் ஒன்றாக, பொய்கையின் நடுவே இருந்த தாமரை மொட்டைச் சுற்றிலும் போட்டிவிட்டு நீந்திக் கொண்டிருந்தன.

அப்போது தென்றல் சில்லென்று வீசியது. வசந்த மண்டபத்தின் செடிகொடிகளை யெல்லாம் இலேசாக அது அசைத்துவிட்டு ஓடியது. அத்துடன், பொய்கையின் ஓரத்தில் நின்று கொண்டிருந்த சிறுவனின் தலைமயிரையும் கலைத்து விட்டுச் சென்றது. முன் நெற்றியில் வந்து விழுந்த தலைமயிரைத் தன் பிஞ்சு விரல்களால் ஒதுக்கி விட்டுக் கொண்டு, அஜாத சத்ருவைப் பார்த்துச் சிரித்தான் அச்சிறுவன்.

''பாடலி! இதோபார், உன் குறும்புக்காரப் பிள்ளையை! அவன் அப்பாவைப் பார்த்து எப்படிச் சிரிக்கிறான் பார்த்தாயா?'' என்றான் அஜாதசத்ரு பெருமிதத்துடன்.

அதுவரையில் தாமரைப் பொய்கையில் ஏற்பட்டுக் கொண்டிருக்கும் சிற்றலைகளையும், தண்ணீர் வளையங்களையுமே கவனித்துக் கொண்டிருந்த பாடலி, ''என்ன சொன்னீர்கள்?'' என்று கேட்டாள் அஜாதசத்ருவின் பக்கம் திரும்பியவளாய்.

''உன்னுடைய குழந்தையைப் பார் என்றேன்.''

பாடலி குழந்தையின் பக்கம் திரும்பினாள். அவன் தன் கருந் திராட்சை போன்ற விழிகளால் இருவரையும் மலர மலரப் பார்த்து விழித்தான். பிறகு 'களீர்' என்று சிரித்துவிட்டுக் கண்களைப் பொத்திக் கொண்டான்.

அஜாதசத்ரு தன் இரு கரங்களையும் நீட்டி, தன் அருமை மகனை அருகே அழைத்தான். தலையை ஆட்டி அவன் வர மறுத்துவிட்டான்.

''இல்லை; அவன் என்னிடம் தான் வருவான். வேண்டுமானால் பாருங்களேன்!'' என்று கூறிக் கொண்டே இரு கைகளையும் நீட்டி, ''கண்ணே இப்படிவா!'' என்று அழைத்தாள் பாடலி. அக்கணமே, பொன் சதங்கைகள் கிண்கிணி நாதம்போல் ஒலிக்க, தன் சின்னஞ் சிறு பாதங்களைப் பெயர்த்துப் பாடலியிடம் நடந்து வந்தான் சிறுவன்.

அஜாதசத்ருவுக்குச் சற்று மனத்தாங்கல் தான். ''போக்கிரி'' என்று கூறியவண்ணம், மகனின் கன்னத்தை ஆசையாகக் கிள்ளினான். மீண்டும் அஜாத சத்ருவைப் பார்த்துக் குழந்தை சிரித்தான். குழந்தையின் அந்தச்



"காந்தா, உன் திறமைகளைப்பற்றி விசேஷமாக சொல்லுவதற்கில்லை. ஆனால் **டினோபால்** உபயோகப்படுத்தப்பட்ட உன் யூனிஃபாரம், கண்ணைப்பறிக்கும் வெள்ளையுடன் எப்பொழுதும் விளங்குவதால், நீ பிரமோ-ஷனுக்குத் தகுதியானவள்."




"டினோபால்" ஜே. ஆர். கெய்கி, எஸ். ஏ. பாஸல், ஸ்விட்ஸர்லாந்து அவர்களுடைய ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டிரேட் மார்க்.

தயாரிப்பவர்கள்:
ஸுஹ்ருட் கெய்கி பிரைவேட் லிமிடெட், வாடி வாடி, பரோடா
ஏக விநியோகஸ்தர்கள் : ஸுஹ்ருட் கெய்கி டிரேடிங் பிரைவேட் லிமிடெட்
பி.ஓ. பாக்ஸ் 965, பம்பாய்

சிறிதளவு டினோபால், வெள்ளைத் துணிகளை அதி வெண்மையாக்குகிறது.

SISTA'S-SG-44-TAM

போன்: 55074 தந்தி: "RAJWASTE"

# கே. ஏ. ராஜா

**வேஸ்ட் பேப்பர் வியாபாரி**

காரியாலயம்: 64, ஆச்சாரப்பன் தெரு, சென்னை - 1
கிளை: 8, வரதா முத்தியப்பன் தெரு, சென்னை - 1
பிரிக்குமிடம்: 16, புட்டிசாஹிப் தெரு, சென்னை - 1

*கீழ்க்கண்ட ஸ்தாபனத்திற்கு மூலப்பொருள் சப்ளை செய்பவர்கள்:*

**மெஸர்ஸ். ரோடாஸ் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்**

**டால்மியாநகர், பீஹார்**

---

உபயோகமற்ற காகிதங்களை விற்பனை செய்ய விரும்பும் காரியாலயத்தினரும், மற்றவர்களும் எங்களுடன் தொடர்பு கொள்ளலாம்

எமது நியாயமான விலையைக் கருதி எங்களிடம் தொடர்பு கொள்ளுங்கள்

---

# ஓர் பரிபூரண சேவைத் திட்டம்




**பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்**

## நெருப்பு - கப்பல் - விபத்து

**ஆஸ்திகள்: ரூ. 1 கோடிக்கு மேல்**

*தலைமைக் காரியாலயம்:* பாண்டியன் பில்டிங், மதுரை

கிளைகள்: பம்பாய், கல்கத்தா, டெல்லி, சென்னை, நாகபுரி, ஷோலாப்பூர்
ஆமதாபாத், பெங்களூர், திருவனந்தபுரம் கோயம்புத்தூர், கொச்சி

சிரிப்பிலும் ஏதோ பொருள் பொதிந்திருப்பதாகவே அஜாதசத்ருவுக்குத் தோன்றியது.

"பாடலி! உன் குழந்தை ஏன் இப்படி என்னைப் பார்த்துச் சிரிக்கிறான்?" என்று மனைவியைக் கேட்டான்.

இனம் தெரியாத ஒரு புன்முறுவலின் மூலமே விடையிறுத்தாள் பாடலி.

அப்போது வசந்த மண்டபத்தின் சுவர் ஒன்றின்மீது நிழல் விழுந்தது. அஜாத சத்ருவின் கண்களில் அதுபட்டு விடவே, "யார் அங்கே?" என்றான் கடுமையான குரலில்.

"ஏன், நான்தான்; செல்லனாதேவி!" என்று கூறிக்கொண்டே, மல்லிகைக் கொடிப் பந்தலின் கீழே நின்றுகொண்டிருந்த செல்லனாதேவி, சற்று வெளியே வந்தாள். வெண்பட்டுப் புடவை உடுத்திச் சோகத்தின் பிம்பமாக அங்கே நின்று கொண்டிருந்த தாயைக் கண்டதும், "ஓ. நீங்களா? என்ன விசேஷம் அம்மா?" என்றான் அஜாத சத்ரு.

"விசேஷம் ஒன்றுமில்லை, அஜாத சத்ரு! அந்தப்புரத்தில் இருந்து அலுத்து விட்டது. அதற்காகவே வசந்த மண்டபத்தின் பக்கம் வந்தேன். இங்கே நீயும் பாடலியும் நமது சிசுநாக வம்சத்தின் குலக்கொழுந்துடன் விளையாடிக் கொண்டிருப்பதைப் பார்த்தேன். மகிழ்ச்சியின் பூரிப்பில் அப்படியே நின்று விட்டேன்" என்று கூறினாள். அவள் கண்கள் சட்டென்று கலங்கின.

"ஏன் அம்மா கலக்கம்? என்ன நேர்ந்து விட்டது?" என்றான் அஜாதசத்ரு.

"ஒன்றுமில்லை. சொன்னால் நீ அதிரமாட்டாயே?" என்றாள் செல்லனா.

"பரவாயில்லை. சொல்லுங்கள்!"

"இந்தக் காட்சியைக் கண்டு மகிழ உன் அருமைத் தந்தை இங்கு இல்லையே என்றுதான் வருந்துகிறேன்!" என்று கூறிய செல்லனாவின் கண்களிலிருந்தும் கண்ணீர் அருவியாகப் பெருக்கெடுத்து ஓடியது.

அஜாதசத்ருவின் முகம் ஏனோ திடீரென்று மாறி விட்டது. பேச்சை மாற்ற விரும்பியவனாய், "அம்மா, உங்கள் பேரப்பிள்ளை என்னைப் பார்த்து எப்படிச் சிரிக்கிறான் பார்த்தீர்களா?" என்றான்.

செல்லனா நீண்ட பெருமூச்சு விட்டாள். "இப்படித்தான் அஜாதசத்ரு நீயும் ஒரு காலத்தில் உன் தந்தையைப் பார்த்துச் சிரித்தாய். உடனே அவர் தன் மடியின்மேலிருந்த உன்னைத் தூக்கி என்னிடம் நீட்டிக் கொண்டே, 'செல்லனா! உன் மகனின் சிரிப்பைப் பார். கள்ளங்கபடமறியாத இந்த மோகனப் புன்சிரிப்புக்கு, உலகில் எதை ஈடாகக் கொடுக்கலாம் சொல்?' என்று என்னிடம் கேட்டார்."

"நீங்கள் என்ன சொன்னீர்கள்?"

"நான் ஒன்றும் சொல்லத் தோன்றாமல், வானத்தில் மிதந்து கொண்டிருந்த பூர்ண சந்திரனையே பார்த்துக் கொண்டிருந்தேன். அஜாதசத்ரு! அவர் உன்னைப் பற்றி எத்தனையோ இன்பக் கனவுகள் கண்டார். ஆனால் நீ அவைகளைத் தரை மட்டமாக்கி விட்டாய். நீ என் கருவில் இருக்கும்போதே, தன்

## ஜூன் மாதச் சிறுகதைப் போட்டி

1. மாதந்தோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் எழுத்தாளர்கள் எல்லோரும் கலந்து கொள்ளலாம்.

2. எழுத்தாளர்கள் சொந்தமாகவே கதைகள் புனைந்து அனுப்ப வேண்டும். கதைகள் கல்கியில் ஆறு பக்கத்திலிருந்து பத்து பக்கம் வரையில் வெளியிடக் கூடியதாக இருக்கலாம்.

3. ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதப் போட்டிக்கு வந்த கதைகளில் சிறந்ததற்கு நூறு ரூபாய் பரிசு வழங்கப்படும்.

4. ஜூன் மாதப் போட்டிக்கு ஜூன் 1-ந் தேதியிலிருந்து 30-ந்தேதி வரை கதைகள் எழுதி யனுப்பலாம். ஜூன் மாதப் போட்டிக்கு வந்த கதைகள் ஜூலை மாதம் முழுதும் பரிசீலனை செய்யப்படும். பரிசு பெற்ற கதை ஆகஸ்டு மாதத்தில் பிரசுரமாகும். அதேபோல் அந்தந்த மாதக் கதைகள் அடுத்த மாதத்தில் பரிசீலனை செய்யப்பட்டு, அதற்கடுத்த மாதத்தில் பிரசுரமாகும்.

5. கதைகளை நல்ல காகிதத்தில் இடையீடுகள் விட்டு ஒரே பக்கத்தில் எழுத வேண்டும். காகிதத்தின் மறு பக்கத்தில் எழுதக் கூடாது.

6. தேர்ந்தெடுக்கப்படாத கதைகளைத் திரும்பப் பெற விரும்புவோர் அவற்றுடனேயே போதிய தபால் பில்லைகள் வைத்து அனுப்ப வேண்டும். தபால் பில்லைகள் வைத்து அனுப்பாதவற்றைத் திருப்பி யனுப்புவதற்கில்லை.

7. போட்டிக் கதை சம்பந்தமாக எந்தவிதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்வதற்கில்லை.

8. தேர்ந்தெடுத்த கதைகளைத் திருத்துவதற்கும் குறைத்து வெளியிடுவதற்கும் ஆசிரியருக்குப் பூரண உரிமை உண்டு.

— ஆசிரியர், கல்கி

அன்பையெல்லாம் சொரிய ஆரம்பித்தார் உன் தந்தை. நீ பிறப்பதற்கு முன்பே, அவர் மரணத்துக்கு நீயே காரணமாக இருப்பாய் என்று அரண்மனைச் சோதிடர்கள் கூறினார்கள். இருந்தாலும், குழந்தைப் பாசம் அவர் கண்களை மறைத்து விட்டது. ஆனால் நான்தான் பாவி, அஜாத சத்ரு. கணவனின் உயிருக்கு உன்னால் கேடு விளையும் என்றதும், என்னால் அதைத் தாங்கவே முடியவில்லை. உன்னை ஈன்றெடுத்த உடனேயே, என் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டேன். அசோக மரத்தினடியிலே மண்டிக் கிடக்கும் ஒரு புதரின் மேல் உன்னைக் கிடத்தி விட்டு வந்துவிட்டேன்'' என்று கூறியவள், தன் கண்களில் வழிந்த கண்ணீரைத்துடைத்து விட்டுக் கொண்டாள்.

''அப்புறம்?'' என்றான் அஜாதசத்ரு, தன் ஆவலை அடக்க மாட்டாமல். ஏனோ, அவன் கண்கள் மட்டும் இடது கையில் பின்னமாகிப் போயிருந்த தன் விரலையே பார்த்துக் கொண்டிருந்தன.

''உன் தந்தைக்கு எல்லாமே தெரிந்துவிட்டது. அவர் என்னைக் கடிந்து கொண்டார். உன்னைப் புதரில் கிடத்திவிட்ட செய்தி அவர் செவிக்கு எட்டியதும், ராஜ சபையை விட்டு, மந்திரிப் பிரதானிகள் பின் தொடர அசோக மரத்தடிக்கு ஓடோடியும் வந்தார். அதற்குள் அரண்மனை வேட்டை நாய் ஒன்று, உன்மீது விழுந்து விரலில் ஒன்றைக் கடித்துவிட்டது. உன் தந்தை உன்னை அப்படியே வாரி மார்பில் அணைத்துக்கொண்டார்; உச்சி முகர்ந்தார். ரத்தம் சொட்டிக் கொண்டிருந்த உன் விரலை, அத்தனை பேர் எதிரிலும் தன் வாயில் வைத்துச் சுவைத்து ரத்தத்தை நிறுத்தினார். மேலும்...''

உடனே காலைப் படீரென்று தரையில் அறைந்து, ''அம்மா! ஏன் இதையெல்லாம் எனக்கு முன்பே சொல்லவில்லை?'' என்றான் படபடப்புடன் அஜாத சத்ரு.

''சொல்லியிருப்பேன், அஜாத சத்ரு. ஆனால், அதிகார வெறி பிடித்த உனக்கு இதெல்லாம் ஏறாது என்று நான் சொல்லவில்லை. அஜாத சத்ரு! ஒன்றுமட்டும் சொல்லுகிறேன். கவனமாகக் கேள். இதோ இருக்கிறானே உன் குழந்தை, இவனும் நாளை பெரியவனாவான். அப்போது உன் தந்தைக்கு நீ இழைத்த அநீதியைப் போல், இவனும் உனக்கு இழைக்கமாட்டான் என்பது என்ன நிச்சயம்?'' என்றாள் செல்லனா.

அஜாத சத்ரு சிலையானான்.

''யோசித்துப்பார், அஜாத சத்ரு! பகவான் புத்தர் கூறுவதுபோல், இந்த உலகத்தில் எதுவுமே நிலைத்து நிற்பதில்லை. அன்பு, பகை, பொருள், இன்பம் எல்லாம் பகடைக்காய் களைப்போல் அடிக்கடி மாறிக் கொண்டே இருப்பவை தான். இதற்கு மேல், உனக்கு நான் சொல்லுவதற்கு ஒன்றும் இல்லை'' என்று நிறுத்திவிட்டாள் செல்லனா.

இரும்புத் தூண் போன்ற தன் இரு கரங்களையும் உத்தியானவனத்தின் மேடையின் மீது ஊன்றியவாறு தலைகவிழ்ந்துக் கொண்டிருந்த அஜாதசத்ரு, சட்டென்று தலைநிமிர்ந்தான். கண்ணீரையே கண்டிராத கண்களில் கண்ணீர் விளிம்பு கட்டியிருந்தது. 'அம்மா! நான் மாபெரும் பாவி! இதோ இப்போதே சென்று தந்தையை விடுதலை செய்து விடுகிறேன்'' என்று கூறி, தங்கப் பூண் போட்ட கட்டாரியுடன் வேகமாக நடந்தான்.

''பிரபோ! தங்களைக் காணத் தங்கள் புதல்வர் கட்டாரியுடன் வருகிறார்!'' என்று சிறைக் காவலன் பிம்பிசாரனுக்குத் தெரிவித்தான்.

''யார், அஜாத சத்ருவா? என்னைக் காணக் கட்டாரியுடன் வருகிறானா?'' என்று கூறிய வண்ணம் ஒருகணம் திகைத்து விட்டான் பிம்பிசாரன். பிறகு, ''ஹூம்!'' என்று பெருமூச்சு விட்டவனாய், ''இப்போது எல்லாமே புரிகிறது. அவன் அன்னை செல்லனா சிறையிலே இருக்கும் எனக்குத் திருட்டுத்தனமாக அமுதூட்டி உயிர் கொடுத்து வருகிறாள் அல்லவா? இது அஜாத சத்ருவுக்குத் தெரிந்துவிட்டிருக்கிறது. என்னை நேரிலேயே கொன்று போடுவதற்குத்தான் கட்டாரியுடன் அவன் ஓடோடியும் வருகிறான். இருந்தாலும், அவன் என் புதல்வன். 'தந்தையைக் கொன்றுவிட்டான்' என்ற பழிச் சொல்லுக்கு அவன் ஆளாவதை நானே விரும்பவில்லை!'' என்று கூறிக்கொண்டே தக்க சமயத்தில் உதவுமென்று பக்கத்தில் தயாராக வைத்திருந்த கொடிய விஷத்தை எடுத்து மடமடவென்று குடிக்க ஆரம்பித்து விட்டான் பிம்பிசாரன்!

இருண்டு கிடந்த காராக்கிருகத்தின் வாயிற்காவலர்கள் இருபெரும் தீவட்டிகளை ஏந்திவர அஜாதசத்ரு உள்ளே நுழைந்தான். சிறைக்கூடத்தில் கதவுகளை ஒரு காவலன் திறந்து விட்டான். அஜாதசத்ரு குனிந்து உள்ளே நுழைந்தான். ஒரு முறை கண்களால் தரையை நாற்புறமும் துழாவினான். நரை திரையுடன் பிம்பிசாரன் ஒரு மூலையில் விழுந்து கிடந்தான். தந்தையின் அருகே மண்டியிட்டு உட்கார்ந்த வண்ணம், ''அப்பா!'' என்று மிக மிக வாஞ்சையுடன் அழைத்தான் அஜாத சத்ரு. பிம்பிசாரனிடமிருந்து பதிலே வரவில்லை. தந்தையின் முகத்தை ஊடுருவி நோக்கினான். அதிலே ஒருவித காம்பீர்யமும் பொலிவுமே சுடர் விட்டன. ஆனால் அந்த உடலில் எந்தவிதச் சலனத்தையுமே அஜாத சத்ருவினால் காணமுடியவில்லை!

நொடியில் விஷயத்தைப் புரிந்து கொண்டான் அஜாதசத்ரு. அவன் உடல் பதறியது. ''ஐயோ, அப்பா!'' என்று பாசத்தின் உணர்ச்சியை யெல்லாம் ஒன்று திரட்டித் தந்தையின்மேல் விழுந்து கதறினான்.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam



## அவன் 'ஸான்போரைஸ்ட்' அடையாளமுள்ள துணி மட்டும் வாங்கியிருந்தால்...

**உடம்புக்குப் பொருந்தாதபடி சுருங்கிப்போய் இறுகப் பிடிக்கும் உடைகள் அணிந்து நீங்கள் அவஸ்தைப்பட வேண்டியதில்லை! நீங்கள் பருத்தி துணியோ அல்லது ரெடி மேட் உடைகளோ வாங்கும்பொழுது, அவைகளில் 'ஸான்போரைஸ்ட்' ('Sanforized') அடையாளமிருக்கிறதா வென்று கவனிக்கத் தவறாதீர்கள். இந்த அடையாளமிடப் பட்ட துணிகளில் தைய்த்த உடைகள் அநேக சலவை களுக்குப் பிறகும் உடம்புக்கு பொருந்தாதபடி சுருங்காது!**

**லேபிளில் '*ஸான்போரைஸ்ட*' அடையாளம் இருந்தால் உங்கள் உடைகள் உடம்புக்குப் பொருந்தாதபடி ஒரு பொழுதும் சுருங்காது!**

'ஸான்போரைஸ்ட்' என்ற ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டிரேட் மார்க்கின் சொந்தக்காரர்களான க்ளுயட் பீபடி அண்டு கோ., இன்கார்ப்பரேட்டட் (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ. யில் இணைக்கப் பெற்றது) அவர்களால் இந்த விளம்பரம் வெளியிடப்பட்டுள்ளது. இந்த கம்பெனியின், சுருங்காது என்பதற்கான உயர் நிபந்தனைகளுக்குட்பட்டுத் தயாரிக்கப்படும் துணிகளில் மட்டுமே 'ஸான்போரைஸ்ட்' டிரேட் மார்க் உபயோகிக்க அனுமதிக்கப்படுகிறது.

விபரங்களுக்கு: 'ஸான்போரைஸ்ட்' ஸர்வீஸ்,
95, மெரீன் டிரைவ், பம்பாய்-2

